# கம்பராமாயணத்தில் சைவ வைணவப் பதிவுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**கு.அனுசுயாதேவி**
பதிவு எண் : 1195

**நெறியாளர்**

**முனைவர் சே.கணேசன்**




## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

ஆகஸ்டு - 2020

**முனைவர் சே.கணேசன்**

முதல்வர் (பொ),

இராமசாமி தமிழ்க் கல்லூரி,

காரைக்குடி - 3.

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**“கம்பராமாயணத்தில் சைவ வைணவப் பதிவுகள்”** என்னும் தலைப்பில் கு.அனுசுயாதேவி அவர்கள் முழுநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அவர் அழகப்பா பல்கலைக்கழக இணைவு பெற்ற இராமசாமி தமிழ்க் கல்லூரியில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக இதற்கு முன்வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சே.கணேசன்)**

நெறியாளர்

**கு.அனுசுயாதேவி (பதிவு எண் : 1195)**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003

நாள்:

**ஆய்வாளர் உறுதிமொழி**

**“கம்பராமாயணத்தில் சைவ வைணவப் பதிவுகள்”** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(கு.அனுசுயாதேவி)**

ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்

**முனைவர் சே.கணேசன்**
முதல்வர் (பொ),
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

**"கம்பராமாயணத்தில் சைவ வைணப்பதிவுகள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு செய்ய அனுமதி அளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் நான் படிப்பதற்கு நிலைக்கலனாக அமைந்த இராமசாமி தமிழ்க் கல்லூரிக்கும் என் வணக்கங்களையும் நன்றியினையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னை ஆய்வுலகில் நல்முறைப்படுத்தியும், ஆய்வுகுறித்து அணுகிய போதெல்லாம் அறிவுரைகள் வழங்கி நெறிப்படுத்திய எனது நெறியாளர் முனைவர் சே.கணேசன் இராமசாமி தமிழ்க்கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் என் பணிவான நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வு மேற்கொண்ட காலத்தில் ஆக்கமும், ஊக்கமும் தந்து உற்சாகப்படுத்திய மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு.பாண்டி அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் சு.இராசாராம் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு காலத்தில் பேருதவிகள் செய்து ஆய்வுக்கு வழிப்படுத்திய இராமசாமி தமிழ்க் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் இரா.கீதா அவர்களுக்கும் என் இதயப்பூர்வமான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

என்னை உயர்கல்வி வரை படிக்க வைத்த எனது பெற்றோரான தெய்வத்திரு சுப.குமரப்பன், பானுமதி அவர்களுக்கும் முனைவர் பட்ட படிப்பினை மேற்கொள்ள உறுதுணையாகவும் என் கணவர் இரா. ரவிச்சந்திரன் அவர்களுக்கும் அன்பு மகள் ஸ்ரீமதிக்கும் அன்புத்தோழி வைரலெட்சுமிக்கும் இனிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடன் பயிலும் ஆய்வாளர் நண்பர்களுக்கும் நன்றியை மகிழ்சசியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்விற்கு புத்தகங்களை வழங்கி உதவிய இராமசாமி தமிழ்க் கல்லூரி நூலகத்திற்கும், அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும் எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இந்த ஆய்விற்கு பல வழிகளிலும் உதவிய வ.பாவரசன், பழ.மல்லிகா, பா.திருக்குமரன் அவர்களுக்கும், ஆய்வாளரான திருமதி.மு.இராணி, திருமதி.சுதா, ஆறு.செல்வமணி ஆகியோர்க்கும் கட்டமைப்பு செய்தளித்த தோழா அச்சகத்திற்கும் என் நன்றிகள்.

## சுருக்கக் குறியீடு

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| அயோத்தி | - | அயோத்தியாகாண்டம் |
| ஆரணி | - | ஆரணியாகாண்டம் |
| கம்ப | - | கம்பராமாணம் |
| கிட்கிந்தா | - | கிட்கிந்தாகாண்டம் |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சுந்தர | - | சுந்தரகாண்டம் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நூ | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பரி | - | பரிபாடல் |
| பால | - | பாலகாண்டம் |
| புறம் | - | புறநானூறு |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| மணி | - | மணிமேகலை |

## பொருளடக்கம்


| வ.எண் | இயல் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|---|
| 1. | | முன்னுரை | 1-4 |
| 2. | ஒன்று | கம்பராமாயணத்தில் சைவப்பதிவுகள் | 5-42 |
| 3. | இரண்டு | பாத்திரங்கள் வழி சைவப்பதிவுகள் | 43-92 |
| 4. | மூன்று | கம்பராமாயணத்தில் வைணவப்பதிவுகள் | 93-140 |
| 5. | நான்கு | பாத்திரங்கள் வழி வைணவப்பதிவுகள் | 141-195 |
| 6. | | முடிவுரை | 196-198 |
| 7. | | துணைநூற்பட்டியல் | 199-203 |

# முன்னுரை

நாகரிக வளர்ச்சி பெறத் தொடங்கிய மனிதன் வாழ்க்கைக்கு எண்ணங்களுக்கும் பரந்த நாகரிகத்திற்கும் ஊக்கம் கொடுக்கும் வகையில் அமைந்தவை சமயங்களாகும். சிந்திக்கத் தொடங்கிய மனிதன் நெருப்பைக் கண்டு அஞ்சினான். இதன் தொடர்ச்சியாக இடி, மின்னல், மழை, மரம் என இயற்கைப் பொருள்களை வழி படத் தொடங்கினான். இவ்வாறு தோன்றிய வழிபாடு பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு சமயங்களாக உருப்பெறத் தொடங்கின.

ஒலி எழுப்புதல், சைகை செய்தல் முதலியவற்றின் மூலம் உணர்வுகளை வெளிப்படுத்தி மனிதன் பேசக் கற்றுக் கொண்டதன் மூலம் மொழி தோற்றம் பெற்றது. அதற்கான எழுத்து வடிவம் உருவாகிய நிலையில் இலக்கிய இலக்கணங்கள் தோன்றின.இவை அக்கால மக்களின் வரலாற்றை அறிய ஏதுவாக அமைந்துள்ளன. இவ்வாறான வளர்ச்சியில் பழந்தமிழர்கள் தம் வாழ்வியல் ஆதாரமாய், தமிழரின் இறைப் பண்பைப் போற்றும்வகையில் அமைந்துள்ளன. கம்பராயணத்தில் இரு பெரும் பிரிவான வைதீக, அவைதீக சமயங்களில் சிவனையும் திருமாலையும் முழுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் வைதீக சமயத்தின் சைவ வைணவப் பதிவுகளைப் பற்றி இவ்ஆய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

இந்து சமயத்தின் இருபெரும் பிாவுகளுள் வைதீக சமயத்தின் இருபிரிவான சைவ வைணவ சமயங்களைக் காணும் நோக்கில் ‘‘**கம்பராமாயணத்தில் சைவ வைணவப்பதிவுகள்**’’ என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வுநோக்கம்

தமிழர் சமய மரபானது பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு படிநிலைகளைக் கடந்து வந்துள்ளது. ஒன்பது அல்லது பன்னிரண்டாம் நூற்றாண்டில் மக்களிடம் நிலவிய சைவ வைணவ சமய வழிபாடு பிற

சமயங்களின் வருகையால் மாற்றம் பெற்றது. கம்பராமாயணத்தில் சைவ வைணவசமயத் தொன்மங்கள், தோற்றச்சிறப்புகள், திருப்பெயர்கள், படைக்கலன்கள், வாகனங்கள், அடையாளங்கள், தொழில்கள், புராணச்செய்திகள், பாத்திரங்கள் போன்றவை குறித்துக் காண்பது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

சைவ வைணவப் பதிவுகளை முழுமையாகக் காணும் நிலையில் இவ்ஆய்விற்கு ஆறு காண்டங்களை உள்ளடக்கிய கம்பராமாயணம் முழுமையும் ஆய்வு எல்லையாக அமைகின்றது.

**சான்றாதாரங்கள்**

சைவ வைணவ சமயங்களையும் அவற்றின் உட்கூறுகளையும் எடுத்துரைக்கும் கம்பராமாயணம் முழுமையும் இவ்ஆய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரமாகும். சமயங்கள் குறித்த நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் மற்றும் இணையத் தகவல்கள் இவ்ஆய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**கருதுகோள்**

தமிழர்களின் நம்பிக்கையின் அடிப்படையாகச் செயல்படும் தெய்வநிலை ஒவ்வொரு காலகட்டத்திலும் வெவ்வேறு சமயங்களால் வளர்ச்சிபெற்றது. கம்பராமாயண காலத்தில் பிற சமயங்களை விட சைவ வைணவ சமயங்களின் கொள்கைகளைப் பின்பற்றியிருக்கக் கூடும் என்பது இவ்ஆய்வின் கருதுகோளாகும்

**ஆய்வு அணுகுமுறை**

கம்பராமாயணத்தை விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptrive Approach) பண்டைய தமிழரின் சமயம் தோற்றம், வளர்ச்சி குறித்த படிநிலையை ஆராய்வதால் வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical Approach) சைவ வைணவப்பதிவுகளைப் பகுத்துக் காணும் நிலையில்

உள்ளடக்கப் பகுப்பாய்வியல் அணுகுமுறையும் (Cotent Alaysis) பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

இராய.சொவின் ‘கம்பனும் சிவனும்’, ஆ.கிருட்டிணனின் கம்பன் காணும் திருமால், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பட்ட முனைவர் சங்கீத்ராதாவின் திவ்யப்பிரபந்தம் காட்டும் திருமால் அவதாரங்கள் என்ற ஆய்வும் முனைவர் சு.காந்தித்துரையின் சைவ அந்தாதிகள் என்ற ஆய்வும் கோயம்புத்தூர் பாரதியார் பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பட்ட முனைவர். திருமதி. இரா.மணிமேகலையின் சைவ இலக்கியங்களில் திருவைந்தெழுத்து என்ற ஆய்வும் இவ்ஆய்விற்கு முன்னாய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு பகுப்பு**

கம்பராமாயணத்தில் சைவ வைணவப் பதிவுகள் என்னும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

அவை,

1. **கம்பராமாயணத்தில் சைவப்பதிவுகள்**
2. **பாத்திரங்கள் வழி சைவப்பதிவுகள்**
3. **கம்பராமாயணத்தில் வைணவப்பதிவுகள்**
4. **பாத்திரங்கள் வழி வைணவப்பதிவுகள்**

என்பதாகும்.

**இயல்விளக்கம்**

**‘கம்பராமாயணத்தில் சைவப்பதிவுகள்’** என்னும் முதலாமியலில் சிவபெருமானை முழுமுதற்கடவுளாக வழிபடும் சைவசமயத்தைப் பற்றியும் அவற்றின் தோற்றம், தொன்மங்கள் பற்றியும்,திருப்பெயர்கள், சிவனின்

தோற்றச்சிறப்புகளான சடைமுடி, கங்கை, பிறைநிலா, திருநீறு, முக்கண், முப்புரம் எரித்தல், கறைமிடறு, மாலை, திரிசூலம், நந்தி, நாகஆபரணம், மழுப்படை, சுடலை, புலித்தோல், மான், உமையொருபாகன், உருத்திரன், முருகன், விநாயகர் ஆகிய பதிவுகள் விளக்கப்பட்டுள்ளன.

**'பாத்திரங்கள் வழி சைவப்பதிவுகள்'** என்னும் இரண்டாமியலில் இராவணன், இராமன், விபீடணன் விசுவாமித்திரன், இந்திரசித்,சீதை, சூர்ப்பணகை அனுமன், சடாயு, வாலி, சுக்கிரீவன் முதலிய பாத்திரங்களின் வாயிலாக சிவன் பதிவுகள் புலப்படுத்தப்பட்டுள்ளன.

**'கம்பராமாயணத்தில் வைணவப்பதிவுகள்'** என்னும் மூன்றாமியலில் திருமாலை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் வைணவசமயம் பற்றியும், அவற்றின் தொன்மங்கள், திருப்பெயர்கள், திருமாலின் தோற்றச்சிறப்புகளான கண், தோள்கள், கரங்கள், மார்பு, நிறம், சங்கு, சக்கரம், திருவடி, பாற்கடலில் பள்ளி கொள்ளுதல், திருமகள், தொழில், அவதாரங்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன.

**'பாத்திரங்கள் வழி வைணவப்பதிவுகள்'** என்னும் நான்காமியலில் பிரகலாதன், இரணியன், இராமன், விபீடணன் கும்பகர்ணன் கருடன், சடாயு ஈறாக உள்ள பாத்திரங்கள் வழியாக திருமால் பற்றிய பதிவுகள் தெரிவுபடுத்தப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் இயலுக்குரிய தொகுப்புரை மற்றும் அடிக்குறிப்புகள் தரப்பட்டுள்ளன. இடம் பெற்றுள்ள சுருக்கக் குறியீட்டுக்கான விளக்கங்கள் ஆய்வின் முன் பகுதியில் தரப்பட்டுள்ளன. ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் கொடுக்கப்பட்டு முடிவுரையாக அளிக்கப்படுகின்றன.

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெறுகின்றன.

# இயல் ஒன்று

## கம்பராமாயணத்தில் சைவப்பதிவுகள்

சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவ சமயம் ஆகும். சிவவழிபாட்டினைச் சிவநெறி என்றும் சைவநெறி என்றும் கூறுவர். களப்பிரர் காலத்திற்குப் பிறகு சோழர் ஆட்சியில் கி.பி.,7,8,9 ஆம் நூற்றாண்டுகளில் "ஆலயப்பணியே ஆண்டவன் பணி" என்னும் சிந்தனை வேரூன்றியது. தமிழரின் பழம்பெருஞ்சமயம் "சைவ சமயம்" என்பது தொல்லியல் ஆய்வாளர் தம் கருத்தாகும்.

சிதைவுகளிலிருந்து கண்டெடுக்கப்பட்ட சிந்து வெளிக் காலச் சிவலிங்கங்கள், பசுபதி வழிபாட்டுச் சான்றுகள் இதனை விளக்கும். இச்சிவ வழிபாட்டின் தொன்மையை க.வச்சிரவேல் "**சிந்து வெளியிலுள்ள மொகஞ்சதாரோ என்னும் இடத்தில் சில ஆண்டுகளுக்கு முன் தோண்டி எடுக்கப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சியால் புலனாகும். நாகரிகமும், பண்பாடும் மிக உயர்ந்தவை என்பதையும், அவை இன்றைக்கு 5,000 ஆண்டுகள் முற்பட்ட தொன்மை உடையவை என்பதையும், ஆண்டுக்கிடைத்தப் பொருள்களுள் சிவலிங்கங்களும், யோகவடிவில் அமைந்த தெய்வ உருக்களும் உள்ளன என்பதையும் எல்லாரும் உடன்படுகின்றனர். இதனால் சிவவழிபாடு வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டதென்பது தெளிவு**"[1] என்கிறார்.

அரப்பாவில் கிடைத்த புதைபொருட்களை அறிந்து முதன்மையான அறிக்கை வெளியிட்டவரான சர்ஜான் மார்ஷல் (Sir John Marshal) என்னும் ஆங்கிலேயரும், "**மொகஞ்சதாரோ, ஹரப்பா என்பவை மறைவாக வைத்திருந்து நமக்கு வெளிப்படுத்தும் புது வெளிப்பாடுகள் பலவற்றுள் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது. யாதெனில், சிவநெறியின் வரலாறு கற்காலம் அன்று ஒரு கால் அதனினும் முற்பட்டதொரு காலத்தை எட்டிச் செல்கிறது. அதுபற்றி அந்நெறி உலகத்தில் இஞ்ஞான்று வழக்காற்றில் உள்ள மிகப்பழைய நெறி காலத்து என்னும் கண்டுபிடிப்பே ஆகும்**"[2] என்பர். இவை அறுதியிட்டுக் கூறவியலாச் சிவவழி பாட்டின் காலப் பழமையை விளக்கும்.

சைவசமய வரலாற்றைக் காலமுறைப்படிக் கருதி நோக்குங்கால் கிறித்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சிந்து நதிப் பள்ளதாக்கில் சிறந்து விளங்கிய மொகஞ்சதாரோ, அரப்பா ஆகிய நகரங்களில் வாழ்ந்த மக்களின் சமய வழிபாடு இங்குச் சிறப்பாகக் குறிப்பிடப்பெறுகின்றன.

யோகிகட்கெல்லாம் தலையாய யோகி சிவன் அதனாலேயே அவருக்கு மகாதவசி, மகாயோகி என்னும் பெயர்கள் அமைந்தன என்கிறார் சர்ஜான் மார்ஷல்.

சிந்துசமவெளிக் கடவுளின் தலையில் அமைந்துள்ள கொம்புகள், பிற்காலத்தில் சிவனது சிறப்புத் திருவுருவம் ஒன்றைக் குறிக்கும் நிலையில் மூவிலைச் சூலமாக மாறியது. இவற்றையெல்லாம் நோக்கும்போது, பிற்காலத்தில் சிவனுக்கு அமைந்த அமைப்புகளின் தோற்ற நிலைகள் சிந்துவெளி முத்திரைகளிற் காணப்படுகின்றன. சிந்துவெளி மக்கள் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்திய திருவுருவம் சிவலிங்கங்கள், அரப்பாவில் மட்டும் சிறியனவும், பெரியனவுமாக ஏறக்குறைய ஆயிரம் சிவலிங்கங்கள் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. சைவம் சிவனுடன் சம்பந்தமாவது என்று திருமூலர் கூறுகிறார்.

**“சிவன் என்ற சொல் திராவிட மொழிகளில் உரு என்னும் வேர்ச்சொல்லிலிருந்து பெறப்பட்டது என்று கூறப்படுகிறது. ஆரியர்கள் இக்கடவுளுக்குத் தந்த வடமொழி உரிச்சொல்லாகிய “சிவ” (மங்கலந்தருபவன்) திராவிட மூலச் சொல்லுக்கேற்ற ஒலிவடிவம் கொண்டுள்ளது”**[3] என்பது சர்ஜான் மார்ஷல் கருத்து.

‘கோயில் இல்லாத ஊரில் குடியிருக்கவேண்டாம்’. ‘நீரில்லாத நெற்றி பாழ்’ என்னும் எண்ணம் மக்கள் மனத்தில் ஊன்றப்பட்டது. சைவ சமய எழுச்சியில் கோயில்கள் இலக்கியங்கள் போல சைவமடங்களும் பங்கேற்றன.

**“சிவனுடன் ஒன்றிருப்பதாகிய ஒரு நிலையை எடுத்துக் கூறும் சமய நெறியையே சைவம்”**[4] என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

**“சைவம் சிவனுடன் சம்பந்தமாவது**

**சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்**

**சைவம் சிவம் தனைச் சாராமல் நீங்குதல்**

**சைவம் சிவானந்த ராயுச்சியுமே”**[5]

சிவத்தோடு சேர்ந்திருத்தல் சைவம். சைவம் ஒன்றே சிவனோடு சேர்ந்து முக்தியின்பம் தரவல்லது.

சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களைச் செய்கின்றான்.

சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்களிலும், பத்துப்பாட்டுகளுள் ஒன்றான மதுரைக்காஞ்சியிலும், சிவபிரான் திருக்கோயில் முதலிடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

**“பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**

**ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்**

**நீலமணி நெடியோன் கோயிலிலும்”**[6] **(சிலம்பு.5:162-172)**

**“நுதல்வழி நாட்டத் திறையோன் முதலாகப்**

**பழிவாழ் சதுக்கத்துப் பூதம் ஈறாக”**[7] **(மணி.1:54-55)**

நானிலங்களுக்குரிய தெய்வங்களைச் சுட்டிய தொல்காப்பியர் சிவனை எந்நிலத்துக்கும் உரிய தெய்வமாகக் கூறவில்லை. ஆயினும் உருவ அமைப்பையும் இயல்பையும், தன்மையையும், செயல்களையும் குறிக்கும் வகையில் பல்வேறு பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

**“சைவம் தென்னிந்தியாவின் மிகப்பழைய வரலாற்றுக்கு முற்பட்ட சமயம் ஆகும். அது ஆரியருக்கு முற்பட்ட காலத்தில் இருந்தே வழக்கில் இருந்து வருகிறது”**[8] என்கிறார் ஜி.யு.போப்.

**“மொகஞ்சதாரோவில் தாய் கடவுளோடு, ஆண்கடவுளொன்றின் படிமம் காணக்கிடக்கிறது. வரலாற்றுக் காலத்துச் சிவனுக்கு முற்பட்ட வடிவம் அது என்பதைத் தெளிவாக அறியமுடிகின்றது என்பது மார்ஷலின் கருத்தாகும்.”**[9]

எட்டுத்தொகை நூல்களுள் அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சிவனைப் பற்றி அமைந்துள்ளன. இதன் மூலம் சைவ சமயக் கடவுளான சிவபிரானுக்கு முதலிடம் வழங்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகின்றன.

சைவசமயம் என்பது அறத்தோடு. அன்போடு இயைந்தது. அதனால் அன்பே சிவம், அன்பே கடவுள் என்று அன்பு நெறியின் நுட்பத்தையும், பெருமையும், ஆழத்தையும், நுண்மையும் எடுத்துக்காட்டிச் சைவத்தை வளர்த்துள்ளனர்.

**சைவசமயத்தின் தொன்மை**

இந்திய நாட்டுச் சமயங்களில் தொன்மையும் சிறப்பும் மிக்கது சைவ சமயம். சிந்துநதிப் பள்ளத்தாக்குப் பிரதேசங்களான மொகஞ்சதாரோ, கரப்பா, சன்குடாரோ போன்ற இடங்களில் நிகழ்த்திய அகழ்வாராய்ச்சிகளின் முடிவுகள் சைவத்தின் தொன்மையைத் தெளிவுபடுத்தின.

வேத,உபநிடத காலத்திற்கும் முற்பட்ட பழமை பொருந்திய சமயம் என்னும் சிறப்பைச் சைவம் பெற்றது. சைவசமயக் கடவுளான சிவனைச்

**“முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே”**

என்று, மாணிக்கவாசகர் பாடுவது சைவசமயத்தின் தொன்மைக்குச் சான்றாக அமைகின்றது.

சைவசமயம் மிகப் பழமையானது மட்டுமின்றி பண்டையகாலம் தொட்டே தமிழ் மக்களின் வாழ்வியலோடு இயைந்துவிட்ட சமயநெறியாகும். சிவநெறிச் சார்புடைய வழிபாடும் சமயநெறிகளும் கி.மு.3000க்கு முன்பிருந்தே இந்தியத் துணைக் கண்டத்தின் பல பகுதிகளிலும் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது

**சைவம் தோன்றிய வரலாறு**

சிவ வழிபாடு 10,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.

எகிப்து நாட்டில் இலியடிப் பெருங்காட்டில் சிவன் என்னும் பசுந்தரை ஒன்று உள்ளமையும், கிரேக்க நாட்டின் சியாச் என்னும் கடவுள் பெயர் சிவன் என்பதன் திரிபாகும்.

பாபிலோன் நாட்டில் களிமண் ஏட்டில் சிவன் என்னும் இடப்பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.

மேற்கு ஆசியாவில் ஒருஆண்டில் வரும் மூன்றாவது மாதத்திற்குச் சிவன் என்ற பெயர் உண்டு.

இலங்கையில் சிவன்மலை என்று பழமையான ஒரு மலை உள்ளது. சிவன் என்பது பழமையைக் குறிக்கும். மேற்கு ஆசியா, கிரீசு, ரோம் முதலிய நாடுகளில் சிவிலிங்கம் மீது எண்ணெய் ஊற்றி வழிபடும் மரபு இருந்தது.

சப்பானியர்களிடம் முச்சந்தியில் சிவ வழிபாடு இருந்தது. கிறித்துவ விவலிய மறைநூலில் சிவலிங்கம் பற்றிய குறிப்பு உள்ளது

சிந்துவெளி புதைபொருளாராய்ச்சி மேற்கொண்ட சர்சான் மார்சல் என்பவர் சைவ சமயம் கற்காலத்திற்கு முற்பட்டது என்றும், இப்பொழுது காணப்பெறும் சமயங்கள் அனைத்திற்கும் முற்பட்டது என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார். இவையனைத்தும் சைவ சமயத்தைத் தொன்மைமிக்க சமயம் என அறிந்து கொள்ள உதவும் சான்றுகளாகும்.

**சிவபெருமானின் தோற்றச்சிறப்பு**

முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் பதினெண்கணங்கட்கும் தலைமையுடைய முழுமுதற் கடவுள் சிவபெருமான். அழித்தல் கடவுளும் அவன், எரித்த சாம்பலைத் திருநீறாகப் பூசிக்கொண்டவன். சிவன் பல வடிவங்களைக் காட்டியும், ஒடுக்கியும் எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுபவன். அக்கூத்து கொடுகட்டிக் கூத்து எனப்படும்.

சிவபெருமான் தாழ்ந்த நீண்ட சடையையுடையவன் சடையிலும், மார்பிலும் கொன்றைமாலை அணிந்தவன். முடிமேல் பிறைச் சந்திரனையும், கங்கையையும் சூடியவன். மூன்று கண்களை உடையவன். கழுத்தில் விடக்கறை படிந்தவன். கையில் மழுப்படையும், கபாலமும் ஏந்தியவன் உமாதேவியை உடம்பில் ஒரு பாதியாகவும் கொண்டவன். இடபத்தை வாகனமாகவும், கொடியாகவும் பெற்றவன் ஆலமரத்தடியில் அமர்ந்து அரிய தவம் செய்பவன். இதனை,

**'கார்விடக் களன்உடைக் கணிச்சி வானவன்' (கம்ப.பால.1297)**

**'தேவன் செறிசடைக் கற்றையுள்**

**கோவை மாலை எருக்கொடு கொன்றையின்' (கம்ப.அயோத்தி.645)**

**'துப்புஉறழ் மேனி அண்ணல்**

**மேருவில் குழைய கோளால்**

**முப்புரத்து எய்த கோலே ஒத்தது;' (சுந்த:1183)**

என்ற அடிகள் மூலம் சிவபிரானின் தோற்றப்பொலிவினைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

**"நீலமேனி வாலிழை பாகத்து**

**ஒருவன் இடுதாள நிழற்கீழ்**

**மூவகை உலகமும் முகிர்ந்தன முறையே"**[10]

என்பது ஐங்குறுநூறு கடவுள்வாழ்த்தில் இடம்பெற்றுள்ளது.

**“குழவித் திங்கள் இமையவர் ஏத்த அழகொடு முடித்த அருமைத்து ஆயினும் பெரியோன் தருக திருநுதல் ஆன என”**[11] (சிலப்.2.38-40) என்று மனையறபடுத்தக்காதையில் சிவபெருமானின் திருஉருவம் பற்றிச் சுட்டப்படுகிறது.

**சடைமுடி**

கம்பராமாயணத்தில் சிவன் அடர்ந்த நீண்ட பிறைத்திங்கள் சூடிய சடைத்தொகுதியும், விண்ணிடத்துள்ள அழகிய நீர் கங்கையையும் சிவபெருமான் சூடியுள்ளார். பர்வதராசன் மற்றும் மைனாவதி தம்பதியின் மகளான கங்கை, சிவபெருமானிடம் என்றும் புனிதத்தன்மை உடையவளாகத் திகழ வரம்பெற்றார். இதனால் தேவலோகத்தினைப் புனிதம் செய்ய, இந்திரன் அழைப்பால் தேவலோக நதியாக மாறினாள். பகீரதனின் முன்னோர்கள் சாபம் பெற்றுச் சாம்பலாக இருந்தார்கள். அவர்களுக்கு முக்தி கிடைக்க கங்கை நதி பூமிக்கு வந்தால் மட்டுமே இயலும் என்பதை அறிந்த பகீரதன் கங்கையை நோக்கித் தவமிருந்தார்.

தேவலோகத்திலிருந்து பூமிக்கு வரும்பொழுது எழும் பிராவத்தினைக் கட்டுப்படுத்த சிவபெருமானால் மட்டுமே இயலும் என்று கங்கை கூறியதால், பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து கங்கை பூமிக்கு வரும்பொழுது தடுத்து காத்தருள வேண்டினார். பகீரதன் தவத்தில் மகிழ்ந்த சிவபெருமான் கங்கையைச் சடாமுடியில் தாங்கப் பூமி தாங்கும் அளவில் வெளியிட்டார் சிவபெருமான். இதனால் அவர் கங்காதரன் என்று பெயர் பெற்றார். சிவனின் சடைமுடியானது காட்சியளித்ததை,

**செஞ்சடைக் கடவுள் (கம்ப.பால.467)**

**வானவன் கனகச் சடைவிரித்தால் (கம்ப.பால.715)**

**கற்றைவார் சடையினான் (கம்ப.பால.1137)**

**செறிசடைக் கற்றையுள (கம்ப.அயோத்தி.645)**

**தாழ்சடைக் கடவுள் (கம்ப.கிட்கிந்தை.48)**

**பொன்மௌலி வானவன் (கம்ப.யுத்த.2713)**

எனக் கம்பராமாயணத்தில் சடைமுடியைப் பற்றி சுட்டுகிறார். இதனையே,

**“சிவபெருமான் தாழ்ந்த நீண்ட சடையையுடையவன்”**[12]

என்ற புறநானூற்று அடி மூலம் தாழ்ந்த நீண்ட சடைமுடியினை உடையவன் என்பதை அறியலாம்.

**கங்கை**

பகீரதன் தன் முன்னோர்களின் சாபம் நீங்குவதற்காகக் கங்கையை நோக்கி தவமிருந்தார். தேவலோகத்திலிருந்து பூமிக்கு உலகை அழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வந்த கங்கையின் ஆணவத்தையும், வேகத்தையும் குறைத்து உலகைக் காத்து இன்பத்தை நல்கினார். அதனைக் கட்டுப்படுத்த சிவபெருமானால் மட்டுமே இயலும் என்பதால், சிவனை நோக்கிப்பகீரதன் தவமிருந்ததால், கங்கையைச் சடைமுடியில் தாங்கி, பூமி தாங்கும் அளவில் வெளியிட்டதால்,சிவபெருமான் கங்காதரன் எனப் பெயர் பெற்றான்.

இதனையே,

**வெள்ளம் அணைத்தவன் (கம்ப.பால.778)**

**கங்கைவார் சடையோன் (கம்ப.பால.1014)**

**கங்கைவார் சடைக்கற்றையன் (கம்ப.அயோ.642)**

**இந்துமோலி அன்னானும் இரங்கினால் (கம்ப.அயோ.1084)**

**கங்கைத் திருமுடிச் செங்கணான் (கம்ப.சந்தர.350)**

**தேவன் சென்னி பண்டை நாள் இருந்த கங்கை (கம்ப.யுத்த.545)**

**மணிநீர்க் கங்கை தாங்கினான் (கம்ப.யுத்த.2139)**

என கங்கை நதியைப் பற்றி விவரிக்கிறார் கம்பர்.

சிவபெருமான் திருச்சடையில் வீற்றிருக்கும் கங்கையைப் பற்றி,

**"தணிஉறத் தாங்கிய தனிநிலை சலதாரி**

**மணிமிடற்று அண்ணல்" (பரிபாடல்-9)**

**தேறுநீர் சடைக்கரத்து" (கலித்தொகை கடவுள் வாழ்த்து)**

**"கங்கை முடிகணிந்த கண்ணுதலோன் பாகத்து**

**மங்கை உருவாய் மறை யேத்தவே நிற்பாய்" (சிலம்பு.12:9)**

என இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**பிறை**

தக்கன் புதல்வியராகிய விண்மீன்கள் இருப்பத்தெழுவரையும், மணந்து கொண்ட சந்திரன் அவருள் உரோகிணியின் பால் மட்டுமே பேரன்பு செலுத்துபவனாய் ஏனையோரைப் புறக்கணித்து ஒழுகினான். அதனையறிந்த தக்கன் நீ நாளும் ஒவ்வொரு கலையினையிழந்து தேய்ந்தொழிவாயாக எனச் சந்திரனைச் சபித்துரைத்தான். அச்சாபத்தால் கலையிழந்து தேய்ந்து நலிவுற்ற சந்திரன் சிவபெருமானைச் சரணடைந்தான். அவனது இடரைப் போக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் பிறையானது தேயாதவாறு தனது சடையில் தரித்தருளினார் எனப் புராணம் கூறுகிறது. கம்பராமாயணத்தில் பிறையைப் பற்றிப் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**உயர் சென்னித் துண்டமதி வைத்தவனை (கம்ப.ஆரணி.168)**

**குழந்தை வெண்மதிக் குடுமியன் (கம்ப.சுந்தர.304)**

**நிலவைச் செஞ்சடை வைத்தான் (கம்ப.யுத்த.3217)**

உயர்ந்தனோகிய சிவபெருமான் வெள்ளிய பிறை திங்களைச் சூடிய முடியை உடையவனாக மூன்று இடங்களில் சுட்டப்படுகிறது. இதனையே,

**புதுத் திங்கட் கண்ணியான்**[13] **(கலி.150.17)**

**பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி**[14] **(புறநா.91.5)**

**முதிராத் திங்களோடு சுடருஞ் சென்னி**[15] **(அகநா.கடவுள்வாழ்த்து)**

என்று அடிகள் சிவபெருமான் பிறையினை அணிந்த தோற்றத்தைப் புலப்படுத்தி சைவ சமயத்தின் கருத்தினைப் பதிவு செய்கின்றன.

**திருநீறு**

சைவசமயப் புனித அடையாளமாகத் திருநீறு (விபூதி) சைவர்களால் நெற்றியில் இடப்படுகிறது. இது ஐசுவரியம் என்றும் கூறப்படும். அழிவற்ற செல்வம், இறைவன் என்று பொருள்.

எத்தகையவராக இருந்தாலும், மரணத்திற்குப் பின் இறுதியில் தீயில் வெந்து பிடி சாம்பலாக ஆவர் என்னும் தத்துவத்தை உணர்த்துகிறது. இதுவே எல்லாப் பொருள்களின் உண்மை நிலையாகும். “முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் பிடி சாம்பலாய் வெந்து மண்ணாவது” காண்கிறோம். சைவத்தின் முழுமுதற் கடவுளான சிவனை இது குறிப்பதாகச் சைவர்கள் நம்புகின்றனர்.

திருநீற்றின் சிறப்பைக் கம்பராமாயணத்தில் திருநீறு பூசிய கடவுளாகிய சிவபெருமானின் உடம்பில் அணியும் நல்ல சிறந்த திருநீறு என்பதையே,

**நீறு அணிந்த கடவுள் நிறத்தவான் (கம்ப.பால.13)**

என்று அடிகள் திருநீற்றின் சிறப்பைக் கம்பர் குறிப்பிடுகின்றார்.

**“நீரில்லா நெற்றி பாழ்”** என்கிறார் ஔவையார். **“திருநீற்றை பூசுபவரிடம் தீவினைகள் அண்டா. திருநீறு பூசுவோர் இறைவன் திருவடிகளைச் சேர்வர் என்று திருமூலர் கூறுகிறார்”**[16]

ஞானம் என்னும் நெருப்பில் அனைத்தும் சுட்டெரிக்கப்பட்ட பின் எஞ்சுவது பரிசுத்தமான சிவதத்துவமே என்பதைக் குறிக்கின்றன.

திருமுறைத் திருப்பதிகங்களில் மிகவும் புகழ்பெற்றதும் சிறப்புப் பெற்றதும் திருநீற்றுப்பதிகம், இப்பதிகத்தைப் பாண்டிய வேந்தனுடைய வெப்பு நோயைத் தீர்க்கும பொருட்டுமதுரையையும் பதியிலே பாடியருளினார்.

**"மந்திரமாவது நீ வானவர் மேலது நீறு**

**சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு**

**தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு**

**செந்துவர் வாயுமை பங்கன் திருநீலவாயன் திருநீறு"**[17]

என்ற அடிகள் மூலம், திருநீற்றின் தெய்வீக ஆற்றல் வெளிப்படுகிறது.

திருநீற்றினை நெற்றி நிறையப் பூசி நியமத்துடன் சிவபூசை செய்து பிறவிப் பெருநோயை வென்றவன் மார்க்கண்டேயன். இச்செய்தியைத் திருநாவுக்கரசர்,

**"வெண்ணீறு அணி கிலாதவரைக் கண்டால்**

**அம்மா நாம் அஞ்சுமாறே"**[18]

என்றும்,

திருநீற்றின் சிறப்பை இராமலிங்க அடிகளும்,

**"ஆடற்கினிய நெஞ்சே நீ அஞ்சேல் என்மேல் ஆணை கண்டாய்**

**தேடற்கினிய திருவளிக்கும் சிவாய நம என்றிடு நீறே"**

என்றும்,

**“திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் சமண, பௌத்த சமயங்களை எதிர்த்துப் போர் நடத்திய காலத்திலேயே திருநீறு சைவ சமயத்தின் வைதீகச் சின்னமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. இதற்கு அப்பரும், சம்பந்தரும் படைத்த தேவாரப் பாடல்களில் சான்றுகள் காணப்படுகின்றன. திருநீற்றுப்பதிகம் என ஒரு பதிகமே பாடப்பட்டிருக்கிறது.”**[19] என திருநீற்றின் பெருமையைப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**முக்கண்**

சிவபெருமான் மூன்று கண்களை உடையவன் என்பதால் ‘முக்கட்செல்வன்’ என்று அழைத்தனர். முக்கண்களில் மூன்றாவது கண் நெற்றியில் உள்ளது. சைவசமயத்தின் முழுமுதற்கடவுளான சிவபெருமானின் தனித்துவ அடையாளங்களில் நெற்றிக்கண்ணும் ஒன்றாகும். இதன் காரணமாக நெற்றிக்கண்ணுடையோன் என்று அழைக்கப்படுகிறார். வலக்கண்ணும், இடக் கண்ணும் இவ்வுலகில் இவருடைய நடவடிக்கைகளைக் குறிக்கும். நெற்றியின் நடுவே செங்குத்தாக ஒரு கண் உண்டு.

ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களைக் கண்களாக உடையவன் சிவன். ஆதலின் முக்கண்ணான் என்பது அவருக்குரிய திருப்பெயராயிற்று. மூன்று கண்களுள் வலக்கண் ஞாயிறு, இடக்கண் திங்கள், நடுவேயுள்ளது திருவருவாகிய நெற்றிக் கண்ணாகும். நெற்றிக்கண் இது ஏனைய இரண்டு கண்களைப் போல் நெற்றியின்கீழ் இருபக்கங்களிலும் படுத்த நிலையிலமையாது நிமிர்ந்து நின்ற நிலையில் இருத்தலால், ஏனைய தேவர் கண்களின்றும் வேறுபாடுடையதாய் உயர்ந்து விளங்கும் தன்மையினையுடையதாகும். இதனையே

**கடவுள் நுதல் கிழித்த விழியே (கம்ப.பால.712)**

**இரவி ஆன கண்ணுதல் வானவன் (கம்ப.பால.715)**

**நெற்றி உமிழ் செங்கண் (கம்ப.ஆரணி.158)**

**முக்கண்ணான் (கம்ப.ஆரணி.480)**

**கண்ணின் நோக்குறின் கண்ணுதலாக்கும் (கம்ப.கிட்கிந்தை.736)**

**கண்ணுதல் வழியச் செல்லும் (கம்ப.சுந்தர.26)**

**முக்கண் நோக்கினான் (கம்ப.சுந்தர.235)**

**கங்கைத் திருமுடிச் செங்கணான் (கம்ப.சுந்தர.350)**

**ஓங்கு முக்கண்ணான் (கம்ப.யுத்த.550)**

**முக்கணான் படை (கம்ப.யுத்த.2550)**

**முக்கண் புனிதன் (கம்ப.யுத்த.2692)**

**நெற்றியின் நெருப்புக்கண்ணான் (கம்ப.யுத்த.3125)**

**இமையா முக்கண் (கம்ப.யுத்த.3608)**

**கண்ணுதல் ஒருவனது அடுபடை (கம்ப.யுத்த.3761)**

**முக்கணான் தடவரை எடுத்தோன் (கம்ப.யுத்த.3815)**

**காயும் நெற்றி விழியினன் (கம்ப.யுத்த.4306)**

என்ற அடிகள் மூலம் முக்கண்ணனின் சிறப்பைப் பற்றி இயம்புகிறது.

மன்மதனை அழித்ததும், நக்கீரனைச் சுட்டெரித்ததும் நெற்றிக்கண்ணே. தமிழ்க் கடவுள் முருகனைத் தந்ததும் நெற்றிக்கண்ணே என்று புராணங்கள் கூறுகின்றன.

மதுரை மருதன் இளநாகனார் இதனையே,

**"கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப்**

**பிறைநுதல் விளங்கும் ஒரு கண் போல**

**வேந்து மேம்பட்ட பூந்தார் மாற"**[20]

இறைவனது மூன்று கண்ணனாக நெற்றிக்கண் அறிந்து விளங்குவதைப் போல சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தருள்ளும் மேம்பட்டு விளங்கும் பொலிவு பெற்ற மாலையணிந்த பாண்டியன் என்று உவமையாக புறநானூறுப்ள குறிப்பிடுகின்றது.

இறைவனை முக்கண்ணனாகத் திருவுருவமைத்து வழிபடும் மரபு நெடுங்காலமாக நிலைபெற்றுள்ளமை அரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியில் நன்கு வலியுறுத்தப்பெற்றது.

ஞானத்தின் அடையாளமாகவும் அக்கினியின் வடிவமாகவும் கூறப்படுகிறது. சிவன் மிகுந்த கோபமடையும் வேளையில் இந்தக் கண்ணைத் திறந்தால் தீப்பிழம்புகள் வெளிவருமென்பது சைவர்களின் நம்பிக்கை.

**உமையொருபாகன்**

சிவனும் பார்வதியும் ஓரே உருவமாய் சேர்ந்து அருள்பாலிக்கும் தோற்றமாகும். சிவன் இல்லையேல் சக்தியில்லை. சக்தி இல்லையேல் சிவனில்லை என்ற விளக்கத்தை அளிக்கும் வகையில் அர்த்தநாரீசுவரர் திருவுருவம் விளங்குகிறது.

அர்த்தநாரீசுவரர் என்ற பெயரில், அர்த்தம்-நாரி-ஈசுவரர் என்பதில் ‘அர்த்தம்’ என்றால் பாதி என்று பொருள். நாரி என்றால் பெண் என்று பொருள். சிவன் பாதி, பார்வதி பாதி, என்று ஆணுருவம், பெண்ணுருவம் இணைந்து இருப்பதால் தான் அர்த்தநாரி-ஈசுவரர் (சிவன்) என்பது அர்த்தநாரீசுவரர் என்ற பெயர் கொண்டது.

அர்த்தநாரீசுவரர் உருவம். வாழ்வியலில் ஆணின்றி பெண்ணும், பெண்ணின்றி ஆணும் இல்லை எனபதை விளக்குகிறது. சிவனுக்கு அர்த்தநாரீசுவரர் என்பது மட்டுமின்றி வேறுசில பெயர்களும் உண்டு. உமையொருபாகன், மங்கையொருபாகன், மாதொருபாகன் என்ற பெயர்களாலும் அழைக்கப்படுகிறார்.

காஞ்சி கைலாசநாதர் கோயிலில் இருக்கும் அர்த்தநாரீசுவரர் வடிவமே தென்னிந்தியாவில் காணப்படும் பழைய வடிவம் ஆகும். இங்கு பார்வதி வீணையுடனும், சிவன் காளையில் ஏறி அமர்ந்திருக்கும் கோலத்தில் காணப்படுகிறார்கள்.

**“வேதகாலத்திற்கு முன்பிருந்த இந்திய பழங்குடி மக்களிடையே சிவசக்தி வழிபாடே சிறப்புற்று விளங்கியது என்பதைப் புதைப்பொருள் ஆராய்ச்சிகளில் மூலம் அறிந்து கொள்ளலாம். பழந்தமிழர்களின் கொள்கை சைவ சமயமாக உருப்பெற்றது முடிகிறது என்கிறார் தில்லை நாதன்”** (தில்லைநாதன். சைவமும் நாமும்: பக்:1)

தானே தனித்து நிற்குந் தன்னிலையிற் சிவம் எனவும், உலகு உயிர்களுடன் விரவி நிற்கும் நிலையில் சக்தி எனவும் இருதிறமாகப் பிரித்துப் பேசப்படுகிறார்.

இளங்காளையை உடையவனாகிய சிவபிரான், உடம்பில் ஒருபுறம் உறையும் குயில் போன்ற உமையவளுக்கு அளித்து உமையொரு பாகனாக விளங்கினார். உலகமே அழிந்து போனாலும், உமையவள் கொழுநனோடு சேர்ந்து தனித்து நிற்பாள். இதனையே,

**இளம்சந்திர மௌலியும் தையள லாளொடும் (கம்ப.பால்.1326)**

**ஊழிக்கடை முடிவில் தனி உமை கேள்வன் (கம்ப.யுத்த.1356)**

**மழுவிடையோன் பாங்கின் உறையும் குயில் (கம்ப.யுத்த.2628)**

**தடமுலை உமைக்குக் காட்டி (கம்ப.யுத்த.2499)**

**உமையொருபாகன் வைகும் கயிலை (2698)**

போன்ற அடிகள் பெருமுலை நாயகியாகி உமையவள் திங்களைச் சூடிய சிவபெருமானுடன் சேர்ந்து காட்சியளிப்பதை விளக்குகிறது.

சிவனின் மனைவி பார்வதி பற்றிக் கம்பராமாயணத்தில் தனித்துக் குறிப்பிடவில்லை. நீலநிறம் வாய்ந்த திருமேனியினையுடைய தூய அணிகலன்களையும் உடைய உமாதேவியரை ஒரு பாகத்தில் கொண்ட ஒப்பற்ற முதல்வனாகிய அர்த்தநாரீசுவரர் பற்றி,

**“நீலமேனி வாலிழை பாகத் தொருவன்”**[21]

**“பெண்ணுருவொரு திறனாகின்று அவவுருத் தன்னுள் அடக்கிக்**

**கரக்கினும் காக்கும்”**[22]

இவ்வாறு தனிமுதற் பொருளாகிய சிவசக்தி என சக்தியும், நம் நாட்டில் தொன்று தொட்டு நிலவி வரும் கடவுள் வழிபாடு சைவசமயத்தின் மரபாகும்.

**கயிலை**

செம்மேனி உடைய சிவபெருமான் வடஇமயத்து உச்சியாகிய திருக்கயிலை மலையில் மலையரையன் மகளாகிய உமாதேவியுடன் எழுந்தருளியுள்ளான் என்பது சைவசமயச் சான்றோர் கருத்து.

இமையமால் வரைக்கும் அப்பாலுள்ள உமையைப் பக்கத்திலே கொண்டு சிவபிரான் உறைகின்ற கயிலை மலை என்பதனை,

**ஈறு இலான் கயிலையே (கம்ப.பால.1048)**

**வெள்ளி மலை அண்ணல் (கம்ப.ஆரணி.79)**

**எல்லிட்ட கையிலை பொருப்பு (கம்ப.ஆரணி.926)**

**கயிலையில் இருந்த தேவை (கம்ப.சுந்தர.12)**

**கைலைஅம் கிரியும் ஒத்தான் (கம்ப.சுந்தர.26)**

**அகன் கயிலையில் தொலைவிலோனும் (கம்ப.சுந்தர.26)**

**விண்தோய் கையிலை மலை (கம்ப.சுந்தர.774)**

**பொருப்பு வாங்கி பரம்சுடர் (கம்ப.சுந்தர.985)**

**கயிலையின் ஒரு தனிக் கணிச்சி (கம்ப.சுந்தர.1061)**

**உமையொரு பாகன் வைகும் கயிலைகண்டு (கம்ப.யுத்த.2698)**

என்ற அடிகள் மூலம் கம்பராமாயணத்தில் கையிலையின் பெருமையை அறியமுடிகிறது.

மலைகளுக்கெல்லாம் முடிவில்லாதவனாகிய சிவபெருமான் வெள்ளிமலையை ஒத்தவன். தெய்வமகளாகிய உமையவள், சிவபெருமானுடன் கயிலைமலையில் இருந்து காட்சியளித்தார்கள். இதனைப் பதிற்றுப்பத்தில்,

**“கடவுள்நிலைஇய கல்லோங்கு நெடுவரை**

**வடதிசையெல்லை இமயமாக”**[23]

சிவபெருமான் எழுந்தருளிய திருக்கயிலாய மலை எனக் குறிப்பிட்டுள்ளது.

**முப்புரம் எரித்தல்**

ஆணவம் மிகுந்து இருந்த அசுரர்களையும் அவர்களின் முப்புரங்களையும் அழித்து தேவர்களுக்கு அருள்பாலிக்கின்ற செய்தியைவானிடத்தே பறந்து திரியும் இயல்பினவாய் பொன், வெள்ளி, இரும்பு என்பனவற்றால் ஆன மதில்களையுடைய நகரங்களில் வாழ்ந்த அவுணர்கள், தேவர் முதலியோர்க்கு இடர் விளைவித்தனர். அவுணர்களால் இடருற்று வருந்திய தேவர்கள் வேண்ட அவர்களுடைய துன்பங்களைப் போக்கத் திருவுளம் கொண்ட சிவபெருமான் பூமியைத் தேராகவும், வேதங்களைத் தேரிற் பூட்டும் குதிரைகளாகவும், நான்முகனைத் தேர்ப்பாகனாகவும், இமயமலையை வில்லாகவும், வாசுகியென்னும் பாம்பினை வில்லின் நாணாகவும் காற்று, தீ, திருமால் ஆகியோரை ஓர் அம்பாகவும் கொண்டு முப்புரங்களையும் தம் புன் சிரிப்பினால் எரித்தருளினான் இதனைக் கம்பராமாயணத்தில்,

**முப்புரம் எரித்த தனி மொய்க்கணையும் நல்கா (கம்ப.ஆரணி.173)**

**கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன் (கம்ப.சுந்தர.139)**

**பொருப்பு வாங்கிய பரம்சுடர் ஒருவடைப் பொருவும் (கம்ப.சுந்தர.985)**

**முப்புரம் முருங்கச் சுட்ட (கம்ப.சுந்தர.1175)**

**துன்னலர் புரத்தை முற்றும் (கம்ப.சுந்தர.1181)**

**திங்கள் மோலி அண்ணல் திரிபுரம் தீக்கச் (கம்ப.யுத்த.2901)**

என்ற அடிகள் சிவபெருமானின் முப்புரத்தைக் குறிப்பிடப்பட்டுள்ளன.

மூன்று ஊர்களும் அழியுமாறு எரித்த வெற்றி வாய்த்தவனது நெற்றிக்கண்ணின் நெருப்பும் குளிர்ச்சி அடைந்தன.

**"மூவகை ஆரெயில் ஓர் அழல் அம்பின் முளிய**

**மாதிரம் அழல் எய்து, அமரர் வேள்விப்**

**பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்"**[24]

மூவகைப்பட்ட அழித்தற்கரிய மதில்களைத் தீயாகிய ஓர் அம்பினாலே அழித்து அமரர்க்குச் செய்யும் வேள்விக் கண்ணே அவிப்பாகத்தை உண்ட பசிய இடப்பாகத்தையுடைய ஈசன் என்று பரிபாடல் குறிப்பிடுகிறது.

**"மாதவியின் பதினொரு ஆடல்களுள் முப்புரங்களையும் எரித்த பின் சிவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும், பிரம்மன் காண ஆடிய பாண்டுரங்கமும் சிலப்பதிகார கடலாடுகாதையில்"**[25] குறிப்பிடுகின்றது. இதன்மூலம் சிவனின் பெருமையைப் பற்றி அறியலாம்.

**கறைமிடறு**

தேவர்களும், அசுரரும் இமயமலையை மத்தாகவும் வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தபொழுது வலியைப்பொறுக்க

இயலாத, வாசுகி கக்கிய விடத்திற்கு அஞ்சிய தேவர்களைக் காக்க வேண்டி அவ்விடத்தைத் தான் உண்டு கண்டத்தில் நிறுத்தினான்.

ஆலகாலவிடம் வந்தபோது அவ்விடத்தின் முன்னே அஞ்சாது நின்றவர், சிவபெருமான். சிவன் நஞ்சை உண்டதால் அவனுடைய கழுத்து நீலநிறத்தை அடைந்தது.

நஞ்சுண்ட கண்டனாகிய சிவபெருமானைக் காரியுண்டிக் கடவுள், கறைமிடற்றண்ணல், நீலமணிமிடற்றொருவன், மணிமிடற்றண்ணல் நீலமணிமிடற்றன், கண்டத்திறைக்கடவுள், ஆலம் உண்டவன், ஆலம் உண்டவனே, கறுத்தமணி கண்டர், நீலம் கொண்ட ஆர் கண்டன், நஞ்சு அடை கண்டன் என்னும் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளார். இதனையே கம்பராமாயணத்தில்,

**ஆலம் மிடற்றான் (கம்ப.ஆரணி.928)**

**நஞ்சம் நுங்கிய கண்ணுதல் கண்டத்தின்**

**(கம்ப.கிட்கிந்தை.455)**

**ஆலம் உண்டவன் (கம்ப.கிட்கிந்தை.83)**

**ஆலம் உண்டவன் நன்று ஊட்ட (கம்ப.சுந்தர.1186)**

**ஆலவிடம் அன்றுவர நின்ற சிவன் அன்னான் (கம்ப.யுத்த.846)**

நஞ்சுண்டு கழுத்ததைப் பற்றி இயம்புகின்றது.

நீலமணிமிடற்றன், கண்டத்திறைக்கடவுள், ஆலம் உண்டவன், ஆலம் உண்டவனே, கறுத்தமணி கண்டர், நீலம் கொண்ட ஆர் கண்டன், நஞ்சு அடை கண்டன் என்னும் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுகிறார்.

**“பேரிசை நவிரம் மே எயுறையும்**

**காரியுண்டிக் கடவுள் இயற்கையும்”**[26]

என்ற அடிகள் மூலம் வடார்க்காடு மாவட்டத்தில் திரிசூலகிரி என்னும் பெயருடன் விளங்குவதும் ஆகிய பெரும்புகழ் வாய்ந்த நவிரமலையின் உச்சியிலே காரியுண்டிக் கடவுளாகிய சிவபெருமானுக்குச் சிறப்புடையதாகிய திருக்கோயில் அமைக்கப்பெற்றிருந்தது என்பதையும் அதன் சிறப்பையும் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாமில் குறிப்பிடுகின்றார்.

இதனைப் புறநானூறு, கடைமிடறு (புறம்-1) கடைமிற்றண்ணல் (புறம்-55) மணிமிடற்றல் (புறம்-56) நீலமணிமிடற்றொருவன் (புறம்-91) நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் (ஐங்குறுநூறு கடவுள்வாழ்த்து) குறிப்பிடுகின்றது. சிவனின் நஞ்சுண்டு கறுத்த கழுத்தினைப் பல்வேறு பெயர்களால் அழைக்கின்றார்.

**மாலை**

கொன்றை மலர் ஆண்டுக்கு ஒருமுறை மட்டும் கோடையின் துவக்கத்தில் மலரக்கூடியது. கொன்றை மலர்கள் இதற்குச் சொர்ணபுஷ்பம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. சிவபெருமானுக்குரிய மாலை கொன்றை மாலை என்பது ஆகும். இதனையே,

**தார்கொன்றையினான்கிரி (கம்ப.யுத்த.1958)**

கம்பராமாயணம் சுட்டுகின்றது**.**

பொன்போலும் நிறத்தினதாய்க் கொத்தாக மலரும் கொன்றை மலர் மாலை சிவபெருமானுக்குரியது ஆகும். ஐந்திதழ்களையுடைய இம்மலர் சிவபெருமானுக்குரிய மந்திரமாகிய திருவைந்தெழுத்தின் அடையாளமாகும்.

**“காவிரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்க்**

**காரன் மாலையன் மலைத்த கண்ணியன்”**[27]

**“மணிமிடற்று மான்மலர் கொன்றையவன்”**[28]

கார்காலத்து மலரும் கொன்றையின் பொன்போன்ற பூக்களைத் தோளில் அணிந்த தாரினையும் மார்பில் அணிந்த மாலையினையும், முடியிற்சூடிய கண்ணியினையும் உடையவன் சிவன் என்பதை விளக்குகின்றது.

**சூலம்**

“சூலம் மூன்று பிரிவுகளை உடையது. அம்மூன்றும் ஆரணி, ஜனனி, ஈரோதாய்த்திரி என்ற மூன்றும் சக்தியுடையதாகிய மூன்று செயல்களைச் செய்து, மும்மலங்களை நீக்கி முக்தியை அளிப்பது என்று கூறுவர். ஆரணி என்பது அழித்தல், ஜனனி என்பது காத்தல், ஈரோதாய்த்திரி என்பது உயிர்களைப் போகங்களில் நிறுத்துவது எனவே திரிசூலம் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று சக்திகளையும் உடையதாகக் கூறுகிறார்.

மூன்று தலையையுடைய வன்மை வாய்ந்த ஒப்பற்ற சூலத்தைத் தாங்கியவனாக சிவபெருமான் விளங்குகின்றான். கம்பராமாயணத்தில்

**முத்தலை எ்.கினாற்கும் (கம்ப.சுந்தர.1277)**

**சூலம் ஏந்திமுன் நின்றவர் (கம்ப.யுத்த.3231)**

**சூலம் தாங்கித் தோள் (கம்ப.யுத்த.1972)**

**சூலம் வாங்கிடின் (கம்ப.யுத்த.3268)**

இறைவனின் சூலப்படையைப்பற்றி விளக்குகின்றன.

சிலப்பதிகாரம் காடுகாண்காதையில் மாங்காட்டு மறையோன் மதுரைக்குச் செல்லும் வழியினைப் பற்றிக் கோவலனிடம் கூறும்போது மூன்று வழிகள் உண்டு இவை, **“சிவபெருமான் கையில் ஏந்திய திரிசூலம் போன்றது”**[29] என உரைப்பர். இதில் சிவன் கையிலுள்ள திரிசூலம் சுட்டப்பெறுகிறது.

மூன்று முனைகளைக் கொண்ட சூலாயுதம், சிவனின் ஞான சக்தியைக் குறிக்கின்றது. இந்த ஆயுதம் வல்வினைகளை அழித்து நன்மை பயப்பவை என சைவசமயத்தின் பெருமையைப் பற்றிக் கூறுகின்றது.

**நந்தி**

நந்தி வெண்மையாகிய தூய்மையும், ஆண்மையும் நிறைந்தது. இது தர்மத்தைக் குறிக்கிறது. சிவபிரானின் வாகனமாக விளங்கும் நந்தி எல்லாக் கோயில்களிலும் சிவனை நோக்கியபடியே இருக்கும். கோயில்களில் பிரதோச காலத்தில் நந்திக்கென்று தனிவழிபாடு உண்டு. நந்தியிடம் அனுமதி பெற்றுத்தான் சிவதரிசனம் செய்ய வேண்டும். சிவன் தேவர்களைக் காப்பாற்ற தேரில் ஏறிப் புறப்பட்ட போது அச்சு முறிந்துவிட்டது. சிவனிடம் கொண்ட அன்பின் காரணமாக மகாவிஷ்ணு 'காளை' உருவம் கொண்டு சிவனை ஏற்றிச் சென்றார். பார்வதி சிவனோடு காட்சி தரும் பொழுது மட்டும் காளை வாகனத்திலும், தனித்திருக்கும் போது யானை, சிங்கம், அன்னம், கிளி, காமதேனு போன்ற வாகனங்களில் காட்சி தருகின்றார் என்பது புராணச்செய்தி.

காளை வாகனத்தையுடைய சிவனை விடைசங்கரன், விடையில் தோன்றும் விமலன், ஏறுஅமர் கடவுள் என்ற பெயர்களில் அழைக்கப்படுகிறது.

**விடைமேல்வரு விமலன் (கம்ப.யுத்த.3014)**

இத்தகு சிறப்புமிக்க சிவன் ஏற்றை (காளை) கம்பராமாயணம் சுட்டுகிறது.

தூய வெள்ளை நிறம் வாய்ந்த ஆனேறு ஆகிய இடபம் சிவபெருமானுக்குரிய ஊர்தியாகவும், கொடியதாகவும் தொன்று தொட்டு போற்றப்பெற்று வருகின்றது. தூய வெள்ளை நிறம் வாய்ந்த எருதினை (இடபத்தினை) கொண்டதன் உட்கருத்து தூய்மெய்யுணர்வின்கண் நிலைபெற்று விளங்குபவன் சிவன் என்பதை அறியமுடிகிறது.

**நாக ஆபரணங்கள்**

சிவனுடைய உடலில் நாகங்கள் ஆபரணங்களாக உள்ளன. சிவனுடைய கழுத்தில் இருப்பது வாசுகி பாம்பாகும். சிவனுடைய கழுத்தில் ஆபரணமாக இருக்கும். வாசுகி தேவலோகத்தில் வாழ்கின்ற பாம்பாகும். வாசுகி காசிபர்-கத்ரு தம்பதியரின் மகளாகவும், பாற்கடலில் திருமால் பள்ளிக் கொண்டிருக்கும்

ஆதிசேசனின் சகோதரி ஆவாள். வாசுகி பாம்பினைப் பாற்கடலை கடைய மத்தாக இருக்க வேண்டுமென தேவர்களும் அசுரர்களும் வேண்டினார்கள்.

ஆதிசேசன் திருமாலை சரணடைய வாசுகி மாற்றாந்தாய் மகனான கருடனிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள சிவபெருமானை நோக்கி தவமிருந்தது.வாசுகியின் தவத்தில் மகிழ்ந்த சிவபெருமான் தன்னுடைய கழுத்தில் நாகாபாரணமாக இருக்க வரமளித்தார்.

கையில் பாம்பை ஏந்தியவர் சிவன், மொய்க்கின்ற பாம்புகளைக் கழுத்தில்அணிந்த முதற்கடவுளாகிய சிவபெருமான் என்பதை,

**மூசுஅரவு சூடும் முதல் ஈசன் (கம்ப.ஆரணி.157)**

கம்பராமயணத்தில் கையாளப்பட்டுள்ளன.

**மழுப்படை**

பரசு என்பது கோடரி என்றும் மழு என்றும் சொல்லப்படும். சிவபெருமான் தன் திருக்கைகளில் ஏந்தியப் படைக்களங்காகக் கணிச்சி-மழு, முத்தலைச்சூலம் என்பன குறிக்ககப்பெற்றன. இறைவனுக்குப் படையாகக் கூறப்படும் கணிச்சியும் மழுவும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்றே.

மின்னலும் அணுக முடியாத மூன்று மதில்களையுடைய முப்புரத்தை எரித்த மழு ஏந்திய சிவபெருமான் படை இரும்புத் தூண் போன்று உறுதியானது இதனையே,

**கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன் (கம்ப.சுந்தர.139)**

**மழுவாள் வாய்மை துடைத்த மார்பன் (கம்ப.சுந்தர.311)**

**மழுஎனப் பொலிந்து (கம்ப.சுந்தர.912)**

**மழுவலான் ஆண்டு வைகும் (கம்ப.யுத்த.2499)**

**சுடர் முழு ஏந்திடின் (கம்ப.யுத்த.3268)**

**கண்ணுதல் கணிச்சியும் (கம்ப.யுத்த.3628)**

**மழுவலான் வழுத்தி (கம்ப.யுத்த.4034)**

என்ற அடிகள் மூலம் கம்பராமாயணத்தில் மழு பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**“நீரும் நிலனும், தீயும், வளியும்**

**மாசு விசும்பொடு ஐந்துடன் இயற்றிய**

**மழுவாள் நெடியோன் தலைவன் ஆக”**[30]

என மாங்குடி மருதனார் மழுவாகிய வாட்படையினையுடைய சிவபெருமானைச் சிறப்பித்து மதுரைக்காஞ்சியில் போற்றியுள்ளார்.

**சுடலை**

**இறைவனின் ஆடல் அரங்கமே நன்காடு. சிவன் தவிர அனைத்து உயிர்களும் அடங்கும் இடம் நன்காடு.** இறைவன் வீரச்செயல் நடந்து முடிந்த பொழுது நடனாமாடுவர். சுடுகாட்டிலும் நடனமாடுவார். மன்றிலும் ஆடுவார்.

உடல்கள் கிடக்குமிடமான மயானம் முழுவதும் சுற்றி நடனமாடுவதால் சிவனுக்கு ‘சுடலையாடி’ என்ற பெயரும் உண்டு. இருள் நடுவிலே சுடலையிலே நடனமாடும் எண்தோள் அண்ணலாகிய சிவபெருமான் காளியை நடனத்தில் வென்று காட்டினார். இதனை,

**சுடலை ஆடும் அண்ணல் (கம்ப.யுத்த.2450)**

**காளியைப் பண்டு கண்ணுதல் காட்டிய காலை (கம்ப.யுத்த-3228.)**

கம்பராமாயணத்தில் கம்பர் கூறியுள்ளளார்.

பிரம்மன் முதலிய பூதச் சிருட்டியைச் செய்ய அப்பூதங்கள், பிராணிகளைப் பயமுறுத்தி வருத்தத் தொடங்கின. பிரம்மன் சிவனை வேண்ட சிவன் அவற்றை

அடக்கிப் பரிசுத்தமாய் மனித சஞ்சாரமில்லாத சுடுகாட்டில் அவற்றுடன் தங்கி நடனமாடினார்.

இறைவன் வீரச்செயல் நடந்து முடிந்த பொழுதும் நடனமாடுவார். சுடுகாட்டிலும் நடனமாடுவார். மன்றிலும் ஆடுவார். இடுகாட்டு நடனத்தை இரு இடங்களில் காணமுடிகிறது. இறைவனின் ஆடல் அரங்கமே நன்காடு தான் என்பதை உலகியல் இன்பம் கண்டு உயிர் உணர வேண்டும் என்பதை விளக்குகிறது.

**புலித்தோல்**

தாருகாவானத்து முனிவர்களின் தவத்தைக் கலைத்தும்,அவர்களுடைய பத்தினியரது கற்பைப் பரிசோதித்தும் உண்மைநிலையை வெளிப்படுத்திய சிவபெருமான், அவ்வனத்தைவிட்டு நீங்கினார். அச்சமயம் பிரம்மன் முதலிய தேவர்கள் கயிலைக் கடவுளைப் போற்றி வணங்கினார்கள். இவற்றை உணர்த்த முனிவர்கள் யாகம் செய்தனர். அந்த அக்கினியிலிருந்து பயங்கர வடிவமும், கூரிய நகங்களும், நெருப்பு போன்ற கண்களும், கொடூரமான தன்மையுடைய வேங்கையொன்று மகாசினம் கொண்டு தோன்றியது. சிவன் அப்புலியைக் கொன்று, அதன் தோலை உரித்துத் தமது திருவரையில் ஆடையாகக் உடுத்தினார்.

புலி ஊக்கமுடைய விலங்காகும். புலித்தோல் இயற்கையின் சக்தியைக் குறிக்கிறது. இது உலகின் ஆக்க சக்திகளுக்கு மூலமாகவும் இருக்கிறது. சிவன் புலித்தோலின் மேல் அமர்ந்திருப்பது, அவன் எல்லா சக்திகளுக்கும் அப்பாற்பட்டவர் என்பதை உணர்த்துகிறது.

**உடைபுலித் தடக்கை அண்ணல் (கம்ப.யுத்த.2171)**

**ஆனையின் உரி போர்த்தவன் (கம்ப.யுத்த.3717)**

என்ற அடிகள் மூலம் புலித்தோலை உடுத்திய பெரிய கைகளை உடைய சிவபிரான் என்று கம்பராமாயணம் குறிப்பிடுகின்றது.

**வழிபாடு**

மூடாத மூன்றுகண் படைத்த இறைவனான சிவபெருமானை, இம்மை, மறுமை, இருமைக்கும் பொருந்திய முறைப்படி பூசையைச் செய்தான் இராவணன். இதனை,

**“இமையா முக்கண் இறைவனை பூசனை முறையின் செய்து”**

**(கம்ப.யுத்த.3608)**

**“போற்றும் ஈசனை தொழுதான்” (கம்ப.யுத்த.3777)**

அம்பை விடும் பொழுது அம்பை பூசைப் செய்து அதற்குரிய தேவதையையும், மந்திரத்தையும் சொல்லித் தான் வழிபடும் கடவுளை வணங்கி இராவணன் அம்புவிட்டான் என்று, வழிபாடு பற்றியகம்பராமாயணத்தில் குறிப்பிடுகிறது.

**உருத்திரன்**

உருத்திரன் (Rudra) என்பவர் சைவ சமயக்கடவுளான சிவபெருமானால் அழிக்கும் தொழில் செய்ய உருவாக்கப்பட்டவர் ஆவார். இவர் மும்மூர்த்திகளில் ஒருவராகவும் அறியப்பெறுகிறார். உருத்திரன் படைக்கும் கடவுளான பிரம்மனின் மகன் என்று வாயுபுராணம் கூறுகிறது. பிரம்மன் தனக்கும் தன்னைப் போலக் குழந்தை வேண்டுமென நினைத்தபொழுது ‘உருத்ரன்’ அவர் மடியின் மீது தோன்றினார். உருத்ரன் என்னும் திருநாமம் நந்திகேஸ்வரருக்கு உரியதாகும். ஆகையால் பிரதோச காலத்தில் சிவபெருமானை வழிபடுவதற்கு முன்னர் துக்கத்தைப் போக்குபவராய் விளங்கும் நந்திகேஸ்வரரை வழிபட வேண்டும்.

**ஓங்கல் உரித்துள் உருத்திரன் (கம்ப.ஆரணி.1097)**

**உறுத்து-உருத்திரன் (கம்ப.சுந்தர.853)**

**உண்ணும் காலத்து அவ் உருத்திரன் (கம்ப.யுத்த.1187)**

**உருத்திரனும் உடல் கூச வீசினால் (கம்ப.யுத்த.2075)**

**ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பான் (கம்ப.ஆரணி.1081)**

**ஊழியின் இறுதி காலத்து உருத்திரமூர்த்தி ஒத்தான்**

**(கம்ப.சுந்தர.740)**

என்ற அடிகள் மூலமாக கம்பராமாயணத்தில் உருத்திரன் பற்றிப் குறிப்பிடுகின்றன.

**மான்**

தாரு காவனத்து முனிவர்களின் வேள்வியிலிருந்து ஒருமான் தோன்றி அகிலமெல்லாம் அழிக்கத்தக்க சத்தமிட்டுக்கொண்டு தாவிப் பாய்ந்து, வான் வழியாகக் கிளம்பி வருவதைக் கண்டு, சிவன் உயிர் வருந்தாது அருள் செய்து தனது இடக்கரத்தில் ஏற்றார். மானின் நான்கு கால்களும் நான்கு வேதமாகையால் வேதப்பொருளாக உணர்ந்தவர். தம்சூலப் பொருளாகக் காட்சி தருகிறார். கம்பராமாயணத்தில் சிவபெருமானின் திருமேனியினை அலங்கரிக்கும் முகமாக மான் ஏந்திய கரத்தானாகக் காட்சியளிக்கின்றான். மான் பற்றியக் குறிப்பாக

**பொன்மான் உரியான் (கம்ப.அயோத்தி.440)**

**மான் மறிக்கரத்து வள்ளல் (கம்ப.யுத்த.3130)**

கம்பராமாயணம் சுட்டுகிறது.

**ஐந்து தொழில்கள்**

சிவன் இணையில்லாத பரம்பொருள் என்பது சைவ சமயத்தின் தலையாய கோட்பாடு, அழித்தல் கடவுள் என்பதனால் சங்கரன், சங்கராகரணன் எனவும் அழைக்கப்படுவன்

இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்கள் செய்கிறான். ஆனால் சைவசித்தாந்தக் கொள்கைப்படி முத்தொழிலுடன் ‘மறைத்தல்’ என்ற தொழிலும், ‘அருளல்’ என்ற தொழிலும் இறைவன் செய்கிறான்.

இறைவன் ஐந்து வகைத் தொழில்கள் புரிகின்றான் என்று சைவசமயம் கூறகிறது.

படைத்தல் என்பதைத் தனு, கரண, புவன யோகங்களை மாயையிலிருந்து தோற்றுவித்தல் எனவும், தோற்றுவித்தவற்றை ஒரு கால எல்லை வரை நிறுத்துதலே காத்தல் எனவும், அழித்தல் எனும் தொழிலினால் உயிர்களின் இளைப்பை நீக்க அவற்றை ஒடுக்குதலும், மறைத்தல் என்பதனால் தன்னை மறைத்து உலகைக் காட்டிலும், அருளினால் தன்னை நோக்கிடும். உயிர்களுக்குத் தன்மைக் காட்டி திருவடி சேரச் செய்தல் என்பன ஐந்தொழில்களின் செயல்பாடுகளாக அமைகின்றன.

**“படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை முழுவதும் காப்போன் காக்கும் கடவுள்’’**

எனத் திருவாசம் எடுத்துரைக்கிறது. சிவபெருமான் ஐந்தொழில் புரிவதை,

**ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய அருள்தருவாய்**

என்ற அடி சுட்டுகின்றது.

இறைவன் உண்டு என்ற கொள்கையுள்ள சமயத்தவர்கள், படைக்கப்பட்ட ஆன்மாக்களையும், புலனுணர்வால் காணும் சடப்பொருளாகிய உலகங்களையும் தம்தம் பல பிறவிகளிலுருந்தும் இறப்புகளிலிருந்தும் ஏற்பட்ட சோர்விலிருந்தும் அமைதியைக் கொடுக்கச் செய்கிறது. இதனையே கம்பராமாயணத்தில்,

**ஈசன் இவ்உலகினை அழிக்கும் நாள் எழும் (கம்ப.அயோத்தி.978)**

இறைவனின் தொழிலைப்பற்றி இயம்புகிறது.

**முருகன்**

முருகவழிபாடு கௌமாரம் எனப்படும். குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன் சிவனுக்கும் உமைக்கும் பிறந்த மகனாவான். முருகப்பெருமான் “சிவபெருமான் உமையோடு கூடிய காலத்து இந்திரனது குறுக்கீட்டால், அவன்

வேண்டுகோளுக்கிணங்க அக்கருவைச் சிதைக்க முனிவர்கள் எழுவரும் அவற்றை ஏற்றுத்தத்தம் மனைவியர் கையில் கொடுக்க அருந்ததி ஒழிந்த ஏனைய அறுவரும் உண்டு உயிர்க்கத் தோன்றிய ஆறுவடிவே ஆறுமுகமுடைய முருகனாயிற்று" என்பது புராணச்செய்தி. கடைச்சங்கப் புலவரான நக்கீரர் சரவணப்பொய்கையில் பிறந்த முருகன் குறித்து,

தமிழ்க் கடவுளாகிய முருகன் வழிபாடு, வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் வழங்கும் நாட்டில் தொன்றுதொட்டு வழிபாடு நிகழ்ந்து வந்துள்ளது. ஈராயிரம் ஆண்டுகட்கும் முற்பட்டதெனக் கருதப்படும் தொல்காப்பியம் முருகனை,

**"சேயோன் மேய மைவரை உலகம்"**[31]

எனக் குறிஞ்சித் திணைக்குரிய தெய்வமாகக் குறிப்பிட்டுள்ளது. இதனால் முருக வழிபாடு மிகத் தொன்மைக் காலந்தொட்டு தமிழ்நாட்டில் நிகழ்ந்துள்ளது என்பதை அறியலாம்.

முருகனை முருகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலான் என்றும் பெயர்களால் சுட்டியுள்ளனர். முருகன் மலைவாழ் மக்களாகிய குன்றவர் போற்றும் தெய்வம், மலையும் மலைசார்ந்த நிலமும் ஆகிய குறிஞ்சி, நிலம் முருகனுக்குரிய நிலம் அதனால் குறிஞ்சிக்கிழவன் என்று கூறுவர். மலையில் வாழ்பவர் சிறப்பாகக் கொண்டு போற்றினர். இதனால் இவனை மலைக்கடவுள் என்றே கருதினர்.

**"நெடும்பெருஞ் சீமையத்த நீலப்பைஞ்சுனை**

**ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**

**அறுவர் பயந்த ஆறமர் செல்ல"**[32]

என்று குறிப்பிடுகின்றது. முருகன் சூரபத்மனை வென்றவன். "ஆறுமுகமும் (முருகு.90.23) பன்னிரெண்டு கைகளும், தோளும் (பரி.5.11,14) கொண்டு விளங்கினான். சிவந்த நிறத்தை உடையவனாகிய முருகப்பெருமான் சிவந்த நிற

ஆடையும் (பரி.19.97) வெண்துகிலும் (கலி.105-17) நலம்பெற கலிங்கமும் (முருகு.109) கடப்ப மாலையைத் தன் மார்பில் தாங்கியவனாகவும் (பெரும்பா.75) (முருகு.10-11) விளங்குகின்றான். இதனை

**முக்கண் நோக்கினான் அறுவகை முகனும் (கம்ப.சுந்தர.238)**

**முழுமுதல், கண்ணுதல், முருகன் தாதை கைம் (கம்ப.சுந்தர.912)**

முழுமுதல்வனும், நெற்றிக்கண் பெற்றவனுமாகிய சிவபெருமானின் அறுவகையான முகங்கள் கொண்ட முருகன் என்பதைக் கம்பராமாயணம் கூறுகின்றது.

இளங்கோவடிகள் சிலம்பில்,

**"ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ்கோயில்"**[33]

**"கோழிச் சேவற் கொடியோன் கோட்டம்"**[34]

என்பதன் மூலம் முருகன் கோயில் பற்றியும்,

**"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்,**

**ஏரகமும் நீங்கா இறைவன் கை வேலன்றே"**[35]

எனும் அடிகளில் சீர்கெழுமிய திருச்செந்தூர், திருச்செங்கோடு, திருவெண்குன்றம், திருவேரகம் ஆகிய நான்கு முருகத் தலங்களின் பெருமைகளையும் சுட்டுகிறது. உலக உயிர்கள் அனைத்தின் மீதும் செந்தன்மை கொண்டு முருகப்பெருமான் அவ்வுயிர்களைத் தீமையினின்றும் காத்தருளுபவன் கடப்பாடுடையவன்.

தொல்காப்பியனார் காலத்தில் வள்ளி நாச்சியார்க்குரிய கணவனாகப் போற்றப்பெற்ற முருகப்பெருமான் கடல் நடுவே எதிர்த்து நின்ற அவுணர் தலைவனாகிய சூரபதுமனை அழித்தும், கிரௌஞ்ச மலையைப் பிளந்தும் தேவர்களது துயரைத் துடைத்தான். அத்தகைய வெறியாடுதல் நிகழ்ச்சியை,

**“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட்ட யர்ந்த காந்தளும்”**[36]

எனப் தொல்காப்பிய புறத்திணையில், “வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்” என்ற அடிகள் மூலம் வேலன் புனைந்த வெறியர் களத்திற்கு முருகன் வருவான் என்பதை அறியலாம். கம்பராமாயணத்தில் கௌமாரம் என்னும் முருகனை முழுமுதல்வன் எனக் குறிப்பிடுகிறது.

**விநாயகர்**

சைவ சமயக் கடவுள்களில் பெரும்பாலானோரால் வழிபடும் முதன்மைக் கடவுள் விநாயகர். சிவபெருமான் பார்வதியின் மூத்தமகன். சிவபெருமான் தேவர்களை நோக்கி உலகில் வழிபாடுகள் செய்யப்படுவது போல் இக்கணேசனும் அனைவராலும் வணங்கப்பட வேண்டும் இல்லையெனில் காரியசித்தி அடையாது என்பர். பின்னர் சிவபெருமானே முதலில் கணபதியை வணங்கிப் பல வரங்களைக் கொடுத்தார்.

இவர் கணங்களின் அதிபதி என்பதால் கணபதி என்றும், யானையின் முகத்தினைக் கொண்டுள்ளதால் யானைமுகன் என்றும் அழைக்கப்பெறுகிறார். கஜமுகன், கஜம் என்றாலும் யானையைக் குறிக்கும். விநாயகரை வணங்கிச் செயலைத் தொடங்கினால் தன்னம்பிக்கையுடன் வெற்றிகரமாக அமையும். இவருடைய அனுமதியின்றி மேல் உலகத்தை அடைய முடியாது என்பது அவர்களின் நம்பிக்கையாகும். இதனையே கம்பராமாயணம்,

**“முக்கண் நோக்கினன் முதல் மகன்” (சுந்தர.235)**

முதற்கடவுளான விநாயகரைப் பற்றிக் கூறுகின்றது.

பொன்னாலாகிய முகப்படாம் அணிந்தவன். நெற்றிவரை அசைந்தாடும் காதுகளை உடையவன். ஒற்றைக்கொம்பையும் இரு செவிகளையும், மூன்று கண்களையும், செம்மேனியையும் உடையவன். இதனை,

**“ஒருகோட் டிருசெவி முக்கட்செம்**

**மேனியஞண்களிறே”[37]**

என்கிறார் நம்பியாண்டார் நம்பி.

**“பதியிற் கரும்பனைக்கை**

**வேற் கரிய இருமதத்து**

**ஒற்றை மருப்பின் முக்கண்”[38]**

என்று விநாயகருக்கு முகத்தில் கையும் அந்த துதிக்கையுள் மூக்கும் அந்த மூக்கினுள் வாயும், அந்த வாயினுள் தந்தமும் உள்ளன என்று உருவ அமைப்பைப் போற்றி வணங்குவர்.

**“வேதகாலம் என்று கூறப்படும் தொன்மையான காலகட்டத்திற்கும் முன்னிருந்தே விநாயகர் வழிபாடு உலகின் பலபகுதிகளிலும் இருந்து வந்ததை சரித்திர ஆராய்ச்சியாளர் கண்டறிந்துள்ளனர்.”[39]**

**“விநாயகரை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சமயமே காணாபத்தியம் எனப்படும். இக்கடவுள் வழிபாடு ஏறத்தாழ கி.பி.5ஆம் நூற்றாண்டில் உருவானது என்று கூறப்படுகிறது.”[40]**

**“உரோம மொழியில் விநாயகருக்கு ‘ஜேனஸ்’ என்று பெயர் இவர்கள் தலைமைத் தெய்வமான ஜீபிடரை வணங்குவதற்கு முன் விநாயகரே வணங்குகின்றனர்”** என்றார் முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்.

**புராணம்**

புராணம் என்றால் பழைய அல்லது பண்டைய எனப்பொருள்படும். புராணங்களில் பெரும்பாலானவை காலம் காலமாக நம்முடைய மரபில் இருந்து வந்த கதைகள் ஆகும். நுட்பமான நன்னெறியையும், ஆன்மீக தவத்தையும் எளிதான முறையில் விளக்குவதற்காகத் தெய்வங்களை மையமாகக் கொண்டு

கூறப்பட்ட கதைகள் தான் புராணங்கள் ஆழ்ந்த ஆன்மீக தத்துவத்தை நாம் எளிதில் புரிந்து கொள்வதற்காகத் தெய்வங்களைக் கதாபத்திரங்களாகக் கொண்டு நம் முன்னோர்கள் கூறிய கதைகள் தான் புராணங்கள் ஆகும்.

**மணிமிடற்று இளைவனும், இனிநீர் ஒன்றும் அஞ்சலிர்**

**(கம்ப.யுத்த.3283)**

நீலகண்ட நாயகனாகிய சிவன் அத்தேவர்களை நோக்கி இனி நீங்கள் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். வஞ்சனை வல்ல அரக்கர் கூட்டத்தை ஒரு சேரக் கொன்று குவிப்பான். அக்கொற்றவனாகி ஒப்பற்ற ஊழானது இராமனை இங்குக் கொண்டு வந்தது என்று இயம்பினான்.

**மூசுஅரவு சூடும் முதலோன் (கம்ப.ஆரணி.157)**

என்ற அடிகளில் கம்பர் இமயமலையில் சிவபெருமான் பார்வதியை மணந்த காலத்து எல்லோரும் மணக்கோலம் காண அங்குக் கூடிவிட்ட காரணத்தால் தென்திசை வெளிச்சென்று மேல்நோக்கி எழுந்துவிட அதைச் சமநிலைப்படுத்தச் சிவபெருமான் அகத்தியனைப் பொதிய மலைக்கு அனுப்பினான் என்பதும் அகத்தியன் பொதிய மலையில் அமர்ந்து தென்னாட்டைச் சிறப்பித்தான் என்பதும் அகத்தியன் தவ ஒழுக்கத்தாலும் தமிழ் தந்தமையாலும் சிவனுக்கு நிகராகச் சிறப்பிக்கப்பெறுகிறான் என்பது புராண வரலாறு.

**சுடர்க் கடவுள் தந்த தமிழ் (கம்ப.ஆரணி.58)**

வருந்தி பயிலத்தக்க வேதங்கள் நான்கினையும், சிறந்த உலகம் பேசுகின்ற வழக்கினையும், அறிவு தரும் கவியினையும் முறையாக ஆய்ந்து சிவபெருமான் தோற்றுவித்த தமிழை உலகுக்கு அளித்தான் என்பது புராணச்செய்தி.

**அரன் இசைத்தான் (கம்ப.யுத்த.3645)**

மணிகள் கட்டிய சக்கரங்கள் பொருந்திய வெள்ளிக் குதிரைகள் நிமிர்ந்து செல்லத்தக்க அழகிய தேரை இராமனுக்கு அனுப்புங்கள் என்று சிவபெருமான் இயம்பினான்.

**ஈசனின் பெற்றவரம் (கம்ப.யுத்த-3781)**

போர்க்களத்திலே இறந்து அழிந்த கடல் போன்ற படைகளெல்லாம் சிவபெருமானிடம் பெற்ற வரத்தினால் பிழைத்துத் திரும்பத் தோன்றியது என்று சொல்லுமாறு திசைகளெல்லாம் திகைப்படைய, நாடு முழுவதும் நெருங்கிவிட்டன என்று வரம்பெற்ற செய்தியை விளக்குகின்றனர்.

**சிவனும் உறுகரணம் இருவர் (கம்ப.யுத்த-1294)**

என்பதில் பேய்க்கூட்டங்களும் எமனும் கட்டப்பெற்ற இராமனின் வில்லும், அறக்கடவுளும் ஆனந்தக் கூத்து ஆட, சிவனும் பிரமனும் போர் மேல் எழும் சக்கரப்படையை உடைய திருமாலும், அமரர் கூட்டத்துள் எல்லோரும் முனிவர்களும் விரைந்து குட்டிக்கரணம் பாய்ந்ததைக் கூறுகின்றது புராணம்.

**இடபம் உந்தும் கடவுள் (கம்ப.யுத்த-1294)**

கும்பகர்ணனுடைய மார்பில் காளையைச் செலுத்தும் அழகிய எட்டுத்தோள் கொண்ட சிவபெருமான் அளித்த கவசத்தைச் சுற்றிக் கட்டினான் இராவணன் என்பதை

**முக்கண் நோக்கினான் முதல் மகன் (கம்ப.சுந்தர-235)**

என்று அடி விளக்குகின்றது. சந்திரோதய வேளையில் இரவு முற்சாமத்தில் பார்வதி தேவி விநாயகரைப் பெற்றதால் அந்த நேரத்தில் விநாயகரை துதித்தல் உத்தமம் என்று சிவபுராணம் குறிப்பிடுகின்றது. இவைபோன்ற பல்வேறு புராணச் செய்திகள் கம்பராமாயணத்தில் இடம்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

- சைவம் தென்னிந்தியாவில் மிகப்பழைய வரலாற்றுக்கு முற்பட்ட சமயம். அது ஆரியருக்கு முற்பட்ட காலத்தில் இருந்து வருகிறது என்கிறார் ஜி.யு.போப்.
- சிவநெறியின் வரலாறு கற்காலம் அன்றி ஒரு கால் அதனினும் முற்பட்டதொரு காலத்தை காட்டுகிறது.
- யோகிகட்கெல்லாம் தலையாய யோகி சிவன் என்கிறார் சார்ஜன் மார்ஷல்.
- சிந்துவெளி மக்கள் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்திய திருவுருவம் சிவலிங்கங்களே. அரப்பாவில் மட்டும் சிறியனவும் பெரியனவுமாக ஏறக்குறைய ஆயிரம் சிவலிங்கங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.
- சிவநெறியைப் பற்றி எடுத்துக்கூறும் சமயநெறியே சைவம் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.
- சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களைச் செய்கின்றான்.
- சிவபெருமான் கங்கையைச் சடாமுடியில் தாங்கிப் பூமி தாங்கும் அளவில் வெளியிட்டதால் கங்காதரன் என்று பெயர் பெற்றார்.
- உலகை அழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வந்த கங்கையின் ஆணவத்தையும், வேகத்தையும் குறைத்து உலகைக் காத்து இன்பத்தை நல்கினார்.
- மனிதனின் இறுதியாகிய மரணத்திற்குப் பின் தீயில் வெந்து பிடி சாம்பலாக ஆவர் என்னும் தத்துவத்தை உணர்த்துகிறது.
- ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களைக் கண்களாக உடையவன் சிவன்.

- சிவபிரான் உடம்பில் ஒருபுறம் உறையும் உயிர் போன்ற உமையவளுக்கு அளித்து உமையொரு பாகனாக விளங்கினார்.
- வட இமயத்து உச்சியாகிய திருக்கயிலை மலையில் உமாதேவியுடன் எழுந்திருளியுள்ளார்.
- வாசுகி கக்கிய விடத்தை உண்டதால் காரியுண்டி கடவுள் எனவும் அழைக்கப்பெறுகிறார்.
- திரிசூலம் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று சக்திகளையும் உடையது என்கிறார் மயிலை சீனி வேங்கடசாமி.
- மகாவிஷ்ணு காளை உருவம் கொண்டு ஏறிச் சென்றார் என்பது புராணம்.
- கணிச்சியும் மழுவும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்றே.
- சிவன் புலித்தோல் மேல் அமர்ந்திருப்பது அவன் எல்லா சக்திகளுக்கும் அப்பாற்பட்டவர் என்பதை உணர்த்துகிறது.
- ருத்ரன் என்றால் துக்கத்தை விரட்டுபவன் என்பது பொருள். ருத்ரன் என்னும் திருநாமம் நந்திகேஸ்வரருக்குரியதாகும்.
- தமிழ்க் கடவுளாகிய முருகன் வழிபாடு, வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் வழங்கும் நாட்டில் தொன்று தொட்டு நிகழ்ந்து வந்துள்ளது என தொல்காப்பியம் கூறுகிறது.
- கணங்களின் அதிபதி என்பதால் கணபதி என்றும் அழைக்கப்படுகிறார்.
- விநாயகர் முழுமுதற்கடவுள். இவரை வழிபடும் சமயம் காணாபத்தியம். இவ்வழிபாடு ஏறத்தாழ கி.பி.5ஆம் நூற்றாண்டில் வாதாபிலிருந்து பல்லவத்தில் உருவானது என்று இந்து சமய உட்பிரிவுகள் கூறுகின்றன.

## சான்றெண் விளக்கம்


1. க.வச்சிரவேல் முதலியார், சைவமும் வைணவமும் பக்.34
2. சைவமும்-வைணவமும், ப.4
3. டி.பி.சத்திலிங்கம், சைவ சமயத்தோற்றமும் வளர்ச்சியும்
4. திருமந்திரம், 1486
5. மேலது, 1512
6. சிலப்பதிகாரம்.5:162-172
7. மணிமேகலை, 1:54-55
8. Tiruvasagam Reprint 1959
9. Sir john Marshal Mohenjadro and Indus civilization, val-I 1931, P.54
10. ஐங்குறுநூறு, கடவுள்வாழ்த்து,
11. சிலப்பதிகாரம், 2:38-40
12. புறம்.1:55.166
13. கலித்தொகை, 150:17
14. புறநானூறு, 91:5
15. அகப்பொருள் கடவுள்வாழ்த்து
16. சைவ சமய வளர்ச்சி, ப.92
17. பெரியபுராணம், 1.2:566
18. திருமந்திரம் 8.35:5
19. சிலம்புச்செல்வர், மா.பொ.சி, கம்பரின் சமயப்பொறை, ப.37
20. புறநானூறு.35

21. ஐங்குறுநூறு கடவுள்வாழ்த்து
22. புறநானூறு கடவுள்வாழ்த்து
23. பதிற்றுப்பத்து.43
24. பரிபாடல், 5:22-27
25. சிலப்பதிகாரம்.6:42-43
26. மலைபடுகடாம், 81-82
27. அகநானூறு கடவுள்வாழ்த்து
28. கலித்தொகை.143
29. சிலப்பதிகாரம்.11:69:4
30. மதுரைக்காஞ்சி, 453-455
31. தொல்காப்பியம் பொருள் அதிகாரம், அகத்திணை,5
32. முருகாற்றுப்படை 253-255
33. சிலப்பதிகாரம்.5:170
34. சிலப்பதிகாரம்.14:10
35. சிலப்பதிகாரம்.2:48
36. தொல்காப்பியப் புறத்திணை.5
37. மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை, பா.18
38. திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை, பா.12
39. சைவ சமய வளர்ச்சி, ப.66
40. இந்து சமய உட்பிரிவுகள், ப.86

# இயல் இரண்டு

## பாத்திரங்கள் வழி சைவப்பதிவுகள்

தமிழகத்தின் மிகப்பெரிய இலக்கியங்களில் கம்பராமாயணம் தனித்தன்மை வாய்ந்ததாக மிளிர்கின்றது. மனிதனுக்குள்ள சிறப்பியல்புகளில் இறையுணர்வு குறிப்பிடத்தக்கது. மக்களுக்கு இறைவனைப் பற்றிய உண்மைகளைப் போதிப்பதால் மனிதன் தீய எண்ணங்களை மாற்றிக் கொள்கின்றான். கம்பர் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் பாத்திரங்கள் வாயிலாக இறைவனைப் பற்றி எடுத்துரைக்கின்றார்.

கம்பர் சிவபெருமானைப் பற்றிய பதிவுகளை ஆங்காங்கே இட்டுச் செல்கிறார். கம்பராமாயணத்தில் கம்பர் அமைத்த பாத்திரங்கள் உயிர்த்துடிப்புடையவை. ஒவ்வொரு பாத்திரத்திற்குமுள்ள தனித்தன்மையை வெளிப்படுத்துகிறார். காப்பியம் முழுவதும் பாத்திரங்கள் முன்னுக்குப் பின் முரணின்றி அமைதல் வேண்டும் என்ற அடிப்படையைப் பின்பற்றுகிறார்.

ஒரு சிறந்த சிற்பியால் உருவாக்கப்பட்ட சிலையைப் போன்று கம்பர் ஒவ்வொரு பாத்திரத்தையும் மிக அழகாகவும், நேர்த்தியாகவும் படைத்துள்ளார். வீடணன் முதல் நாற்பத்து இரண்டு பாத்திரங்கள் வாயிலாக சைவ சமயக் குறிப்புகளைத் தருகிறார்.

பாத்திரங்களை உளவியல் பார்வையோடும், ஆளுமைப் பண்புகளோடும் படைத்துள்ளார். கம்பருடைய பாத்திரங்கள் உயிர்த்துடிப்புடையவை நாம் வாழ்க்கையில் காணும் மனிதப் பண்புகளாகவே சில வடிவங்கைளத் தருகின்றார். பாத்திரப் படைப்புத்திறன் கம்பருடைய தனித்தன்மைகளில் ஒன்றாகும்.

“காவியம் என்பது சம்பவங்களால் ஆன கதைச் சக்கரம். இச்சக்கரத்திலே மனிதப் பண்பு என்ற களிமண்ணை வைத்துக் கவிஞன் சுழற்றுகின்றான். கற்பனை என்ற விரலால் அழுத்தமும், வடிவத்தை நோக்கி வளையும் சக்தியும், அந்த மண்ணுக்குத் தருகின்றாள்.”[1]

பாத்திரப்படைப்புப் பற்றி அரிஸ்டாட்டில் நான்கு அடிப்படை நிலைகளைக் கூறுகின்றார்.

1. முதலாவதாக ஒரு பாத்திரம் மனத்தைக் கவரும் வண்ணம் நல்ல முறையில் அமைய வேண்டும்.
2. இரண்டாவதாவது, அது பொருத்தமாகப் புனையப் பட வேண்டும்.
3. மூன்றாவதாக பாத்திரம் வாழ்க்கையில் நாம் காணக்கூடிய பாத்திரமாக இருத்தல் வேண்டும்.
4. நான்காவதாக பாத்திரம் முன்னுக்குப் பின் முரணின்றிப் படைக்கப்படுதல் வேண்டும். (S.H.Butdher– 1972:53:55)

காப்பியத்தின் உயர்நிலைப் பண்பாக பாத்திரப்படைப்பு அமைகிறது. கம்பராமாயணத்தில் தொடக்கத்திலிருந்து இறுதிவரை வரும் பாத்திரங்களையும் கதை நிகழ்ச்சியின் இடையில் தோன்றி ஏதேனும் ஒரு செயலைச் செய்த பின்னர் உடனே மறைந்து விடும் பாத்திரங்களையும் காணமுடிகிறது.

கம்பராமாயணத்தில் பல்வேறு வகையான பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. மனிதர், தேவர், வானரம், முனிவர், அரக்கர், கழுகு மற்றும் கரடி என நூற்றுநாற்பத்தி ஏழு பாத்திரங்களைக் காணமுடிகிறது. ஆவற்றில் சிலவே முதன்மைப் பாத்திரங்களாக அமைகின்றன. ஏனையவை பெயரளவில் காப்பயத் தில் கதைகளில் இடம்பெற்றவை என்ற அளவில் நின்று விடுகின்றன.அவற்றுள் மனித இனத்துள் இராமன், தசதரன், கூனி, கைகேயி ஆகியபாத்திரங்களும் அரக்கர் இனத்துள் இராவணன், சூர்ப்பணகை ஆகிய பாத்திரங்களும் வானர இனத்துள் வாலி, அனுமனும் போன்ற பாத்திரங்கள் இடம்பெறுகின்றன. இப்பாத்திரங்களில் சில சைவ சமயத்தை எங்கெல்லாம் எடுத்தியம்புகிறது என்பதே ஆய்வின் நோக்கமாகும்.

கம்பராமயணத்தில் சைவ சமயக் குறிப்புகள் கவி கூற்றாக நூற்று அறுபத்து எட்டு பாடல்களிலும், பாத்திரக் கூற்றாக இருநூற்று இருபத்து ஏழு பாடல்கள் வாயிலாகவும் கம்பர் வெளிப்படுத்தியுள்ளார்.

**விபீடணன்**

வசிரவசு கேசியன் மக்கள் இராவணன், கும்பகர்ணன், வீடணன் ஆகிய நால்வர். வீபீசணன் என்ற வடசொல் பெயரை வீடணன் எனத் தமிழ்படுத்துவர். வீடணன் என்ற சொல்லுக்கு அச்சம் விளைவிக்காதவன் என்பது பொருள். இராவணன் நீதி நெறி பிறழாதவன். தம்பி விபீடணன் வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும் தூக்கி இராவணனுக்கு அறிவுரை கூறிபவன்.

நியாயத்துக்கு எதிராகச் செயல்பட்ட இராவணனுக்கு உதவாமல், இராமனிடம் அடைக்கலம் புகுந்தான். இராவணனுக்கு பின் இலங்கை அரசனாக பொறுப்பு ஏற்றான்.

**சூலம்**

கம்பராமாயணத்தில் விபீடணன் சிவபெருமான் தீயசக்திகளை அழிக்கும் சிவபெருமானின் ஆயுதமாகத் திரிசூலத்தைப்பற்றி,

**முத்தலை எக்கான் (கம்ப.சுந்தர-115)**

**முச்சிரத்து அயில் தலைவன் (கம்ப.யுத்த-40)**

**சூலியும் வெருக்கொளத் தோன்றினான் (கம்ப.யுத்த-35)**

**சூலத்து அந்தணன்(கம்ப.யுத்த-36)**

முத்தலை, முச்சிரத்து அயில், சூலம் என்ற சொற்களின் மூலமாகப் பதிவுசெய்கின்றான்.

**நஞ்சு**

விபீடணன் நீலகண்டன் உண்ட நஞ்சைப் பற்றி,

**கற்றை அம்சடைக்கடவுள் (கம்ப.யுத்த-2)**

**தாழ்சடைக்கடவுள் உண்ட நஞ்சு (கம்ப.யுத்த-126)**

**கருமணி கண்டத்தான்(கம்ப.யுத்த-40)**

**ஆலம் உண்டவன் (கம்ப.யுத்த-122)**

**இமையா ஆலங்கொள் மிடற்றவன் (கம்ப.யுத்த-60)**

**விடம் ஈசன் தன்னை விழுங்கினும் (கம்ப.யுத்த-212)**

என சிவபெருமான் கறைக்கண்டவன், நஞ்சுண்டோன், கருமணிகண்டத்தான், ஆலம் உண்டவன், ஆலமிடற்றவன், விடங்கொண்டவன் எனப் பல பெயர்களில் சுட்டப்பெற்றுள்ளான்.

**ஐந்துமுகம்**

சிவபெருமானுக்கு ஐந்துமுகங்கள். நான்கு திசைகளை நோக்கி நான்கு முகங்களும் ஐந்தாவது முகம் நடுவில் மேல் நோக்கியும் அமைந்திருக்கும். கம்பராமாயணத்தில் விபீடணன் சிவபெருமானின் ஐந்துமுகங்களைப் பற்றி,

**ஐம்முகன் (கம்ப.யுத்த-70)**

**ஐம்முகன் திருநான் மறையின் நெறியிலே திரிவார்**

**(கம்ப.யுத்த-106)**

என்று குறிப்பிடுகின்றான்.

**மான்**

**மான் இடன் (கம்ப-யுத்த-15)**

**புள்ளி மான் உரி ஆடையான் (கம்ப-யுத்த-53)**

சிவபெருமானின் வேதப்பொருளை உணர்த்தும் மானைப்பற்றிக் கூறும் போது மானை இடக்கையில் ஏந்தியவன் என்றும், புள்ளிமானின் தோலை உடையாகத் தரித்தவன் என்று இயம்புகிறான்.

**கண்**

**முக்கண் தேவனும் (கம்ப.யுத்த.44)**

**முக்கணான் (கம்ப.யுத்த.154)**

**முக்கணான் வரத்தோடு உயர்ந்தான். (கம்ப.யுத்த.52)**

**கண்ணுதல் (கம்ப.யுத்த.145)**

சிவபெருமானின் இடதுகண், வலதுகண், நெற்றிக்கண் ஆகிய மூன்று கண்களையும் சேர்த்து முக்கண்ணான் என்று குறிப்பிடுகின்றார்.

**காளை**

**விடைவருபாகன் (கம்ப.யுத்த.20)**

**விடைவலோற்கும் முடியுமோ (கம்ப.யுத்த.32)**

சிவபெருமானின் காளை உலகத்து உயிர்களை அழிக்கும் எமனை விட வலிமை மிக்கது. காளை செலுத்துவதில் வல்லவன் சிவன்.

**கயிலை**

**மேல் உயர் கயிலை (கம்ப.யுத்த.80)**

**கடம்ஏய் கயிலைக்கிரி கண்ணுதல் எடுத்தவன்(கம்ப.யுத்த-63)**

சிவபெருமான் உறையும் இடமான மேலே உயர்ந்த கயிலைமலை என்றும், காடுகள் நிறைந்த மலை என்றும் கயிலைமலையின் சிறப்பைக் கூறுகின்றான்.

**படை**

**ஈசனின் பெறு படைக்கலம் (கம்ப.யுத்த.86)**

**வன் தாள் மழுவோன் (கம்ப,யுத்த.161)**

**வாள் சிவன் கொடுக்க வாங்கிய அலங்கல் ( கம்ப.யுத்த.32)**

**வயிர வெவ்வாள் சிவன்வயின் வாங்கிக் கொண்டான்**

**(கம்ப.யுத்த-.47)**

**வடிமழுவாள் படையோன் (கம்ப.யுத்த. -221)**

மழுவோன், வயிரவாள், மழுவாள்படையோன் எனப் பல பெயர்களில் சிவனின் மழுப்படையைப் பற்றிக் கூறுகின்றார்.

**முப்புரம்**

**முப்புரம் நெருப்புற எய்த அம்பு (கம்ப.யுத்த.87)**

**சங்கரற்கு ஆழி முப்புரத்தவர் (கம்ப.யுத்த. -63)**

அழிக்கும் கடவுளான சிவபெருமான் தன் கோபத்தால் முப்புரத்தை எரித்ததைப் பற்றிப் பதிவுசெய்கிறான்.

**தொழில்**

படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல், என்னும் ஐந்தொழில்களிலும் சிவன் முதல் தொழிலாகவும், மூலத்தொழிலாகவும் விளங்குின்றான். காத்தல் தொழிலைப் பற்றி,

**காதும் கண்ணுதல் (கம்ப.யுத்த-1)**

**சிவன் என்று எய்தினர் பதம் இழந்தனர் (கம்ப.யுத்த-54)**

பதம் இழந்தனர் என்றும் குறிப்பிடுகின்றான்.

**பிறை**

**பிறை சூடும் பிஞ்ஞன் புரம் (கம்ப.யுத்த.-222)**

என்பதில் இளம் திங்கள் சூடிய சிவபெருமான் என்று கூறுகின்றான்.

**வில்**

**கண்ணுதல்பால் பெற்றான் (கம்ப.யுத்த.-63)**

**ஈசன் வேண்டிப் பெற்றது (கம்ப. யுத்த-235)**

சிவபெருமான் வில்தொழில் சிறப்பாகக் கற்றவன். அத்தகைய பெருமைக்குரிய வில்லைப் பிரமனிடம் சிவன் விரும்பிப் பெற்றதாகக் கூறுகின்றான்.

**இராவணன்**

இராவணன் சிறந்த சிவபக்தன். நாள்தோறும் சிவதிருத்தலங்களுக்குச் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தான். இராவணன் தாயாரும் சிறந்த சிவபக்தை. வயதுமுதிர்ந்த தன்தாய் தினமும் வெளியில் சென்று வழிபடுவதைக் கண்டு மனம் வருந்தினான். எனவே தன் தயாருக்காகக் கையிலையைத் தூக்கிக் கொண்டு வந்து தயார் இருக்கும் இடத்தில் வைக்க முற்பட்டான். இதனைப் புராணங்கள் வரலாறாக கூறுகின்றன.

இராவணன் கைலைமலையைத் தூக்கியபோது வாகீசர் என்ற முனிவர் அதனைக் கண்டு தடுக்காமல் விட்ட குற்றத்திற்காகச் சிவனிடம் சாபம் பெற்று, அப்பர் சுவாமிகளாகப் பூமியில் அவதரித்துத் தேவாரங்களைப் பாடி தனது 81 - ஆவது வயதில் விமோசனம் பெற்று இறைவனடி சேர்ந்தார். இராவணன் வாழ்ந்த இடத்தைச் ‘சிவபூமி’ என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

இராமாயணக் காவியத்தின் நேரெதிர்த் தலைவனாக விளங்குபவன் இராவணன். நிருபர்குல திலகன். தாய் பெயர் கேசரி. தந்தை வச்சிரவசு சிறந்த அழகிக்கும் தவசிக்கும் பிறந்த இராவணன் தேவர்களுக்குத் தலைவன்; பிரம்மனது குலத்தில் உதித்தவன்; பேரழகன்; சிறந்த சிவபக்தன்; வேதங்களை ஓதும் நாவை உடையவன்; சிவன் வீற்றிருக்கும் கயிலையை எளிதாகத் தூக்கியவன்.

இராவணன் பத்துத் தலைகளுடன் பிறந்ததால் தசக்ரீவன் என அழைக்கப்பட்டான். இராவணன் ஆட்சி செய்த இலங்கை நாடே அவன்

பெருமைக்கும் சிறப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாகும். இராவணன் மாற்றாரைப் போற்றும் திறமும், சுற்றத்தாரிடம் கொண்ட காதலும் சிறந்து விளங்குகின்றன.

இராவணன் வடக்கே இருந்து வந்தவன். இலங்கை நாடு அவன் குடியேறிய நாடேயன்றி அவன் சொந்த நாடு அன்று. குபேரனுக்குச் சொந்தமான இலங்கையைக் கைப்பற்றினான். அவன் மிகுந்த வீரம் மிக்கவன். சிவபக்தி உடையவன். தன் நாட்டு மக்களைச் சிறந்த முறையில் ஆட்சி செய்தவன்.

**பிறை - முளைஅமை திங்கள் சூடும் (கம்ப.யுத்த.18)**

**கங்கை - கங்கை சடை வைத்தவன் (கம்ப. ஆரணி-747)**

**கங்கை சூடும் கண்ணுதல் (கம்ப-யுத்த-942)**

**முளைஅமை திங்கள் சூடும் (கம்ப.யுத்த-1234)**

**முக்கண் - விழிதரும் நெற்றியான் வெள்ளி வெற்பு (கம்ப.ஆரணி.8)**

**நெற்றிக்கண்ணன் (கம்ப. யுத்த-29)**

**முப்புரம் - முப்புரத்தை முருங்கச் சுட்ட (கம்ப.யுத்த1243)**

சிவனின் திருவிளையாடலாக முப்புரம் எரித்த செய்தி புராணங்களில் பேசப்படுகிறது.

**“முப்புரம் எரிசெய்த அச்சிவன்**

**ஊறைரதம் அச்சது பொடிசெய்த அதிதீரா”[3]**

என்று திருப்புகழ் கூறுகின்றது.

**நஞ்சு- ஓதவிடம் உண்டவன் (கம்ப.ஆரணி-619)**

**கடுவைத் தான்மிடற்றில் ஒளித்த தக்கோன் (கம்ப.ஆரணி-694)**

**விடம் உண்ட ஒருத்தன் (கம்ப.ஆரணி-699)**

**ஆலத்தின் அடங்குவது அன்றிது (கம்ப.ஆரணி-700)**

**நீலகண்டன் (கம்ப.யுத்த-120)**

என்பனவற்றுள் நீலநிறம் வாய்ந்த திருமேனியையும் தூய அணிகலன்களையும் உடையவன் சிவன் என்பதைக் குறிப்பிட்டுள்ளனர்.

**"நீலமேனி வாலிழை பாகத் தொருவன்"**[4]

என ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்துப்பாடல் விளக்குகின்றது.

**கலித்தொகையில் சிவன் விடம் உண்டதைக் கணிச்சியோன் மணிமிடறு**

**(கலி.105.3)**

என்ற செய்தி இடம் பெற்றுள்ளது.

**சூலம் - நெடுங்கணிச்சி (கம்ப.சுந்தர-1116)**

**சூலம் ஏய தடக்கை அண்ணல் (கம்ப.யுத்த-776)**

**ஈசன் கை இலை மூன்று என்னும் அயில் (கம்ப.யுத்த-1241)**

**நந்தி - மூவரில் பெற்றம் உடையவன் (கம்ப.யுத்த-117)**

**ஓர் ஏறு சிவற்கு உளது (கம்ப.யுத்த-1249)**

மும்மூர்த்திகளில் காளையை வாகனமாக உடையவன். அதற்கு இணையாக வேறு எதுவுமில்லை. இடபம், ஏறு என்ற சொற்கள் மூலம் காளையை இரண்டு இடங்களில் அழைக்கின்றான்.

**மழு - மழுவாள் அங்கை ஈசன் (கம்ப.யுத்த-1249)**

மழுப் படையை அழகிய கையில் தாங்கிய சிவன் என்கின்றான்.

**சுடலை - ஏயவன் தோள்கள் (கம்ப.யுத்த-1242)**

**ஆரங்கில் ஆடுவோர்க்கு அன்புபூண்டு (கம்ப.யுத்த-119)**

சுடுகளத்து உறையும் பேய்களின் பெரிய கூட்டத்தோடு அம்பலத்தில் ஆடுகின்ற பெருமை பொருந்தியவன் என்று இயம்புகின்றான்.

**உருத்திரன் - கற்பகத்தின் அரனே ஒக்கும் (கம்ப.யுத்த-1244)**

**கயிலை - ஈசன்ஆண்டு இருந்த பேர் இலங்கு மால்வரை**

**(கம்ப.ஆரணி.853)**

**விழிதரும் நெற்றியான் வெள்ளி வெற்பு (கம்ப.ஆரணி-896)**

எனவும்

**“கயிலை மாமலை மேவிய கடலே”**[5]

**“மானக் கயிலை மலையாய்”**[6]

அடிகள் மூலம் கையிலை மலையின் சிறப்பைத் திருவாசகம் கூறுகின்றது.

**உமையொருபாகன் -நாரிபாகன் வாளுடைக் கையான்**

**(கம்ப.ஆரணி-858)**

அம்பிகையைப் பக்கத்திலே உடையவன் என்பதை நாரிபாகன் என குறிப்பிடுகின்றான்.

**திருநீறு**

சைவர்களால் நெற்றியில் இடப்படும் புனித அடையாளம் திருநீறு (விபூதி) ஆகும். இதனை,

**நீறு பூசி (கம்ப.யுத்த.3156)**

திருநீறுபூசிய சிவன் என்று இயம்புகிறான்.

**இராமன்**

மனித வடிவிலே வந்த தெய்வம் இராமன். அயோத்தி மன்னன் தசரதனின் மகன் இராமன். ஆண் மகனுக்குக் கூறப்படும் இலக்கணங்களில் குறைவு எதுவும் இல்லாத வடிவினன். 'இராமன்' என்றால் நிகரில்லாத அழகினன். தன் திருமேனியின் அழகாலும், நற்குண நற்செய்கையாலும் பிறரைக் கவா்பவன் என்பது பொருள்.

வெறும் அழகு மட்டுமல்லாமல் அனைத்து உயா் பண்புகளும் கொண்டவன் என்பதைக் கம்பா் 'நடையின் நின்று உயா்நாயகன்' என்கிறாா். மக்கள் பின்பற்ற வேண்டிய பொது அறங்களை இராமன் தன் வாழ்க்கையில் பின்பற்றி உலகுக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தான்.

**"பெருமையும் உரனும் ஆடுஉ மேன"**[7]

என்று தொல்காப்பியம் சிறந்த ஆண்மகனுக்குக் கூறுகின்ற இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவன் இராமன். தெய்வமாகிய இராமன் மானிட வடிவெடுத்துத் தர்மத்தை நிலைநாட்டி வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவன்.

இராமன் வாழ்வில் ஓா் இல், ஒரு சொல், ஒரு வில் என்ற மூன்றும் தான் ஏற்றம் பெற்றவை. இந்தியாவின் உயா்ந்த குறிக்கோளுடைய வீரன் இராமன் என்று வ.வே.சு ஐயரும் இராமனின் சிறப்புகளைப் பாராட்டுகிறாா். தந்தை சொல் மிக்கதோா் மந்திரமில்லை என்ற கூற்றுக்கு இணங்க தந்தையின் சொல்லை மந்திரமாக ஏற்றான். தாய் சொல் தட்டாமல் காட்டிற்குச் சென்றான்.

**கங்கை**

சிவபெருமான் குளா்ச்சி பொருந்திய கங்கையைத் தன் தலையில் சூடியதை

**மாண்ட வால்நிற அருவி அம்மழவிடைப்பாகன் (கம்ப.அயோத்தி-755)**

என்கின்றது. சித்திரக்கூடமலையின் சிகரத்தில் வீழும் அருவிக்கு ஒப்பாக சிவனின் சடையினின்று வீழும் அருவியை உவமையாகக் கூறுகின்றான்.

**பிறை**

சிவபெருமான் தன் தலையில் ஒளிபொருந்திய சந்திரனைச் சூடியதை,

**துண்டம் கொள் பிறையோன் (கம்ப.யுத்த.35)**

என சுட்டுகிறான்.

**திருநீறு**

சைவசமய அடையாளமாக விளங்கும் திருநீற்றை,

**நீறுஅணி கடவுள் (கம்ப.யுத்த-170)**

அனைத்து உயிர்களும் இறுதியில் சாம்பல் என்பதை திருநீற்றின் பெருமையை விளக்குகிறான்.

**முக்கண்**

தீயசக்திகளை அழிக்கும் சிவனின் முக்கண்ணை,

**தொங்கல் மோலியான் விழிபட வெந்ததோ (கம்ப.பால.361)**

**முக்கண்ணான் படை (கம்ப.யுத்த-200)**

நெற்றிக்கண் பட்டமையால் நிலம் வெந்து போகும் அளவிற்கு வெம்மைத் தன்மை உடையதாகக் கூறுகின்றான்.

**நஞ்சு**

சிவபெருமான் கடலைக் கடைந்தவர்களுக்காக, உண்ட நஞ்சைப் பற்றி,

**ஆலம் உண்டவன் கண்டிலீரோ(கம்ப.யுத்த-421)**

**நஞ்சினை மிடற்று வைத்தவன் (கம்ப.யுத்த-417)**

என்ற அடிகள் மூலம் இயம்புகிறான்.

சிவன் நஞ்சுண்டதைக்

**“கண்டம் கறுத்தறி வாரில்லை”[9]**

**“விடம் கொண்ட கண்டன்”[10]**

**“மைதாழ்த் திலங்கு மிடறுடை யோனே”[11]**

என்றும் சுட்டியுள்ளார்.

**முப்புரம்**

சிவனால் எரிக்கப்பட்ட முப்புரத்தைப் பற்றி,

**ஊர் அறுத்த ஒருவன் (கம்ப.ஆரணி-139)**

**ஒருவன் ஓர் அம்பில் சுட்ட புரம் (கம்ப.ஆரணி-239)**

ஈடு இணையில்லாத அம்புகளால் திரிபுரங்களை அழித்தான் என உணர்த்துகின்றான்.

**உமையொருபாகன்**

ஆண்பாதி, பெண்பாதி, தோற்றமளிக்கும் மங்கையொருபாகனை

**தையல்பாகன்** (கம்ப.யுத்த.800)

சிவன் உடம்பில் ஒருகூறாகத் தோற்றமளிக்கும் உமையைச் சுட்டுகின்றான்.

**நந்தி**

சிவபெருமானின் வாகனமான நந்தி (காளை)யை

**விடை வல்லானோ (கம்ப.கிட்கித்தை-63)**

என்ற அடிகள் மூலம் விளக்குகின்றான்.

**மான்**

சிவபெருமானின் பெருமையை,

**மான்மறிக் கரத்தான் (கம்ப.அயோத்தி.321)**

என மான் குட்டியைக் கையில் ஏந்தியவன் என குறிப்பிடுகின்றான்.

**கயிலை**

சைவர்களின் புண்ணிய பூமியாக விளங்கும் கயிலையை,

**ஈசனார் இருக்கை (கம்ப.யுத்த-208-3875)**

சிவபெருமானின் உறைவிடமாகக் கயிலையைக் கூறுகின்றான்.

**மழு**

பகைவர்களையும் எமனையும் அழிக்கும் படையாகிய மழுவை,

**காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான் (கம்ப.கிட்கிந்தை- )**

**பரசுடைக் கடவுள் (கம்ப.யுத்த-53)**

எனவும்

சிவனின் மழுப்படையைப் பற்றி,

**“கையில் மான் மழுவர் கங்கை சூழ் சடையில**

**கதிர் இளம் பறைநறுங் கண்ணி”[8]**

எனப் பெரியபுராணம் கூறுகின்றன.

**தொழில்**

சிவபெருமானின் அழித்தல் தொழிலை,

**இறுதியும் காவலும் இயற்றும் ஈசர் (கம்ப.யுத்த.-45)**

என மொழிகின்றான்.

**சிறப்பு**

தன் அடியார்க்குத் தீமைகளை அழித்து நன்மையை அளிக்கும் சிவனை,

**சங்கரன் கவசம் (கம்ப.யுத்த.-332)**

**ஈசன் என்பது (கம்ப.யுத்த -79)**

**சிவன் அல்லன் (கம்ப.யுத்த-84)**

சங்கரன், ஈசன், சிவன் என்ற சிறப்பு பெயர்களால் அழைக்கிறான்.

தன்னேரில்லாக் காப்பியத் தலைவனாகிய இராமபிரான் சிவபிரானைப் பற்றிப் பல இடங்களில் கூறியுள்ளார். அன்பின் உருவாகவும் அருள் கூர்ந்த நெஞ்சனாகவும் இராமன் பன்முகப்பாங்கினை வெளிக் காட்டியுள்ளான். இராமனுக்கு நிகராக யாரையும் கூறமுடியாது.

**விசுவாமித்திரர்**

இந்தியாவின் மிகப்பெரும் முனிவராகக் கருதப்படுபவர் குசநாபரின் மகன்.இவரது இயற்பெயர் கௌசிகன் வசிட்ட ரோடு ஏற்பட்ட போட்டியின் காரணமாகக் கடுமையான தவங்கள் செய்து முனிவரானார்.

‘விசு’ என்றால் ‘உலகம்’ என்பது பொருள் ‘மித்திரன்’ என்றால் ‘காயவர்’ அவர் என்பது பொருள். இவர் மிகுந்த கோபமும் கொண்டவர். இம்மாமுனிவருக்கு ஒப்பாகத் தவம்புரிந்தோர் யாருமில்லை.

இராமாயணத்தில் பெண்மைக்கு உயர்வு கொடுக்கும் கம்பன், வால்மீகியின் கருத்துக்கு மாறாக அகலிகையும் கற்புடையவளாக விசுவாமித்திரன் வாயிலாகவும் இராமபிரான் வாயிலாகவும் கூறுகின்றார்.

இராமனின் ஆசிரியராகத் திகழ்ந்தவர் விசுவாமித்திரர். உமையொருபாகன், அமரர் கோன், அமரர்கள், முனிவர்கள், தேவர்கள் மற்றுள்ளோரும் வாழ்த்தும் படி வாழ்ந்தவர்

**கங்கை**

**புனிதன் சென்னியில் வான்நதி (கம்ப.பால-**56)

சிவபெருமானை நோக்கி தவமிருந்த கங்காதேவியைச் சிவன் தன் தலையில் சூடியுள்ளான்

இந்திரன் முதலான அமரர்கள் வாழ்கின்ற உலகமும் அஞ்சுமாறு பேரொலி எழுப்பிப் பூவுலகத்திற்கு வந்து சேர்ந்தாள் கங்கை என்னும் நதி, சிதறாமல் தன் சடையில் ஒரு சேர கங்கையை மறைத்து வைத்தான் சிவன் என்பதை

**"தேய்ந்தற் றொழிந்தற் இளமை கடைமறை**

**ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்**

**பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை"**[12]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**பிறை**

**திங்கள் மேவும் சடைத் தேவன் (கம்ப.பால-341)**

**அவிர்மதி அணிந்த தூயவன் (கம்ப.பால-504)**

என்பதில் சிவபெருமான் தலையில் சூடிய சந்திரனைத் தரித்த புனிதன் என்று கூறுகின்றார்.

**முக்கண்**

**கண்ணுதற்கு அன்றி அரிது (கம்ப-பால-525)**

**முக்கணான் அனைய ஆற்றல் முனிவன்.(கம்ப.பால-552)**

**அழல் தரும் கடவுள் (கம்ப.பால-556)**

சிவபெருமானுக்குரிய சிறப்பான நெருப்பை நல்குகின்ற நெற்றிக்கண்ணைப் முக்கணான், அழல் எனவும் கூறுகின்றான்.

**உமையொருபாகன்**

**தையல் பாகன் (கம்ப.பால-495)**

**மங்கை பாகன் (கம்ப. பால -524)**

சிவனும் சக்தியும் இணைந்து தோற்றமளிக்கும் மங்கையொருபாகனை மாது கூறு உடையவன், அம்பிகைகூறு உடையவன் என்கின்றான்.

**நந்தி**

**வெள் விடையவன் (கம்ப-பால -502)**

சிவபெருமானின் வாகனமான நந்தியை வெண்மை இடபத்தை உடைய சிவன் எனச் சுட்டுகிறான்.

**யானைத்தோல்**

மறைகளின் உறைவிடமாக சிவபெருமான் யானைத்தோல் போர்த்தியதை,

**வாரனத்து உரிவையான் (கம்ப.பால-342)**

என்பர்.

**உருத்திரன்**

சைவசமயக் கடவுளான சிவபெருமானால் அழித்தல் தொழில் செய்ய உருவாக்கப்பட்ட உருத்திரனை

**உருத்திரனைச் சாய்த்தான் (கம்ப.பால.-730)**

எனவும் கூறுகின்றார்.

**கொன்றை மாலை**

சிவபெருமான் தன் மார்பில் இதழ் விரிந்த கொன்றைமாலை அணிந்ததை,

**கொன்றைப் பூ நின்ற மவுலி (கம்ப.பால -728)**

என கொத்தாக மலரும் கொன்றை மாலையைப் பற்றி இயம்புகின்றார்.

**கயிலை**

சிவபெருமானின் வாழ்கின்ற கையிலை மலையை,

**வரை உறை புனிதன் (கம்ப.பால -528)**

என கூறுகின்றார். அரசைத் துறந்து தவத்தை மேற்கொண்டவர். காப்பியத்திற்கு வனப்பு செய்வதாக விசுவாமித்திரரின் பங்கு அமைந்துள்ளது.

**அனுமன்**

கம்பராமாயணத்தில் அனுமனுக்கு ஒப்பற்ற இடம் உண்டு. அனுமன் ஆற்றலுக்கும், தொண்டுக்கும் இணையாக உலகில் யாரையும் கூறமுடியாது. அனுமனுக்குச் சுந்தரன், ஆஞ்சநேயர், வாயுதேவன், மாருதி மைந்தன் என்னும் பல பெயர்களும் உண்டு. வானரங்களுக்குத் தலைவைன் ஆவான்.

கேசரி என்னும் வானர அரசன் மனைவியான அஞ்சனா தேவி, வாயுதேவனின் அனுக்கிரகத்தால் பிறந்தவன். சுக்கிரீவன் அமைச்சனாக இருந்தவன். அனுமனின் தந்தை கேசரி நந்தவர்த்தனன் என்றும், வாயுவிற்குப்

பிறந்ததால் வாயுபுத்திரன் என்றும் வாயுநந்தனன் என்றும் அழைக்கப்படுகிறான். “மருத்” என்னும் வடமொழிச் சொல்லுக்குக் ‘காற்று’ என்பது பொருள். எனவே அனுமன் மாருதி என்று அழைக்கப்பட்டான். தாய்வழிப் பெயராக அஞ்சனா புத்திரன் என்பது மருவி ‘ஆஞ்சநேயன்’ என்றும் அழைக்கப்படுகிறான்.

இராமாயணத்தில் இராமனின் தொண்டராயினும், இராமனுக்கும் இலக்குவனுக்கும், சீதைக்கும் நிகரானவன். கம்பராமாயணத்தில் இதயம் போன்று சுந்தரகாண்டம் விளங்குகிறது. இக்காண்டம் அனுமனைத் தலைமைப் பாத்திரமாகக் கொண்டு விளங்குவதால் சுந்தரகாண்டம் என்னும் பெயர் பெற்றது.

**“கதாபாத்திரங்களின் குணாதிசயங்களை முன்னுக்குப்பின் முரண்படாமல், உளவியலுக்கும் இயற்கைக்கும் ஒவ்வும் முறையில் சித்திரித்துக் காட்டுவதில் கம்பராமாயணம் சாலச்சிறந்தது என்ற காசு பிள்ளையின் கூற்றுக்கு அனுமன் பாத்திரப்படைப்பே சிறந்த சான்றாய் அமைகிறது.”**[13]

இராமாயணத்தில் வேறெந்த பாத்திரத்திற்கும் தனிக்காண்டம் இயற்றப்படவில்லை. சுந்தர காண்டத்தை ‘அனுமாயணம்’ என்று அழைப்பர். வேத நாயகனாகிய இராமன் வியந்து போற்றும் துணைவன் அனுமன். தன் சொல்லாற்றலால் அனுமன் வெற்றியைத் தேடித் தருகின்றான்.

உருள் பெருந்தேரான இராமாயணத்துக்கு அச்சாணியாக அனுமன் விளங்குகின்றான. வானத்தைத் தொடும்படியாக வளர்ந்து நின்றவன். கடலைத்தாண்டும் பொழுது கால்களை மலையில் ஊன்றினான். அதன் காரணமாக மலையின் வயிறு கிழிந்து கடல்கள் பிதுங்கி வெளியேறுதல் போலக் குகைகளில் இருந்த பாம்புகள் வெளியே வந்தன.

குரங்கு இனத்தவரின் பேச்சில் ஒழுங்குமுறை இருக்காது என்று எண்ணியவர்களின் அச்சத்தைப் போக்கும் வகையில் கிட்கிந்தா காண்டத்தில் இராமன் வாயிலாகவே அனுமன் ‘சொல்லின் செல்வன்’ என்று உறுதி செய்யப்படுகிறான்.

**உமையொருபாகன்**

சிவபெருமான் தன் உடம்பில் ஒரு பாதியை உமையவளுக்கு அளித்தை

**பாகத்தாள் ஈசன் மகுடத்தாள் (கம்ப.சுந்தர-34)**

எனவும்.

**முப்புரம்**

சிவபெருமான் தன்னுடைய கடுங்கோபத்தால் முப்புரத்தைத் தீப்பட்டு எரியுமாறு அளித்ததை

**காலன் காலமும் அறுக்கும் புங்கவன் (கம்ப.கிட்கிந்தா-161)**

**புரம் தீப்புகப் பொங்கியோன் (கம்ப.சுந்தர-103)**

சிவனின் முப்புரத்திற்கு எவரும் தப்ப முடியாது. காலனின் வாழ்நாளை காலால் உதைத்து அழித்தவன் என்கின்றான்.

**நஞ்சு**

சிவபெருமான் நஞ்சைத் தன் கழுத்தில் தாங்கியவன் என்பதை,

**விடம் துடிக்கின்ற கண்டத்து அண்ணல் (கம்ப.யுத்த-76)**

என நஞ்சைக் கூறுகின்றான்.

**ஊமத்தம்பூ**

சிவபெருமான் நல்ல ஊமத்தம் பூவைச் சூடியவன் என்பதை,

**நல்மத்தம் நாகம் தலைசூடிய நம்பன் (கம்ப.சுந்தர-84)**

என்கிறார்.

**சூலம்**

சிவபெருமான் கையில் சூலம் ஏந்தியதை,

**சூலிதன் அருன் துறையில் முற்றினான் (கம்ப.கிட்கிந்தா-37)**

**காலமும் கணக்கு நீத்த காரணன் (கம்ப.சுந்தர-75)**

என சூலம் பற்றியும் பதிவுசெய்கிறான் அனுமன்.

பெரியபுராணம் சூலத்தைப் பற்றி,

**"வடிவேறு திரிசூலத்தாண்டகத்தால வாழ்த்திப்போய்"**[14]

**நந்தி**

சிவபெருமான் காளையில் ஏறுவதை

**விடையை ஊரும் அண்ணல் (கம்ப. யுத்த-74)**

எனக் குறிப்பிடுகின்றான்.

**வில்**

சிவபெருமானின் வலிமைக்குப் பெயர் பெற்ற தியம்பகம் என்னும் வில்லை

**பல்இறுத்தவன் வலிக்கு அமை தியம்பகம்**

**(கம்ப.கிட்கிந்தா-88)**

**கடற்படையோடும் சிரம்உகச் சிலைகுனித்து**

**(கம்ப. கிட்கிந்தா-91)**

எனவும் இயம்புகிறான்.

**கயிலை**

சிவபெருமானின் கயிலை மலையை,

**ஈசன் கயிலை அம்கிரி(கம்ப.சுந்தர-77)**

**சிறப்பு பெயர் -மூவர்தம்முளும் இருவா (கம்ப.சுந்தர-10)**

**கணிச்சியான் மகனோ (கம்ப.சுந்தர-336)**

**சிவனை அல்லது நிகர் (கம்ப.சுந்தர-142)**

என்ற அடிகள் மூலம் பதிவுசெய்கின்றான்.

அனுமனைக் கம்பர் நற்பண்பும் ஓர் இறைமை இயல்பும் உடையவனாகக் காட்டுகின்றார். ஆற்றலுக்கும் தொண்டுக்கும் இணையாக யாரையும் கூற முடியாது. கூர்ந்த மதிநுட்பத்துடன் இராமாயணத்தில் அனுமன் செய்த சாதனை அளவிடற்கரியது ஆகும்.

**இந்திரசித்தன்**

இந்திரசித்தன் அரக்கர்குலத் தலைவனான அரக்கன். முனிவர்களையும், தேவர்களையும் இதயத்தில் ஈரமின்றி துன்புறுத்தியவன். தந்தையின் செயலுக்கு அரணாக நின்றவன். தன் வாழ்க்கையில் புகழுக்கு முக்கியத்துவம் தந்தவன்

இராவணனைச் சார்ந்த வீரரில் முதலிடம் பெறுபவர் இந்திரசித்து. இராவணனை எதிர்த்துத் தைரியமாகப் பேசக் கூடியவன். அரக்கர்களில் இவனுக்கு இணையாக யாரையும் கூற முடியாது.

இராவணன் மண்டோதரிக்குப் பிறந்த போதே மேகம் போல் முழங்கியதால் மேகநாதன் என்னும் பெயர் பெற்றிருந்தான். மாவீரன். மும்மூர்த்திகளுக்கு இணையான வீரம் பெற்றவன். இந்திரனை வென்று புகழ்பெற்ற இவன், இந்திரசித்தன் என்னும் சிறப்புப் பெயர் பெற்றிருந்தான்.

**பிறை-தேம்பல் பிறை சென்னி வைத்தான் (கம்ப.யுத்த -1962)**

**முக்கண் - முக்கண்ணான்( கம்ப.சுந்தர-994)**

**நஞ்சு-ஆலம் கொண்டு இருண்ட கண்டத்து அமரர்கோன்**

**(கம்ப.யுத்த-3122)**

**நந்தி-விடையின் பாகன் (கம்ப.யுத்த-2240)**

**விடையவன் விலக்கினும் கலக்குவென் (கம்ப.யுத்த.2456**

**வில் -சிவன் எனும் மேலவர் தனுவே (கம்ப. யுத்த- 3018)**

**படை - சிவன் நன்படை தொடுத்து (கம்ப.யுத்த -3040)**

**தானே சிவன் தரப்பெற்றது (கம்ப.யுத்த்.3042)**

**முருகன் -கந்தனார் தந்தையார் (கம்ப-யுத்த -3057)**

**சிறப்புப் பெயர்கள் - சங்கரன் என்பார் தாம் (கம்ப.சுந்தர-993)**

**ஆண்தகை சிவன் (கம்ப.சுந்தர.994)**

எனக் குறிப்பிடுகின்றான்.

இந்திரசித்துத் தான் கற்றிருந்த வான் மறைந்து புரியும் மூலம் போர்த்தொழில் செய்தான். ஆனால் இராமர், இலக்குவர் பால் தெய்வமும் அறமும் துணை நின்றன என்பதை உணராது போனான். எல்லாம் வென்று நின்ற என் புதல்வன் எனத் தன் தாயாகி மண்டோதரியால் பாராட்டப்பெற்றவன்.

**சூர்ப்பணகை**

கம்பராமாயணத்தில் இடம் பெற்ற கதாபாத்திரங்களுள் எதிர்நிலைப் பாத்திரமான இராவணனின் தங்கை, சூர்ப்பணகை. தன் கணவனையும்,

மகனையும் இழந்து பஞ்சவடிக் காட்டில் தனியே வாழ்ந்து வந்தாள். அப்பொழுது தான் இராமன் சீதையுடன் தன் தம்பியுடனும் காட்டில் தங்கினான்.

சூர்ப்பணகை வேண்டும் உருவம் எடுக்கும் வரம் பெற்றவள். இவள் இராமனை அடைய வேண்டுமென்பதற்காகப் பல்வேறு சூழ்ச்சிகளைக் கையாண்டு, அதில் தோல்வியடைந்த ஒரு பாத்திரமாகக் கம்பன் காட்டுகிறார். இராவணனின் உயிர்க்கு எமனாகவும் தன் உற்ற சுற்றம் யாவும், அழிவதற்குச் சூர்ப்பணகையே காரணமாக அமைகின்றாள்.

**சடைமுடி - கற்றைஅம் சடையவன் (கம்ப.ஆரணி -236)**

**கண் - ஈசற்கு மலர்க்கண் மூன்று (கம்ப.ஆரணி -237)**

**ஈசனார் கண்ணில் வெந்தான் (கம்ப.ஆரணி -630)**

**முப்புரம்- முப்புரம் செற்ற சேவலோன் (கம்ப.ஆரணி -263)**

**கயிலை - பொருப்பில் வாழும் அற்புடையவன் (கம்ப. ஆரணி-292)**

**தழல் எடுத்தான் மலை எடுத்தான் (கம்ப.ஆரணி-325)**

**அரன் இருந்த மலை எடுத்த அண்ணா (கம்ப.ஆரணி 333)**

**உமையொருபாகன் - பாகத்தில் ஒருவன் வைத்தான்**

**(கம்ப.ஆரணி.635)**

என சிவன் பாடப்பெற்றுள்ளார்.

சீவகசிந்தாமணி உமையவளைப் பற்றி,

**"திங்கள் சேர் முடியினானும் செல்வியும் போன்று"**[15]

ஆறுமுகமும் பன்னிரு கையும் படைத்த முருகனின் தந்தை உமையவளைத் துணைவியாகப் பெற்றான் என்பதை,

**முருகன் - இருமூன்று வதனத்தோன் தந்தை (கம்ப.ஆரணி 634)**

**சிறப்பு - அரனேயோ (கம்ப.ஆரணி-331)**

**சிவனும் (கம்ப.ஆரணி -328)**

எனவும் சிறப்பித்துள்ளார்.

கம்பராமாயணத்தில் சூர்ப்பணகை தோன்றி இராவணனைச் சூழ்ச்சி மூலம் செய்யாதிருந்தால் இராமகாதை முடிந்து போயிருக்கும். இலங்கை வரை நீண்டிருக்காது இதனால் சூர்ப்பணகை வதைக்கும் வழிப் பிறந்திருக்காது. இதனால் சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம் காப்பியத்தின் திருப்பு மையமாகத் திகழ்கின்றது. தன் அண்ணன் சிவனை ஒத்தவன் என்பதை நிருபிக்கும் வகையில் சிவன் பற்றிய பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

**வசிட்டன்**

'திசை மகன் திருமகன்' என அழைக்கப்படும் இவர் நான்முகன் பிரம்மனின் குமாரர். இவர் மாபெரும் தவம் இயற்றியவர். வேதம் முழு நூல் முழுவதும் உணர்ந்த முனிவர்.

வசிட்டர் என்ற சொல்லுக்கு 'இந்திரியங்களை வசப்படுத்தியவர்' என்பது பொருள் ஞானத்தில் குடி கொண்டவர் என்றும் ஒளி மிக்கவர் என்றும் சுடடுவர். தயரதன் அரண்மனையில் நிகழ்ந்த எல்லா சுப அசுப நிகழ்வுகளையும் அவரே முன்னின்று நடத்தியவர்.

தயரதனை நல்ல அரசனாக்கிய பெரும் முனிவர். இராமன், இலக்குவன், பரதன், சத்துருகனன் ஆகிய நால்வருக்குக் கல்வி கற்றுத் தந்த நல்லாசிரியர் வசிட்டன் மனைவி கற்பினுக்கு அணிகளான அருந்ததி ஆவாள் முனிவர் பல சிறப்புகள் பெற்றிருந்தாலும் அவர் அருந்ததியின் கணவர் என்பது தனிச்சிறப்பாகும்.

**கங்கை - கங்கை சூடும் ஈசன் (கம்ப.பால.211)**

**கண்ணுதலானினும் பெரியர்(கம்ப. அயோத்தி-106)**

**முப்புரம் - புராரியும் புகழ்தற்கு ஒத்தவன் (கம்ப.பால.213)**

**நஞ்சு - களன் அமர் கடு (கம்ப.பால-225)**

**சூலம் - சூலமும் சொல்லும் தாங்கிய (கம்ப.அயோத்தி .1156)**

**ஓண்கவர் எக்கம் (கம்ப.அயோத்தி -106)**

**உமையொருபாகன் - உமைக்கு நாதன் (கம்ப.அயாத்தி** -114)

எனப் பலவாறு பாடியுள்ளார்.

சிவன் உமையொருபாகனாக விளங்கும் அர்த்தநாரீசுவரை உமைக்குக் கணவனாகிய சிவபிரான் என வசிட்டர் இயம்புகின்றார்.

சிவனையும் சக்தியையும் பிரிக்காமல் ஒருமையாகக் காண்பது கொள்வது மரபு இதனையே,

**"அம்மையே அப்பா ஒப்பிலாமணியே"**[16]

என்ற அடிகள் மூலம் திருவாசகம் குறிப்பிடுகின்றது.

**சீதை**

சீதை இதிகாசமான இராமாயணத்தில் ஒரு முக்கிய கதாபாத்திரமாவாள். விசுணுவின் அவதாராமான இராமரின் மனைவியாக இராமாயணம் சித்தரிக்கின்றது. எனவே இவள் லட்சுமியின் அவதாரமாகக் கருதப்படுகிறாள். மிதிலை மன்னர் சனகர், சீதையை பூமியில் கண்டெடுத்து வளர்த்தார். சீதை மணமுடித்துக் கொடுக்க சுயம்வரம் நடத்திய சனகர், சிவனால் தனக்கு வழங்கப்பட்ட சிவதனுசு வில்லில் நாண் ஏற்றுபவருக்கு சீதையை திருமணம் செய்து வைப்பதாக அறிவித்தார். அவ்வில்லை இராமன் நாண் ஏற்றி சீதையை மணந்தார்.

உலகில் தம் வாழ்நாளில் துன்பத்தையே அனுபவித்த பெண்மகளில் சீதைக்கு இணையாக யாருமில்லை. சனகனின் மகளாக வளர்ந்த சீதையின் அழகைக் கம்பர்.

**மஞ்சு ஒக்கும் அளகதி மழை ஒக்கும் வடிந்த கூந்தல்**

**பஞ்சு ஒக்கும் அடிகள் செய்ய பவளத்தின் விரல்கள்**

**(கம்ப.3136)**

என்கிறார். இராமாயணத்தைச் சீதாயணம் என்பர். சீதையின் கதையே இராமனின் கதை.

நாற்குணமும் நாற்படையாகக் கொண்ட நங்கையர்க்கு அந்நான்கு பண்புகளிலும் நாணமே சிறந்தது என்பர். அந்த நாணத்தைக் காட்டிலும் கற்பு தான் மிகமிகச் சிறந்ததென்று கூறுவர். இதனையே,

**“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**

**செயிர்தீர்க் காட்சிக் கற்புச் சிறந்தன்று”**[17]

**(தொல்-பொருள்-களவியல்.111)**

என்கிறார் தொல்காப்பியர். இதனைத் தெய்வப்புலவர் திருவள்ளுவர்,

**“சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்**

**நிறைகாக்கும் காப்பே தலை”**[18]

**(திருக்குறள்.வாழ்க்கைத்துணைநலம்.57)**

என்று கூறியுள்ளார். மகளிருக்கு உயிரினும் உயர்வானது கற்பு எனலாம். கம்பராமாயணத்தில் உயிர்நாடி போன்று விளங்குபவள் சீதை. தன் வாழ்க்கையில் துன்பத்தையே அனுபவித்த பெண்மணிகளில் சீதைக்கு ஈடு இணையாக உலகில் யாருமில்லை குறிப்பிடமுடியாது. சீதையைப் பொறுமை என்னும் கடலும், கற்பென்னும் மலையும் அரணாகக் காத்தது. இதனையே,

**“கற்பு நிலையென்று சொல்ல வந்தால் இரு**

**கட்சிக்கும் அ.்.து பொதுவில் வைப்போம்”**[19]

**(பாரதியார் கவிதைகள், பெண்விடுதலை.499)**

இராமனின் தந்தை தசரதன் அறுபதினாயிரம் மனைவியரை மணந்தவன் ஆனால் இராமன் ‘ஒருவனுக்கு ஒருத்தி’ என்ற கொள்கையைக் கொண்டன்..

சீதை தனக்கென்று சில நெறிகளை வகுத்துக் கொண்டு வாழ்ந்தபோதும் கணவர் இட்ட கட்டளையை மீறாதவளாகக் கம்பன் காட்டுகின்றார். அசோகவனத்தில் சீதையைக் கண்ட அனுமன் அவளைத் தன் தோளில் ஏற்றி அழைத்துச் செல்கின்றேன் என்றபோது அதை மறுக்கும் சீதையின் கூற்று அவள் சுயமரியாதைத் திறத்தை நன்கு புலப்படுத்துகிறது.

**கங்கை- வெள்ளம் சென்னி ஏற்றவன் (கம்ப.சுந்தர -449)**

**முப்புரம் - வென்றவன் புரங்கள் வேவத் (கம்ப.சுந்தர-451)**

**காளை- விடையின் பாகன் (கம்ப.யுத்த- (3996)**

**மழு-மழுவாலன் (கம்ப.யுத்த -3996)**

**சிறப்பு -இப்பெரும் செல்வம் ஈந்த பேரீசன் (கம்ப.சுந்தர-460)**

என்பது போற்றத்தக்கது.

சீதை அறத்தின் பால் அழியாத நம்பிக்கை வைத்தவள். அவள் பெண்மையின் ஒப்பற்ற குறியீடு. நல்லருள் அமையப் பெற்றவள். இத்தகைய பெருமைக்குரியவள் ஆங்காங்கே சிவனைப் பற்றி இயம்புகிறாள்.

**பரசுராமன்**

பிருகு முனிவருக்கும் சத்யவதிக்கும் பிறந்தவர் சமதக்னி. இவருக்கு மக்கள் உருமதி, கூத்ராகன், விச்வாவசு, பரசுராமன் என நால்வர்.

'பரசு' என்றால் 'கோடரி' என்று பொருள். சிவபிரானிடம் பரிசு பெற்று அதையே படைக்கலனாகக் கொண்டிருந்தார். மகேந்திர மலையில் தங்கித் தவம் கொண்டிருந்தபோது மிதிலையில் இராமபிரான் சிவதனுசை முறித்த ஒலி கேட்டு வந்தார். வில்லின் ஓசை மகேந்திர மலை வரைக் கேட்டது சிறப்பு இதனை,

**பிறை -வெண்மதிப் பாதியான் (கம்ப.பால-1384)**

**முக்கண் - நெற்றியில் கண்ணன் (கம்ப.பால1377)**

**முப்புரம் - திரிபுரம் எரித்த தேவன் (கம்ப.பால-1376)**

**உமை -உமை அண்ணல் (கம்ப.பால-1372)**

**உமையாள் கேள்வன். (கம்ப-பால- 1374)**

எனப் பலவாறு சிறப்பிக்கப்பட்டுள்ளன.

அகநானூறு உமையம்மையைப் பற்றி,

**"சேர்ந்தோள் உமையே"**[20]

என்றது.

சிவனின் ஒரு கூறாக இருக்கின்றாள் என்பதை விளக்குகின்றது. பரசுராமன் திருமாலின் ஆறாவது அவதாரம் என்றும், அதனை, இராம அவதாரம் கொன்றுவிட்டது என்றும் கூறுவர்.

**சுக்கிரீவன்**

இருதாச்சு கிட்கிந்தையின் மன்னன். அவன் மைந்தன் வாலி, சுக்கிரீவன் ஆவர். வாலிக்கு இருதாச்சு அரசுரிமைப் பட்டம் சூட்டினான். சுக்ரீவன் இளவரசன் ஆனான்.

வாலி தாரை என்பவளையும், சுக்கிரீவன் உருமை என்பவளையும் மணம் செய்து கொண்டனர். அனுமன் உதவியால் இராமனுடன் இணைந்தான். இலங்கைப் படையெடுப்பின் போது பெரும் உதவி புரிந்தான்.

**கங்கை – ஆறுகொள சண்டிலத்தான் (கம்ப.கிட்கிந்தை-100)**

**கங்கையின் கணவன் (கம்ப.கிட்கிந்தை -190)**

**கயிலை - கடவுள் தன் கயிலை (கம்ப.கிட்கந்தை-191)**

**உமையொருபாகன் - முருகன் தந்த தளரி பாகத்தான்**

**(கம்ப.கிட்கிந்தை -219)**

**சிறப்புப் பெயர் - அரன் அதிகன் (கம்ப.கிட்கிந்தை.-776)**

எனச் சிறப்பிக்கப்படுகிறான்.

சிவபெருமானின் கயிலை மலையைத் தன்னுடைய கொம்பினால் குத்திக்கொண்டு எழும் அளவிற்கு வலிமையுடையவனாக விளங்கினான்.

**தயரதன்**

தயரதன் சூரிய குல மன்னன். அயன் -இந்துமதிக்குப் பிறந்தவன். இராகு குலத் தோன்றல். அயோத்தி வேந்தன். இராமாயண காப்பியத் தலைவனைப் பெற்ற தந்தை. தசரதன் ஓரே நேரத்தில் பத்துத் தேர்களைச் செலுத்தும் ஆற்றல் பெற்றதால் அப்பெயர் பெற்றான். பூமியைச் சுற்றியுள்ள திசைகள் எட்டு, இதனுடன் வானம், பூமி எனும் இரண்டு திசையையும் சேர்த்துப் பத்துத் திசைகளிலும் ஓரே சமயத்தில் தேர் செலுத்தும் வல்லமை பெற்றவன்.

கோசலைநாட்டு மன்னன் தயரதன். அருள், அன்பு, அறம், ஈகை, வீரம், நீதி ஆகிய பண்புகள் நிறைந்தவன். மன்னர்களுக்கெல்லாம் மன்னனான சக்கரவர்த்தி என்று கம்பர் குறிப்பிடுகின்றார்.

தயரதன் மன்னனுக்குக் கோசலை, சுமித்திரை, கைகேயி என மனைவியர் மூவர். இவர் பெருமை பொருந்திய இராமாயணக் கதைக்குத் தலைவனான இராமனின் தந்தை. அயோத்தியைத் தலைநகராகக் கொண்ட கோசல நாட்டை ஆட்சி செய்தவன்.

**சடைமுடி - கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்**

**(கம்ப.பால-819)**

**கங்கை - கங்கை புடையூற்றும் சடையான் (கம்ப..பால.329)**

**வில் - இறைவன் போர்வில (கம்ப,யுத்த-355)**

**சிறப்புபெயர் - சிவனும் (கம்ப.பால- 1365)**

என தயரதன் சிவனைப் பற்றி பல இடங்களில் பதிவுசெய்துள்ளான்.

**இலக்குவன்**

இராமனின் இணைபிரியாத சகோதரன். காப்பியத்தில் சிறந்த பாத்திரங்களில் ஒருவன். ஆதிசேடனின் அவதாரமாகிய இலக்குவன் 'இளைய பெருமாள்' என்று போற்றப்படும் சிறப்பு மிக்கவன். இராமனை விட்டு நீங்காமல் நிழல் போல பின்தொடர்பவன். தவ வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் கூட தூக்கத்தைத் துறப்பதில்லை. ஆனால் தன் அண்ணனுக்காக பதினான்கு ஆண்டுகள் உறக்கமின்றி சிறந்த தம்பியாகத் திகழ்கின்றான்.

இலக்குவன் போர்புரிவதில் திரிபுரத்தை எரித்த சிவனுக்கு நிகரானவன். ஒப்பற்ற வில் வீரன் என்பதை

**திரிபுரம் செற்ற தேவனும் இவனுமே செருவின**

**ஒருவிலாளர் என்று ஆயிரம் கால் எடுத்து உரைத்தான் (கம்ப.7499)**

**முப்புரம் - புரம் சுடும் ஒருவன் (கம்ப. அயோத்தி-1123)**

**திரிபுரம் எரித்த புங்கவன் (கம்ப.ஆரணி- 820)**

**கண்ணுடை நுதலினன் (கம்ப.கிட்கிந்தை- 551)**

**ஐந்துமுகம் - சிவன் ஐம்முகம் உடையான் படை**

**(கம்ப.யுத்த- 3048)**

என பாடலடிகள் தெளிபடுத்துகின்றன.

இலக்குவன் பாசத்தில் பரதனுக்கும் வில்லாற்றலில் இராமனுக்கும் இணையானவன். தன்னலம் கருதாமல் வாழ்ந்தவன்.

**சடாயு**

சூரியனின் தேரோட்டியும் கருடனின் உடன்பிறப்புமான அருணனுக்கும் சேதிக்கும் பிறந்தவர் சடாயு. இது ஒரு ஆலமரத்தில் தங்கி வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுகிறது. 'எருவை வேந்தன்' என்று கம்பர் சிறப்பாகக் குறிப்பிடுவார்.

சடாயு என்னும் சொல்லுக்குப் பல மயிர்கள் சேர்த்துத் திரித்த சடை போன்ற வாழ்நாளைக் கொண்டவன் என்பது பொருள். இறகில் தன் உயிரை உடையவர் என்றும் சடையை உடையவர் என்றும் பெயர்க்காரணம் குறிப்பிடுவர்.

சடாயு தயரத மன்னனின் உற்ற உயிர் நண்பர். தயரதன் ஒருசமயம் வேட்டையாடிய களைப்பால் படுத்திருந்த போது கடிக்க வந்த நாகத்தைக் கொன்று அம்மன்னனைக் காத்தவர் சடாயு. கனிகள் கொடுத்து மன்னன் களைப்பைப் போக்கியவர்.

தயரதனின் மூத்தவர் என்னும் உடன்பிறப்புச் சிறப்பைப் பெற்றவர். ஆரண்ய காண்டத் தலைவனாகச் சடாயு குறிக்கப்படுகிறார். சீதையைக் காக்க இராவணனுடன் போராடிக் கீழே சாய்ந்தார்.

இராமனால் இறுதிக் கடன்கள் நிறைவேறப் புண்ணியம் பெற்றார். உலக இலக்கியங்களில் விலங்குகளும், பறவைகளும் இடம்பெற்றிருந்தாலும் கம்பநாடன் சடாயு என்ற பறவையை ஒப்பற்ற முறையில் உருவாக்கித் தன் 'உயிர் புகழுக்கு விற்ற சடாயு' என்று பேசுமாறு பாத்திரத்தை அமைத்துள்ளார்.

**முப்புரம் - புரம் பற்றிய போர் விடையோன் ( கம்ப.ஆரணி-912)**

**முப்புரங்களை எய்த வில்லியார் (கம்ப.ஆரணி-1006)**

**மழு - மழுவலானும் கரந்தலர் (கம்ப. ஆரணி- 188)**

**வாள் - அரன் தந்த வாளால் படுத்தனன் (கம்ப. ஆரணி-1011)**

என்பன சிவன் சிறப்பை உணர்த்துவன.

சடாயு தன் கடைசி மூச்சிலும் இராமன் எதிரிலும் நிற்பதால் விண்ணுலகப் பேறு கிட்டும் என்று உணர்ந்தான். இத்தகைய பெருமை பெற்ற சடாயு சிவனைப் பற்றிப் பல இடங்களில் இயம்புகின்றான்.

**சாம்பவன்**

பிரம்மன் கெட்டாவி விட்டப்போது, அதனின்று சாம்பவன் தோன்றினான். எனப் புராணக் குறிப்புகள் புகழ்கின்றன. சாம்பவன் மிகத் தொன்மையானவன். திருமால் திருவிக்கிரம அவதாரதம் எடுத்தபோது, அவனது திருவடிகள் மூவுலகை அடைந்ததைக் கண்டதாகவும், அத்திருவடிகள் சென்ற இடம் எல்லாம் சாம்பவன் சென்று பார்த்த பொழுது, தனது கால் பட்டு இடறியதால் தனக்கு ஊனம் ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது. பிரம்மதேவனின் கூறாகவும் கரடித் தலைவனாகவும் விளங்குகின்றான்.

**நஞ்சு – ஆலம் நுகர்ந்தவன் (கம்ப. கிட்கிந்தை-1030)**

**கறைமிடற்றவன் (கம்ப. யுத்த -3307)**

**சிறப்புப்பெயர்- சிவன் அலால் (கம்ப.யுத்த- 2742)**

என்பன சிவனின் சிறப்புக்குச் சான்றுகளாகும்.

சாம்பாவன் மிகப்பழையோன் என்பதை தமிழத்தாத்தா உ.வே.சா குறுந்தொகையில் குறிப்பிட்டுள்ளார்.

**மகோதரன்**

இராவணனுக்கு ஏற்றாற்போல் பேசிக் காலம் கழித்தவர்களில் மகோதரன் ஒருவன். வசிரவசுதேவி யுத்போத்கடை ஆகியோரின் மகன். இராவணனுடைய சிறிய தாயாரின் மகனாவான். இவனைக் கம்பர் மோதரன் என்று குறிப்பிடுவார். இவன் இராவணனுக்கு அமைச்சராய் இருந்தான்.

மகோதரன் என்றால் மகாஉதரம் - பெருவயிறு உடையவன் எனப்பொருள். இராவணனின் ஒன்றுவிட்ட சகோதரனான மகோதரன் இலங்கையை எரித்த குரங்கையும் மனிதரையும் கொன்று பகைமுடித்துத் திரும்புவேன் என்றான்.

**கங்கை – கங்கை அம் சென்னியான் (கம்ப. யுத்த-3202)**

**முப்புரம் - தனிச்சரம் துரந்த செல்வன் (கம்ப.யுத்த- 1254)**

சிவன் திரிபுரத்தைப் எரித்த செய்தி புராணங்களில்

**“முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம் அச்சது பொடிசெய்த”[21]**

என்று பேசப்படுகிறது.

**கயிலை –வெள்ளியங் கிரியினை அள்ளிய ஆற்றல்**

**(கம்ப.யுத்த-3203)**

உடையவன் என்பர்.

மகோதரன் இராவணனுக்குத் தம்பி என்னும் வகையில் நல்ல உறவினன். சீதையைக் கொல்வது தவறு என்று இராவணனுக்கு அறிவுரை கூறினான். சிவன் பற்றி செய்திகளைக் காப்பியத்தில் வெளிப்படுத்தியுள்ளான்.

**அதிகாயன்**

இராவணனுக்கு அரசுரிமை பெற்றஅரசியர் இருவராவர். மண்டோதரிக்குப் பிறந்தோர் இந்திரசித்தனும்,அதிகாயனும் ஆவர். தானியாமாலிக்குப் பிறந்தவன் அதிகாயன். அதி என்றால் மிகுதி காயம் என்றால் உடல். பருத்த பெரிய உடலைப் பெற்றதால் அதிகாயன் எனும் பெயர் பெற்றான்.

அதிகாயன் போர் அறம் கற்றவன். அதைக் காப்பவன். மாயம் செய்து மற்றவரை ஏமாற்றிப் போர் புரியாத பண்பினன். கும்பகர்ணன் இராமனால் மாண்டு இராவணன் கையறு நிலை அடைவதைப் போல், இராமன் இலக்குவனை இழந்து துன்பம் அடைய வேண்டும் என்பதே அதிகாயன் கோட்பாடு. இவன் சிவனை,

**உமை – உமை ஒரு பாகன் (கம்ப.யுத்த-1855)**

**உமை ஒரு கூறன் காக்க (கம்ப.யுத்த-1866)**

என்கின்றான் ஒலி வடிவாக நின்றவன் சிவசக்தியாய் பிரிக்க முடியாத பராபரனாக விளங்குபவன் என்பதை

**"பெண்ணொருபாகம் பிறவி பெண்ணாமே"[23]**

என்பதில் அறியலாம்.

சிவசக்தியாய் உள்ள சிவன் உலக படைப்புக்காக ஆணாக (சிவன்) பெண்ணாக (சக்தி) இருந்தாள் என்று கூறுகின்றான்.

**ஐந்துமுகம்- அஞ்சு முகத்தவன் (கம்ப.யுத்த–1684)**

அரக்கர்கள் மாயம் செய்து போர் புரிதலில் வல்லவர்கள். ஆதிகாயன் அவ்வாறு செய்யாதது தனிச் சிறப்பாகும். சிறந்த வீரனாகவும் விளங்கினான்.

**மண்டோதரி**

மண்டோதரி இலங்கையை ஆண்ட இராவணன் மனைவி. இலங்கையின் இராணி,'மண்டோதரி' என்றால் 'மென்மையான இடையை உடையவள்' எனப்பொருள்படும். மாயாசுரனின் வளர்ப்பு மகள்.

இராமாயணத்தில் மண்டோதரி ஒரு துணைக் கதாபாத்திரமாக அமைந்து இருந்தாலும் அவளின் பாத்திரம் முக்கியமானது. அவள் தன் கணவன் மீது அளவு கடந்த அன்பு கொண்டிருந்தாலும் ஒருபோதும் தன் கணவனின் செயலுக்குத் துணை போகவில்லை. இறுதிவரை அவள் நேர்மையானவளாகவே திகழ்ந்தாள்.

காப்பியத்திற்கு நேர் எதிர் தலைவனாக விளங்கும் அரக்கனான இராவணனின் மனைவி மண்டோதரி. தன் கணவன் சிறந்த சிவபக்தன் என்பதால் நாள்தோறும் பல சிவத்திருத்தலங்களுக்குச் சென்று சிவனை தரிசித்து வந்தாள்.

**முக்கண் - முக்கண் முதலினோர் (கம்ப.யுத்த -3196)**

**சடைமுடி - வெள் எருக்கம் சடை முடியான் (கம்ப.யுத்த-3906)**

**சிவன் - சிவனார்க்கும் வலியான் (கம்ப.யுத்த-3909)**

எனச்சிவனைப புகழ்கின்றான்.

அகநானூறு,

**“ஞாலம் நாளும் நலங்கெழு நல்லிசை**

**நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்”**[22]

என்ற அடிகள் மூலம் சிவனின் பெருமை பேசுகிறது.

மண்டோதரியை வான மங்கையரும் விஞ்சையரும் கற்புடைய மங்கையரும் வாழ்த்தினர். தமிழ்நாடடில் சீதை, தாரை, அகலிகை, பாஞ்சாலி, மண்டோதரி, ஆகிய ஐவரைப் பஞ்ச கன்னியராக வழிபடும் வழக்கம் இருந்து வருகின்றது.

சீதையை விட்டுவிடும்படி இராவணனுக்கு அறிவுரை கூறினாள். காப்பியத்தில் சைவ சமயமுழுதற் கடவுளான சிவனை வழிபடும் பெண் மகளாகத் திகழ்கின்றாள்

**மாரீசன்**

சுந்தன் என்ற யட்சர் தலைவனுக்கும் தாடகைக்கும் பிறந்தவன் மாரீசன். மாரீசன் தன் சகோதரன் சுவாகு, தந்தை சுந்தன் ஆகியோருடன் அகத்தியர் சோலையை உருக்குலைக்க, அவர் தந்த சாபத்தினால் மாரீசன் அரக்கனாக மாறினான். தாய் தாடகையின் கட்டளையாலும், இராவணன் ஆணையாலும் முனிவர் தவங்களையும், வேள்விகளையும் கலைக்கும் செயலைச் செய்தான். விசுவாமித்திரர் வேள்வியின் போது இராம கணைக்கு அஞ்சி கடலிற்போய் ஒளிந்து தவம் மேற்கொண்டான். நல்ல பண்புகளைக் கொண்ட மாரீசனை இராவணன் அணுகி வன்செயலுக்கு மாற்றுகின்றான். இவன் சிவனை,

**வில் - ஈசன் இகல் வில்லாய் வடித்தமலை (கம்ப.ஆரணி-750)**

**சிறப்பு - ஈசன் முதல் இமையோர் (கம்ப. யுத்த.655)**

என்கின்றான்.

“விதிபிடர் பிடித்து உந்த” மாரீசன் இராவணன் செற்படி கேட்டு மானாகி மாயம் பல செய்து இராமனின் வாளால் மாண்டான் என்பர்.

**வாலி**

கிட்கிந்தையின் வானரஅரசன். சுக்கீரவனின் மூத்த சகோதரனும் சிறந்த வீரனும் ஆவான். வானரம் என்பது மனிதரிலும் சிறிது வேறுபட்ட வடிவமுடையது. தொல்காப்பியர் மக்கள் தாமே ஆறிவுயிரே, பிறவும் உலவே அஃறிணைப் பிறப்பே என்று சுட்டுகின்றார். இராமாயணத்தில் வானர இனத்தைச் சார்ந்த வாலி சிறந்த சிவ பக்தன்தான் எந்த இடத்திற்குச் சென்றாலும் அந்த இடத்தில் லிங்க வழிபாடு செய்பவன். வாலிக்கு மனமெல்லாம் சிவமயம். தன்னுடன் போரிட யாரேனும் எதிரில் வந்தால் அவர் ஆற்றலில் பாதியைத் அடையும் வரம்பலம் பெற்றவன். வாலியின் ஆற்றல் அளவிடற்கரியது.

திருப்பாற்கடலைத் தான் ஒருவனாக இருந்து கடைந்த தோள் வன்மை உடையவன். எட்டுத்திக்குகளின் எல்லைவரை சென்று நாள்தோறும் அட்டமூர்த்தி எனப்படும் சிவபெருமானின் திருவடிகளை வணங்கும் அன்புடையவன்.

**கிட்டு வார்பொரக் கிடைக்கி னன்னவர்**

**பட்ட நல்வலம் பாக மெய்துவான்**

**அட்ட மூர்த்திதாள் பணியு மாண்பினாள் (கி.கி-ந.கோ.40)**

இவனின் சிவபக்தியை பாடல் வழி அறியமுடிகின்றது.

**சூலம் - நீலகண்டன் நெடுஞ்சூலம் (கம்ப.கிட்கிந்தை-309)**

**முப்புரம் - புரம் எலாம் எரிசெய்தோள் (கம்ப. கிட்கிந்தை-322)**

என்கின்றான்.

வாலி தன் மார்பில் தைத்த படையை நீண்ட சூலப்படையோ மலையை உருவிச் சென்ற முருகக்கடவுளின் வேலோ என எண்ணும் அளவிற்கு வலிமை பெற்றிருந்தாகக் கூறுகின்றான்..

கலித்தொகை சிவன் முப்புரம் எரித்ததை,

**‘‘எயில் எய்யப் பிறந்த எரிபோல (கலி-150)’’**[23]

என்கின்றது. வாலியின் தோள் வலிமைக்குத் தேவர்களும் அஞ்சுவா. வீரருக்கே உரிய கலாச்சாரம் பண்பாடு கொண்டவன்.

**இலங்கை மாதேவி**

இலங்கை நகரை நான்முகனின் ஆணையினால் காவல் செய்து வந்தவள் இலங்கை மாதேவி. எட்டுத்தோள்களையும், நான்கு முகங்களையும் உடையவள். ஏழு உலகத்தையும், தொட்டு மீளுகின்ற ஒளிபொருந்திய நிறத்தையும் உடையவள். பொறுமை இல்லாதவள். இலங்கை நகரைப் பிரம்மனது கட்டளையால் காத்து வருகின்றாள். இதனை நான் காப்பேன் என்று பிரம்மனிடம் கேட்க, அதற்று வலிமையுடைய குரங்கு தீண்டி வருந்தும் நாளில், நீ என்னைக் காண்பாய் என்று கூறினான். அனுமன் இலங்கைக்குச் சென்றதும் இந்நகரத்துக்கு முடிவுகாலம் வந்துவிட்டது என்று எண்ணி அனுமனை வணங்கிவிட்டு அவள் பிரம்மலோகம் சென்றாள்.

**முப்புரம் அட்டானோ நீ (கம்ப.யுத்த -179)**

**நஞ்சு - நஞ்சம் கொண்ட கண்ணுதல் (கம்ப.சுந்தர -181)**

இலங்கைக்குள் பிறா் புகுவதற்கு அஞ்சும் தன்மையுடையவளாக விளங்குகின்றாள் இலங்கை மாதேவி.

**அக்குமாரன்**

இலங்கை வேந்தன் இராவணனின் குறிப்பிடத்தக்க சிறப்பைப் பெற்ற மனைவியர் இருவர். ஒருத்தி மண்டோதரி, மற்றவள் தானியமாலி. மண்டோதரியின் மக்கள் இந்திரசித்து அக்குமாரன் ஆகியவர் ஆவர்.

அட்சயக்குமாரன் என்று வான்மீகி வழங்கிய பெயரைக் கம்பர் அக்குமாரன் என்று குறிப்பிட்டார். அழிவில்லாதவன் எனும் பொருளில் இந்திரன் இவனுக்கு அட்சன் எனப்பெயரிட்டார்.

அக்குமரன் ஒருமுறை இந்திரனிடம் போர் புரிந்த போது, தேவ அரசன் இருநூறு குதிரைகள் பூட்டிய தேரினைத் தன்னிடம் விட்டு அவனை ஓடச் செய்தவன். இராவணனிடம் வீரம் பேசி வெளிச் சென்ற அக்குமாரன் அனுமனால் மாண்டான்.

இராவணனிடம் அக்குமாரன் தந்தையிடம் வந்திருப்பது ஒரு வானர குரங்கு. முக்கண் உடைய கடவுளின் ஊர்தியான காளையுடன் போரிடுவது சிறப்பு மிக்கது. ஆனால் அற்பக் குரங்கை எதிர்த்து போரிடுவது பெருமைக்குரியது அல்ல. ஆகையால் குரங்குடன் போர் புரிய தன்னை அனுப்புமாறு வேண்டினான். உமையவளை ஒருபாகமாகக் கொண்டு விளக்குகின்ற சிவனே நமக்கு இழிவை ஏற்படுத்தும் பொருட்டு, மரத்திற்கு மரம் தாவுகின்ற குரங்கின் வடிவம் கொண்டுள்ளான் என்பதை,

**முக்கண் - முக்கணான் ஊர்தி அன்றேல் (கம்ப.சுந்தர.935)**

**இமையா முக்கண் ஈசனே (கம்ப.சுந்தர.937)**

என்றும் சிவனைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

**கும்பகர்ணன்**

“செஞ்சோற்றுக் கடன் கழித்த செம்மல்” என புகழப்படுபவன் கும்பகர்ணன். திருமால் துயில் உணர்ந்து எழுந்தால் அரக்கர்கள் அழிவார்கள். கும்பகர்ணன்

துயில் உணர்ந்து எழுந்தால் அமரர்கள் அழிவார்கள் என்று ஒரு வழக்கு உண்டு.

கும்பம் போன்ற காதுகளை உடையவன். அதனால் அவன் கும்பகர்ணன் எனப்பட்டான். பிரம்மனை நோக்கி பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்தவன். சிவனிடம் சூலாயுதமும் கவசமும் பெற்றவன். அண்ணன் இராவணனின் சொல்லுக்கு கட்டுப்பட்டவன். போரில் இறப்போம் என்று அறிந்தும் தமையனுக்காக வாழ்ந்து உயிர் கொடுத்த உத்தமன் கும்பகர்ணன்.சிவனை

**உமையொருபாகன் - பிணை ஒன்று கண்ணாள் பங்கன்**

**(கம்ப.யுத்த.1377)**

**முப்புரம் - திரிபுரம் செற்ற தேவன் (கம்ப.யுத்த.1446)**

பெண் மானின் கண்ணையும் உமையவளையும் பக்கத்திலேயே கொண்டவன். திரிபுரத்தை எரிக்கும் நெற்றிக்கண்ணை உடையவன் எடுத்து மொழிகின்றான்.

**மாலியான்**

சிவனை

**சூலம் - சூலியைத் தூக்கிய தோள் (கம்ப.யுத்த. 2800)**

**கங்கை - கங்கை சூடிதன் கடுஞ்சிவை ஒடித்த ஓதை**

**(கம்ப.யுத்த.3247)**

எனக் குறிப்பிட்டுள்ளான்

**மாதலி**

இந்திரனின் தேர்ப்பாகன் மாதலி. இலங்கையில் இராவணன் இறுதிப்போருக்குத் தன் தேரில் எழுந்தான். அப்பொழுது சிவபெருமான் "வானவரை நோக்கி இராமன் இப்போரில் வெல்வன்" அவனுக்கு வெற்றி நல்கும். குதிரைகள் பூட்டிய தேரை அனுப்புங்கள் என்றார். தேவர்கள் இதனை

இந்திரனிடம் இயம்பினர். இந்திரன் தன் தேர்ப்பாகன் மாதலியை அழைத்து ஒப்பற்ற தேரைக் கொணரச் செய்தான. இவன் சிவனை,

**முப்புரம் - முப்புரம் எரித்தவன் (கம்ப.யுத்த.-3657)**

**சிறப்பு - சிவனும் முன் நின்று ஏவினர் (கம்ப.யுத்த-3665)**

என்கின்றான்.

தேவர்களும், இருடிகளும், சிவனும் பிரம்மனும் சொன்னபடி இந்திரன் தந்த தேர் இது என மாதலி சொன்னான். இத்தேர் ஊழிகாலத்தும் அழிவில்லாதது. ஆயிரம் ஆதவர்களுக்குச் சமமானது. இத்தேர் சிவன் முதலியோர் கட்டளைப்படி பெறப்பட்டது என மாதலி கூறுகின்றான்.

**நீலமாலை**

இராமாயணத்துள் நீலமாலை சிறுபாத்திரமானாலும் மங்கலச் செய்தியைச் சீதைக்குச் சொன்ன சிறப்பான பாத்திரம், சீதையின் சிறந்த தோழி. சனகன் வேள்விச் சாலையில் இராமன் சவதனுசை எடுத்ததையும் ஒடித்ததையும் நீலமாலை கண்டாள். சனக மன்னனின் வேள்விச் சாலையில் விசுவாமித்திரர் கூற இராமன் சிவதனுசு வில்லை ஒடித்தான். இதனால் உலகமே நடுங்கியது என்பதை,

**பூண்இயல் மொய்ம்பினன், புனிதன் எய்தவில்(கம்ப.பால.808)**

என்று நீலமாலை கூறினாள்.

கங்கை நதியின் வனப்பை சிவபெருமான் சடையுள் கங்கையைக் கரந்த வரலாற்றைச் இமயத்து உச்சிலிருந்து கீழிறங்கி பொன் கிழிந்து ஓசையுடன் ஓடி வரும் பேராறு என்பதை,

**“பிறங்கு நீர் சடைக்கரத்தான்”**[23]

என்ற பாடல் வரிகள் மூலம் கலித்தொகை கூறுகின்றது.

**பரதன்**

பதினான்கு ஆண்டுகள் தவ வாழ்வை நந்திக் கிராமத்தில் இருந்தபடி தாங்கியவன்.. அந்தத் தவ வாழ்வே கோசலத்தைத் தயரதன் போல் நீதி நெறியுடன் ஆண்டது. பரதன் என்ற சொல்லுக்கு எதனையும் தாங்குபவன், திரிப்பவன் என்று பொருள். வசிட்டரே இராமனுக்குப் பெயர் சூட்டியது போன்று பரதனுக்கும் சூட்டினார். வடிவாலும் பண்பாலும் குணத்தாலும் இராமனை ஒத்தவன்.

கைகேயின் ஒப்பற்ற மகன். பரதன் பண்பாலும், வடிவாலும் இராமனை ஒத்தவன். ஒரு நாள் அவனுக்கு இளையவள். இராமனிடம் ஈர்ப்புக்கொண்டு அவனுக்கு நிழலாக விளங்கினான்.

சத்ருகன் பரதனுக்கு நிழலாக விளங்கினான். பரதன் இராமனிடம் உயிர் மதிப்பும் வைத்திருந்தான். அயோத்தியா காண்டத்தின் தொடக்கத்தில் இராமனுக்கு முடிசூட்டத் தயரதன் ஆசைப்பட்டான். காண்டத்தின் முடிவில் பரதன் இராமனின் பாதுகைகளுக்கு முடிசூட்டுவிழா நிகழ்த்தினான்.

பரதன் பண்புகளுக்கு எடுத்துக்காட்டான பாத்திரம். தனக்குத் தாய் தந்தை தந்த நாட்டை அண்ணனுக்குக் கொடுத்தவன். எம்பிரானே பெரியவன் என்று அவன் திருவடிகள் பெற்று வந்தவன் தவ வாழ்க்கை கொண்டு ஆண்டவன்.

தன் தந்தை தயரதன் பிரிவுத் துயரத்தை ஆற்றாத பரதன், நெற்றிக்கண்ணுடைய இறைவன் மேருவில்லை ஒத்த ஆற்றலை உடைய இராமனை கானகம் சென்றதை

**நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய**

**புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினாய்(கம்ப.அயோத்தி.856)**

என்று கூறுகிறான். இராமனின் பெருமையைக் குறிப்பிடுவதின் வாயிலாக சிவபெருமானின் ஆற்றலைக் கூறுகின்றான். பரதன் தனக்கு தாய் தந்த நாட்டை அண்ணன் இராமனுக்குக் கொடுத்தான். தவவாழ்க்கைக் கொண்டு ஆண்டவன்

இராமயணத்தில் ஒரு எடுத்துக்காட்டான பாத்திரம் எக்காலத்தும் புகழப்படும் ஓர் ஒப்பற்ற பாத்திரம் பரதன். காப்பியத்தில் சிவனைப் பற்றி இயம்புகின்றான்.

**கவந்தனன்**

யானை முதல் எறும்புகள் வரை ஒரு சேர உண்பவன். கபந்தன் எனும் சொல்லின் திரிபே கவந்தன் என்பது. இவன் ஓர் அரக்கன். கபந்தம் தலையற்ற உடல். இந்திரன் இவன் தலையில் வச்சிராயுதத்தால் தட்ட இவன் தலை வயிற்றுக்குள் புகுந்தது. சிவபெருமானின் ஒப்பற்ற வலிமையைப் பற்றி,

**அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணலும், அறிதீர் அன்றே**

**(கம்ப.ஆரணி-1192)**

என சிறபித்து கூறுகின்றான்.

**சவரி**

சபரம் என்னும் வேடுவர் இனத்தில் பிறந்தவர் சபரி. இவளைச் சவரி என்று கம்பர் அழைப்பர். வடமொழி ‘ப’ தமிழில் ‘வ’ ஆவர் இயல்பு. வேடுவர் குலத்தவ மாதரசியாகிய சவரி இராம தரிசனத்தால் தன் பிறப்பு நீங்கி வீடுபேறு அடைந்தாள். வேடுவர்க்கு இராமாயணத்தில் தனிச்சிறப்பு உண்டு. வேடுவர் குலத்துக் குகனை இராமன் தன் சகோதரனாகச் சிறப்பித்தான்.

சபரி ஒரு பக்தை. மிக எளிய வேடுவர் குலப்பெண். இராமனை நாள்தோறும் தியானித்துத் தவ வலிமையால் தெய்வ நிலை பெற்றாள். சபரி பம்பை நதிக்கரையில் உள்ள காட்டில் வாழ்ந்து வந்தாள். மதங்க முனிவரிடம் அருள் பெற்று பின்னர் ஆசிரமத்திற்குச் சென்று பணிவிடை செய்து வந்தாள்.

சவரியிடம் சிவபிரானும் தேவர்களும், இந்திரனும் வந்து குற்றமற்ற உன் தவத்திற்கான பயன் பெறும் காலம் நெருங்கிவிட்டது.

**ஈசனும், கமலத்தோறும், இமையவர் யாரும் எந்தை!**

**வாசவன் தானும்; ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி**

**ஆசுஅறு தவத்திற்கு எல்லை அணுகியது(கம்ப.ஆரணி.1199)**

என்று கூறுவதின் வாயிலாகச் சிவனின் பெருமையைப் பற்றிக் கூறுகின்றார்.

**தாரை**

வாலி என்னும் வானவீரனின் மனைவி. இவள் அமிர்தத்தில் பிறந்தவள். வாலி தேவர்களுக்காக மந்திரமலை கடைவதில் உதவியவன். வாலிக்கும் தாரைக்கும் பிறந்தவனே அங்கதன். தாரை வாலிக்கு நல்ல மனைவியாகவும், துணையாகவும் மட்டுமின்றி அவனுக்கு நல் அமைச்சனாகவும் இருந்து வந்தாள். பின்னர் நடக்க இருப்பதை முன்னரே உணரும் ஆற்றல் பெற்றவள். வாலி பால் மாறாத பற்றுக் கொண்டிருந்தாள். தாரை நாலும் தெரிந்தவள்.

மாண்டுக்கிடக்கின்ற தன் கணவன் வாலியைப் பார்த்து தாரை, அம்பிகையைத் தன் உடம்பில் ஒரு கூறாக கொண்டுள்ள சிவபொருனை, மூன்று வேளையும் சிவபூஜை செய்தாயே, ஆனால் இப்பொழுது அதனைச் செய்யாது வீழ்ந்து கிடக்கின்றாயே என்பதை,

**அணங்குஆர் பாகனை ஆசை தோறும்உற்று**

**உணங்கா ஒள்மலர் கொண்டுஉள் அன்போடும் (கம்ப.கிட்கிந்தை.405)**

என்று வாலி நாள்தோறும் சிவனுக்குச் செய்த பூஜைப் பற்றி, இராமாயணத்தில் குறிப்பிடுகின்றாள்.

**சம்பாதி**

சூரியனின் தேரோட்டியான அருணனுக்கும் அரம்பைக்கும் பிறந்தவன் சம்பாதி. இராமாயணத்தில் இவருக்கு முக்கியப் பங்குண்டு.

சம்பாதி என்றால் நன்றாகப் பறப்பவன் என்பது பொருள். ஒருமுறை சடாயுவும், சம்பாதியும் தன் தந்தை அருணனைக் காணச் சூரியனை நோக்கிச் சென்றனர். சூரியன் சினந்து சுட்டதால் அவனது வெப்பம் தாங்காது இருவரும் வருந்தினர். சடாயுவைக் காக்கத் தமையன் சம்பாதி மேலே பறந்து தன்

நிழலைச் சடாயுவின் மேல் கொணர, சம்பாதி மேலே பறந்து தன் நிழலைச் சடாயுவின் மேல் கொணர சம்பாதி சூரியனின் நேரடி வெப்பத்தால் கருகி விந்திய மலை அருகில் வீழ்ந்தான்.

சம்பாதி சிறகில்லாமல் உருண்டு வந்ததையும் இராமநாம உச்சரிப்பால் சிறகுகள் தழைத்தை நேரில் கண்ட வானவர்கள் அச்சமும் மருட்கையும் வியப்பும் கொண்டு இராமநாமத்துக்கு உரியவனான இராமனை வாழ்த்தினர்.

இராவணனின் இருப்பிடத்தைச் சம்பாதி காட்டியதாலும், சடாயு தான் இறக்கும் வேளையில் இராவணன் சீதையைக் கவர்ந்ததை இராமனிடம் கூறியதாலும், அதற்குமுன்னர் இராவணனிடம் போரிட்டதாலும் இரு வரலாறுகளும் புனிதம் பெற்றன. சம்பாதி இலங்கையின் தன்மையை வானரங்களுக்குச் சொல்லும் போது,

**நாரிஓர் பாகத்து அண்ணல் (கம்ப.கிட்கிந்தை.1019)**

என்று பார்வதியை இடப்பக்கத்தில் கொண்டுள்ள சிவபிரானே இலங்கைக்குள் நுழைதல் என்பது கடினமாக உள்ளது என்று இலங்கையின் தன்மையைப் பற்றிக் கூறுவதன் வாயிலாக சிவனின் பெருமையைப் பற்றி குறிப்பிடுகின்றான்.

**புகைநிறக் கண்ணன்**

தூமஅட்சன் என்று வான்மீகியால் குறிப்பிடப்படும் இவனைக் கம்பர் புகைநிறக்கண்ணன் என்கிறார். தூமநாட்டத்தான், தூமிராக்கன் எனவும் சொல்லப்படுவான். தூமம் என்றால் புகை, புகை நிறத்தில் கண்களை உடையவன் இவன்.

இராவணனின் தாய் கைகேகியுடன் பிறந்தவன். இவன் தந்தை சுமாலி. புகைநிறக்கண்ணன் இராவணனின் தாய் மாமன் போர்க்களத்தில் பிணங்கள் விழுந்தால் அவற்றைத் சுடுகாடு செல்லவிடாது. பிறர் அஞ்சும்படி அவற்றைத் தன் பற்களில் கடித்து உண்ணும் தன்மையுடைவன்.

அனுமன் இலங்கையை எரித்த செயல், திரிசூலம் உடைய நெருப்பினைக் கக்குகின்ற ஆற்றல் உடைய சிவனின் வரம்பெற்ற போர் புரியும் படையுடன்

கூட்டமாக நிற்கின்ற குரங்குகளைப் படையோடு போர் புரிவது நகைப்பிற்குரிய செயல் என்பதை,

**சிகைநிறச் சூலிதன் திறத்தின் செல்லினும்**

**நடைஉடைத் தாம்; அமர் செய்தல் ஒன்று எனா (கம்ப.யுத்த.57)**

என்ற அடிகள் மூலம் சிவன் பற்றிய குறிப்புகளை இயம்புகின்றான்.

**பிரம்மன்**

தேவர் மூவருள் படைப்புத் தொழிலை ஏற்றவர். பிரம்மன் நான்கு முகங்களைக் கொண்டவர். இவரை விரிஞ்சன், கஞ்சமா, மலரோன், சரோமுகன், தினசங்க முனி என்றும் அழைப்பர். பிரம்மன் ஒரு கால் தனக்கு உரிய நான்கு தலைகளோடு சிவன் போன்று ஐந்தாவது தலையைப் படைத்துச் சிவனுடன் செருக்குக் கொண்டான்.

தேவர்களும், முனிவர்களும் இராவணனின் கொடுமையைச் சிவனுக்குச் சொல்ல சிவன் தானே பல வரங்களை அவ்வரக்கனுக்கு அளித்திருந்த காரணத்தால் அவர்களை அழைத்துக் கொண்டு பிரம்மாவிடம் சென்றார். பிரம்மன் இராமனை நோக்கி உமையவள் தலைவனான சிவபெருமான் வடிவத்தைக் கொண்டு அழிக்கின்றாய் என்பதை,

**உமையாள் உருக்கொடு துடைத்து (கம்ப.யுத்த.4028)**

என்று கூறுகின்றான்.

## தொகுப்புரை

- காப்பியத்தின் உயர்நிலைப் பண்பாக பாத்திரப்படைப்பு அமைகின்றது. காப்பியத்தின் தொடக்கமுதல் இறுதி வரை வரும் பாத்திரங்களும், இடையில் தோன்றி மறையும் பாத்திரங்களும் இடம்பெற்றுள்ளது.

- பாத்திரங்கள் பண்புகள் அடிப்படையில் மாறுபாடு கொண்டவையாகக் காணப்படுகிறன. ஒரு தன்மையில் செயல்பட்டு வரும் பாத்திரங்கள் சில இடங்களில் சைவசமய தொடர்புடைய கருத்துக்களை எடுத்து இயம்புகிறது.

- இராவணன் மிகச்சிறந்த சிவபக்தன். இராவணனே சிவனோ என்று வியக்கும் அளவிற்கு, அவன் இறைபக்தியுடன் ஒன்றிணைந்தான்.

- முக்கோடி வாழ்நாளும் முயன்று பெருந்தவமும், எக்கோடி யாராலும் வெல்லப்படாத வரமும் பெற்றவன்.

- இராமன் மனிதன் உய்வதற்கான நெறிமுறைகளைக் கடைபிடித்து, அவன் சொல்லையும், செயலையும் பின்பற்றுபடியாக வாழ்ந்து காட்டியவன் இராமன்.

- அறத்தின் வழி அமைந்தால் தான் அண்ணல் காந்தியடிகள் தாம் காணவிரும்பிய சமுதாயத்திற்கு இராம ராசியம் என்று பெயர் சூட்டினார்.

- அனுமன் கடனறிந்து, காலம் கருதி, இடனறிந்து எண்ணி உரைக்கும் தூதுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கினான்.

- கார்மேக வண்ணனுக்குச் செவ்வண்ண சிவனைப் போல வேத முதல்வனாம் இராமனுக்கு அனுமன் உற்ற தோழனாய விளங்கினான்.

- இராமவதாரத்தின் நோக்கம் இராவணவதம். ஆனால் கம்பன் இராம-இராவணப்போருக்குக் கொடுத்த முக்கியதுவத்தை விட இலக்குவன் இந்திரசித்தன் போருக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றார்.

- நல்ல ஊமத்தபூவையும், பாம்பையும் தலையில் அணிந்த சிவபெருமானைப் போல இராமன் சீதையப் பிரிந்தமையால் ‘பித்தனாக’ மாறிவிட்டான்.
- இந்திரன் முதலான அமரர்கள் வாழ்கின்ற உலகமும் அஞ்சுமாறு பேரொலி எழுப்பி பூவுலகத்திற்கு வந்து சேர்ந்தாள் கங்கை எனும் நதி.
- முப்புரத்தை அழித்த சிவபிரானின் தோழான குபேரனின் தங்கை சூாப்பனகை என்று அறிமுகம் செய்யப்படுகிறாள்.
- வசிட்டா் திசைமகன், திருமகன் என அழைக்கப்டும் இவா் நான்முகன் பிரம்மனின் குமாரா். வசிட்டா் என்ற சொல்.
- கற்பினுக்கு அணியாகத் திகழும் சீதை, மலைமகள், கலைமகள் போன்ற பெண் தெய்வமாக வணங்கும் தன்மையைப் பெற்றவள்.
- சூா்ப்பனகை அயன், அரி, அரன் ஆகியோரும், காமதேவனும் தேவா்களும் தனக்காக வரம் இருப்பதாகக் குறிப்பிடுகின்றாள்.
- பரசுராமன் சிவனிடம் பரிசு பெற்று அதையே படைக்கலனாக கொணடிருநதவன்.
- சுக்கீரிவன் இராமனின் செயல்பாடுகள் மூலம், கடவுள் தன்மையுடையவன் என்பதை அறிந்து கொண்டான்.
- கும்பகா்ணன் அறம் பேசி, அறத்தின் வழியில் செயலபடாமல் தன் ஆற்றல் முழுவதையும் தன் தோழமைக்காக இழந்தவன்.
- மாதலி இந்திரனின் ஆணையின்படி தேரை இராமனிடம் கொடுத்தாள். சிறந்த தோ்பாகனாகவும் விளங்கியவன்.
- இராம இலக்குவா்க்கு அடுத்தபடியாக பண்பாலும், வடிவத்தாலும் ஒத்தவன். தன் தமையனின் பாதுகைகளுக்கு முடிசூட்டுவிழா நிகழ்திதியவன்.

- சவரி இராமனையே நாள்தோறும் தியானித்துத் தவ வலிமையால் தெய்வத் தன்மைப் பெற்றாள்.
- மண்டோதரி இராவணனுடன் பல சிவத்தலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தவள்.
- மாரீசன் இராவணனின் வேண்டுகோளின் படி சீதையைக் கவர பொன் மானாக உருவெடுத்து வந்தவன்.
- வாலி சிறந்த சிவபக்தன், நாள்தோறும் சிவன்இருக்கும் மலைகளுக்குச் சென்று வழிபடுவதில் வல்லவன்.
- அக்ககுமாரன் இந்திரனுடன் போர் புரிந்து, தேவஅரசர்கள் குதிரைகள் பூட்டிய தேரிதனைத் தன்னிடம் விட்டு ஓடச் செய்தவன்.

## சான்றெண் விளக்கம்

1. வரலாற்றில் பிறந்த வைணவம் ப.318
2. பரிபாடல் - 14
3. திருக்குறள் - 691
4. பரிபாடல்:4.10-11
5. நம்மாழ்வார் பாசுரம்:3177
6. பரிபாடல்:13
7. சிலப்பதிகாரம்:14:46:27
8. மேலது - 14:49-50
9. பெரிய திருமொழி:2:3:9
10. பெரும்பாணாற்றுப்படை:402
11. சிலப்பதிகாரம் -17:36.4
12. பரிபாடல்:4:62

## இயல்-3

## கம்பராமயணத்தில் வைணவப் பதிவுகள்

இந்து சமயத்தின் அறுவகைச் சமயங்களுள் ஒன்றாக இடம்பெறும் சமயம். விசுணுவை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடக் கூடிய வைணவ சமயம் ஆகும். முத்தொழிலைச் செய்தலில் காத்தல் தொழிலைச் செய்து முதலிடம் பெறும் சமயம்.

அடியவர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு உலகில் அநீதியை அழித்து நீதியை நிலை நிறுத்தவும் அவற்றை அழிப்பதற்காக அவதாரம் எடுத்தார் என்பது வைணவ நம்பிக்கை. அடியவர்களும் ஆழ்வார்களும் திருமாலின் அவதாரச் சிறப்பைத் தத்தமது பாசுரங்களில் போற்றிப் பாடியுள்ளனர். விசுணுவின் தோற்றம், சிறப்பு, மந்திரம், படைக்கலன்கள், அடையாளச் சின்னங்கள், வாகனங்கள், அவதாரங்கள், அருளிச்செயல்கள் இவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

இந்து மதத்தில் விசுணுவை முதன்மைத் தெய்வமாகக் கொண்டு வழிபடக் கூடியது வைணவ சமயமாகும். தமிழ் இலக்கியங்கள், விஷ்ணுவைத் திருமால் என்றே குறிப்பிடுகின்றன. சங்க இலக்கியங்கள் காப்பியங்களில் இதற்குச் சான்றுகள் உள்ளன. வேறு எந்த மொழியிலும் இல்லாத 'திருமால்' என்ற பெயர்ச்சொல் தமிழுக்கே உரிய சிறப்பாகும். இந்து மதத்தில் இறைவனின் அவதாரங்கள் பற்றிய பல செய்திகள் இருப்பினும், 'அவதாரம்' என்ற சொல் வைணவத்தில் இறைவனோடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

அடியவர்களும், ஆழ்வார்களும் திருமாலின் அவதாரச் சிறப்பைத் தத்தமது பாசுரங்களில் போற்றிப் பாடுகின்றனர். மனிதனின் மன இருளை அகற்றி ஒளி ஏற்றக்கூடிய திருமாலின் நாமங்களை நாம் உச்சரிக்கும் போது அதன் வழியில் ஒவ்வொரு அவதாரமும் திருமாலின் பெருமையை உணர்த்ததுவதாக அமைகிறது. எனவே திருமாலின் தோற்றச் சிறப்பு, மந்திரம், இந்திரன் முதலான தேவர்கள் வழிபடல், பாற்கடலில் பள்ளி கொள்ளல், அவதாரம், மற்றும் அருளிச்

செயல் இவற்றைக் காணும் பொழுது சைவ சமயத்தை மழுமையாக உணரலாம்.

**நாராயணன்**

'நாராயணன்' என்ற சொல்லின் பொருள் நரர்கள் தங்குமிடம் என்பதாகும். நாராயணன் என்ற சொல் நரராகிய மானுடக்கூட்டம் இறுதியாகச் சென்றடையும் அல்லது சேருமிடம் என்பதைக் குறிக்கும். நரன்-மனிதன் என்ற பொருளிலும் அயணம்-செல்லுதல், வழி, பாதை என்ற பொருளிலும் வழங்கப்படுகிறது. எனவே நரர்கள் (மனிதர்கள்) சென்றடையும் இடம்'நாராயணன்' என்பதாகும்.

இதிகாசங்களும் புராணங்களும் நாராயணனையும், விசுணுவையும் பிரித்துப் பேசுவதில்லை. மகாபாரதத்திலும் 'நாராயணன்' என்ற பெயரே காணப்படுகிறது. நாராயணன் என்னும் சொல்லை நாமமாகக் கூறுவதோடு எட்டெழுத்து மந்திரமாகவும் கொள்வர்.

**விசுணு**

"விசுணு என்றால் எங்கும் பரவி வியாபித்திருப்பவன் என்று பொருள்." விசுணு என்பது பசுக்கூட்டங்களைக் காப்பவன் என்கிறது ரிக் வேதம். பொதுவாக 'விசுணு' என்ற சொல்லாட்சி வேதங்களில் காணப்படுகின்றது. மகாபாரதத்திலும் 'விசுணு' என்ற சொல் அருகியே காணப்படுகின்றது. ஆழ்வார்கள் பாசுரங்களிலும் 'விசுணு' என்ற சொல்லாட்சி அரிதே உள்ளது. விசுணு என்ற சொல்லை 'விட்டு' என்றே ஆழ்வார்கள் குறிக்கின்றனர். பெரியாழ்வாரின் இயற்பெயர் 'விட்டுசித்தன்' (விசுணுவைச் சித்தத்தில் உடையவன்) என்று குறிப்பிடுகின்றது.

**தொன்மை**

உலகையும் உலக உயிர்களையும் காக்கும் கடவுளாகக் கருதப்பெறும் திருமால் பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்து தோன்றுகின்றான். திருமாலின் தொன்மையை அறிய முற்படும் பொழுது தொல்காப்பியம்

**"மாயோன் மேய காடுறை உலகம்" (தொல்-அகம்-5)**

எனப்பண்டைய தமிழகத்தை ஐந்து நிலப்பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தெய்வமாக வழிபட்டு வந்த மக்கள் முல்லை நிலத் தெய்வமாக மாயோனாகிய திருமாலை வழிபட்டு வந்தனர். தொல்காப்பியர் திருமால் பற்றிய குறிப்புகளை 'மாயோன்' என்று பதிவு செய்கிறார்.

**"மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின்**

**தூவா விழுப்புகழ் பூவை நிலை" (தொல்.புறம்.5)**

என்ற நூற்பாவின் மூலம் அனைத்து மன்னரையும் திருமாலாக மால்வனாக வைத்து புகழலாம் என்பதை அறியமுடிகிறது. தமிழகம் மட்டுமின்றி உலகலாவிய நிலையில் பல நாடுகளில் திருமால் வழிபாடு திகழ்ந்து என்பதை வரலாற்று நூல்கள் பல விரிவாக எடுத்துரைக்கின்றன.

"சாவாத்தீவில் அமைந்துள்ள கோவில் ஒன்றில் அரியணை மீது சங்கு சக்கரத்துடன் கூடிய திருமால் வீற்றிருக்கும் கோலம் அமையப்பெற்றுள்ளது. திருமால் அருகில் இலக்குமி, சத்யபாமா ஆகியோருடைய வடிவங்கள் காணப்படுகின்றன.திருமாலின் அவதாரக்கதைகளும், புராணச்செய்திகளும் பலவும் மக்களிடையே வழக்கில் இருந்து மிகுந்த செல்வாக்குடன் நிலவுவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**பிரிவுகள்**

வைணவசமயத்தில் சிரிவைணவம், பிரம்ம வைணவம், ருத்ரவைணவம், குமாரவைணவம், என நான்குவகைகள் உள்ளன. சிரிவைணவத்தில் வடகலை, தென்கலை, ராமசாந்தி, சுவாமிநாராயணன் என்று நான்கு பிரிவுகள் உண்டு. பிரம்ம வைணவத்தில் தத்வவாதம், கௌடிய வைணவம் என்று இரு பிரிவுகள் உள்ளன.

**திருமண்(திருநாமம்**)

வைணவர்கள் நெற்றியில் வரையும் புனிதமான வைணவ அடையாளம். இதற்குத் திருமண் காப்புத் தரித்தல் என்று பெயர்கள்.

திருமாலின்அடையாளமாக வைணவர்கள் பன்னிரண்டு இடங்களில் திருமண் காப்பு இட்டுக்கொள்வது மரபு ஆகும். திருமண் இட்டுக்கொள்திலும் இரண்டு பிரிவுகள் உண்டு. அதில் ஒன்று தென் கலை. மற்றொன்று வடகலை. தென்கலைப் பிரிவினர் திருமண் இடுதலில் பாதம் வைத்து நாமம் இடுதல் மரபாகும். வடகலைப் பிரிவினர் திருமண் இடுதலில் பாதம் இல்லாமல் நெற்றியில் நேர்கோடு கொண்டு நாமம் இடுவர்.

**திருமாலின் திருப்பெயர்கள்**

மாதவன், மதுசூதனன், சுந்தரகேசவன், யாதவா, நாராயணன், விசுணு கிருட்டிணன், இராமன், அரி, மால், கண்ணன், கருநீல வண்ணன், பாலாஜி எனப் பல பெயர்களில் திருமால் அழைக்கப்படுகிறார். கம்பன் காணும் திருமாலின் திருப்பெயர்கள் பின்வருமாறு,

**“இராகவன் செய்கையை இயம்புவாம்” (பாலகாண்டம்:2190)**

இங்குத் திருமாலை இராகவன் என சித்திரித்துக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

ஆதிநாதன் என்று கம்பர் சித்திரித்துக் காட்டுகிறார்.

**“ஆதிநாதர் அவரெம் அறிவினுக் கறிவரே”**

**(ஆரண்யகாண்டம்:கடவுள் வாழ்த்து)**

என உயிர்களுக்கெல்லாம் முதல் தலைவன் என்பதை இப்பாடல் காட்டுகிறது.

**“தேவதேவர் பிடித்த போர்வில் ஒடித்த சேவகன்”**

**(அயோத்யா காண்டம்:249)**

என்பதில் ஆயிரம் நாமங்களைக் கொண்டு மக்கள் மத்தியில் நிலைபெற்று இருக்கக் கூடிய திருமால் என்ற திருப்பெயரைத் தாங்கி இருப்பவனே சிரிமந்நாராயணன் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இங்குத் திருமாலைக் கமலக் கண்ணன் என்று அழைத்துள்ளார் கம்பர்.

**“அஞ்சன வண்ணனே இராமன்”**

மேலும் கம்பர் திருமாலை ஆயிரம் நாமங்களைத் தன்னகத்தே அடக்கி வைத்தவன் என அனுமான் கூற்றாக,

**“பொய் இலாதவன் வரன்முறை இம்மொழி புகல**

**ஐயன் ஆயிரம் பெயருடைய அமரர்க்கும் அமரன்”**

**(கம்ப.கிட்கிந்தா-152)**

வாயிலாக சுக்கிரிவனிடம் புகழ்வது குறிப்பிடத்தக்கதாகும்.

**திருமால் மந்திரம்**

ஒருவனுக்குத் தொடக்கமும் முடிவும் இறைவன் திருநாமமாகவே இருத்தல் வேண்டும். ஒருவன் தன் துன்பத்திலும் இன்பத்திலும் இறைவனின் திருநாமத்தை கூறித் தொடங்கவும், நினைக்கவும் செய்கிறவர்கள், வாழ்வில் உயர்ந்த நிலையை அடையமுடியும். பிறவியில் ஏற்படுகின்ற துன்பங்களைக் கடக்க, எப்பெருமானுடைய திருப்பெயரைத் தவிர சிறப்புடையது வேறு எதுவும் இல்லை என்பது சமய நம்பிக்கை

**“... திருப்பெயர் உணரக்**

**கருதக் கேட்டிடக் கட்டுரைத்து இடக்கடல் கடக்க**

**உரியமற்று இதில் நல்லது ஒன்றில்லை” (கம்ப.யுத்த.170)**

மந்திரமே ஒருவனுக்கு விரும்பிய யாவையும் கொடுக்கும் திறனுள்ளது. இப்பிறவியில் மட்டுமல்லாமல், மறுபிறவியிலும் வீடுபேறு அடைவதற்கு ஒருவனை அழைத்துச் செல்லக் கூடியது. அதுவே நாராயணா எனும் திருமந்திரம் ஆகும்.

**“உள் நிறைந்துள்ள கரணத்தின் ஊங்கு உளஉணர்வும்**

**எண்ணுகின்றது இவ்வெட்டு எழுத்தே; பிறிது இல்லை" (கம்ப.யுத்த.173)**

என்பர். இம்மந்திரத்தை மறந்தவர் இறந்தவரே. மக்களுள் அறிவுடையவரே இவரின் நாமத்தை உணர்ந்து கொள்ளமுடியும் மற்றவர்களால் அறிய முடியாது.

**"சிந்தையிற் செய்கையிற் சொல்லில் சேர்ந்துளன்**

**இந்தியத்தொறு முளனுற்ற தெண்ணினால்**

**முந்தையோ ரெழுத்தென வந்து மும்முறைச்**

**சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான்" (கம்ப.யுத்த.202)**

திருமால் எல்லோருடைய சிந்தனைகளிலும், செயல்களிலும், சொல்லிலும் உள்ளான். வேதங்களின் தொடக்கமாகக் கருதப்படும் 'ஓம்' என்ற பிரணவத்தின் வடிவமாக மூன்று சொற்களின் (அகரம், உகரம், மகரம்) இணைப்புச் சொல் ஆகும்.

பிரகலாதன் இறைவன் திருப்பெயரைச் சொல்லும் போது உடலிலும், உணர்விலும் பல்வேறு மாற்றங்கள் நிகழ்வதாகக் குறிப்பிடுகின்றார் கம்பர்,

**''ஓம் நமோ நாராயணாய என்று உரைத்து உளம் உருகி**

**தான் அமைந்து இரு தடக்கையும் தலைமிசைத் தாங்கி**

**பூ நிறக்கண்க்ள புனல் உக, மயிர்புறம் பொடிப்ப**

**ஞான நாயகன் இருந்தனன்" (கம்ப.யுத்த-153)**

**"முன்னை வேதத்தின் முதற்பெயர் மொழிவது மொழிந்தேன்"**

என்கிறார். திருமங்கை ஆழ்வார் திருமாலின் திருநாமத்தைக் குறிப்பிடும் போது கிடைத்தற்கரிய செல்வங்கள் அனைத்தும் கிட்டும் என்று கூறுவதை,

**“குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார்**

**படுதுயர் ஆயின எல்லாம்**

**நிலம் தரும் செய்யும், நீள்விசும்பு அருளும்**

**அருளொடு பெருநிலம் அளிக்கும்**

**வலம் தரும், மற்றும் தந்திடும் பெற்ற**

**தாயினும் ஆயின செய்யும்**

**நலம் தரும் சொல்லை நான் கண்ட கொண்டேன்**

**நாராயணா என்னும் நாமம்” (திருமங்கை ஆழ்வார் பாசுரம் -956)**

என்னும் பாடலில் அறியலாம்.

திருமாலின் நாமத்தை உச்சரிக்கும் போது மேன்மை தரும். சிறந்த செல்வத்தைக் கொடுக்கும், பக்தர்களின் துன்பங்களை எல்லாம் போக்கி முக்தியை அளிக்கும். இறைவனின் அருளைப் பெற்றுத் தரும். இறைவனுக்குச் செய்ய வேண்டிய கடமை மற்றும் வலிமையைத் தந்திடும் பெற்ற தாய் செய்யும் நன்மைகளைக் காட்டிலும் பல நன்மைகளைத் தருவது.நாராயணன் திருநாமத்தை உச்சரித்தலால் ஆகும்.

வைணவ மந்திரமான ஓம் நாமோ நாராயணா என்னும் எட்டெழுத்து மந்திரத்தைப் பற்றி,

**“அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்**

**வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்**

**ஒருமுறையாக உளம் கண்டு ஓதி”[14] (சிலம்பு.11:128-138)**

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். மேலும் பெரியாழ்வார் தம் பாசுரத்தில் “நல்வகையால் நமோ நாராயணாவென்று நாமம் பல பரவி ... பல்லாண்டு கூறுவனே” என்று இறைவனைப் புகழ்ந்துள்ளார்.

தேவர்களும், முனிவர்களும், அடியவர்களும் சொல்லும் சொல்லைத் தவிர பிற சொல்லை வாயால் உச்சரிக்கக் கூடாது என்று கம்பர் குறிப்பது வியப்பிற்குரியதாக உள்ளது. வேதங்களும் உபநிடதங்களும் நாராயணன் நாமத்தையே உச்சரிக்கின்றன,

**“ஆரைச் சொல்வது, அந்தணர் அருமறை அறிந்தோர்**

**ஓரலச் சொல்வது எப்பொருள், உபநிடதங்கள்**

**தீரச்சொல் பொரு தேவரும் முனிவரும் செப்பும்**

**பேரைச் சொல்வது அல்லது, பிறிதும் ஒன்றும் உளதோ?”**

**(கம்ப.யுத்த:159)**

என்ற பாடல் உணர்த்துகின்றன.

திருமாலின் திருப்பெயரை உணர்வதை போற்றுவதை, காதுகளால் கேட்பதை, உறுதியாகக் கொள்ள வேண்டும். பிறவியில் ஏற்படும் துன்பங்களைக் களைவதற்குத் திருமாலின் திருப்பெயரே உற்ற துணையாகும். உன் வடிவம், பேர், ஊர். எண்ணில் நீயே ஆதி மூலம், உன்னை உணர்ந்தறிந்தவர் எவருமில்லை என்பதை

**“இன்னை என்று சொல்லல் ஆவது இல்லை யாதும் இட்டிடை**

**பின்னை ஆயபின்னை பின்னை கேள்வன் என்பர் உன**

**பிணக்கு உணர்ந்த பெற்றியோர் கோலமோடு பேரும் ஊரும்**

**ஆதியும் நின்னையார் நினைக்க வல்லர் நீர்மையால் நினைக்கிலே”**

**(திருமழிசை பிரான்-764)**

என்று இறைவனைப் போற்றும் திறத்தை அறிய முடிகிறது. ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனின் திருநாமத்தை நம்மால் அறிய இப்பிறவி மட்டுமல்லாமல் இன்னும் ஏழு பிறப்பு எடுத்தாலும் போதாது என்கிறார் கம்பர்.

பரம்பொருளின் பெருமையையும், அவன் உலக உயிர்களுக்குப் பாதுகாப்பை அளிப்பவன் என்பதை,

**"நாமமும் அவன்பிற நலிகொடா நெடுஞ்**

**சேமமும் பிறர்களாற் செப்பற் பாலவோ" (யுத்தகாண்டம்:73)**

என்னும் இப்பாடல் சுட்டுகிறது. இறைவனின் திருப்பெயரை உச்சரிக்கும் பண்பு இல்லாதவர்கள், முன்னேற இயலாது என்பர்.

இறைவனை அடையக் கோபம், காமம், மயக்கம் இவைமூன்றும் தடையாக இருக்கும் செயல்களும் என வள்ளுவர் குறிப்பிடுகின்றார். நம்மாழ்வார்,

**"தஞ்சம் ஆகிய தந்தை தாயோடு தானும் ஆய், அவை அல்லன்ஆய்**

**எஞ்சம்இல் அமர் குல முதல்மூவர் தம்முன்னும் ஆதியை**

**அஞ்சிநீர் உலகத்துள்ளீர்கள் அவன் இவன் என்று கூறேன்பின்**

**நெஞ்சினால் நினைப்பான் எவன், அவன் ஆகும் நிள்கடல்**

**வண்ணனே"**

**(நம்மாழ்வார் பாசுரம்:3184)**

என விளக்குகின்றார். அடைக்கலம் தரும் தாயும், தந்தையும், தானுமாய் எம்பெருமான் ஒருவனே இருப்பான், அல்லாத மறைபொருள்களாகவும் இருப்பான், எல்லையில்லாத வானவர்களுக்குத் தலைவனாகிய திருமால் ஆதி காரணமாய் அரி, அரண், அயனுக்கு முதல்வனாய் உள்ளான் என்கிறார்.

திருமால் சிவந்த கண்களைப் பெற்றிருப்பதால் "செங்கண் வண்ணன்" என்றும் சக்கரத்தைக் கையில் வைத்திருப்பதால் 'அழியான்'

என்றும்வையகத்தைக் காப்பதால் ‘வைய நாயகன் என்றும்’ உலக உயிர்களுக்கு அருள் செய்வதால் ‘தெய்வநாயகன்’ என்றும சிறபிக்கப்படடுள்ளார்.

**“மூவுலகத் தவரும் முதலோரும் மேவின வில்தொழில் வீரன் திருமால்”,**

என்ற பாடலடி உணர்த்துகிறது.

திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பதால் ‘மால்கடல் வண்ணன், என்றும் பெரியோய் என்றும் மூவுலகில் உள்ளவரும் முதற்கடவுளும் விரும்பத்தக்க வில்லாற்றல் மிக்கவனான இராமனே திருமால் என்று உறுதியாகக் கம்பர் கூறுகிறார்.

**அவதாரம்**

இறைவன் கருணையே காரணமாகப் பரம ரகசியமாய்த் தம்மை எவ்வுயிரும் அறியாதபடி மறைத்துக்கொண்டு மக்களில் ஒருவனாய் வாழ்வதே அவதாரம் ஆகும். ‘அவதாரம்’ பற்றிய சொல்லாட்சியை இலக்கியங்களில் காண முயலும் போது சங்க இலக்கியங்களில் அவதாரம் பற்றிய சொல்லாட்சி இல்லை கம்பர் தன் இராமாயணத்தில் ‘அவதாரம்’ பற்றிப் பதிவு செய்கிறார்.

**“நடையின் நின்று உயர் நாயகன் தோற்றததில்**

**இடை நிகழ்ந்த இராமாவ தாரப்பேர்த்**

**தொடை நிரம்பிய தொல்லைநன் மாக்கதை**

**சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே”**

**(கம்ப.பால.11)**

என்கிறார். இராமன் அவதாரம் ‘‘இராமவதாரம’’ என்னும் பெயரோடு சடையப்பரின் திருவெண்ணெய் நல்லூரில் பாடியதாகும்.

திருமால் நல்வினை, தீவினைகளுக்கேற்பப் பலன் அளிப்பவன். அழிவற்றவன். வேத வடிவாய் இருப்பவன். குறையொன்றுமில்லா நிறைவாளன்.

அடியார்களுக்கு வேண்டுவதை அளிப்பவன். எல்லாப் பொருளிலும் நீக்கமற நிறைந்துள்ளான்.

**திருமாலின் தோற்றம்**

திருமால் துழாய் மாலையினை அணிந்தவன். பாம்பணையில் பள்ளி கொண்டவன். சங்கு சக்கரத்தை உடையவன். மன்மதனின் தந்தை. முல்லை நிலக்கடவுள், வேதமுதல்வன், கருடக் கொடியோன். திருவோண நாளிற்கு உடையோன். ஊழிக்காலத்தில் ஆலிலையில் கிடந்தவன். பீதாம்பர ஆடையினை அணிந்தவன்.என்று பலவாறு சுட்டப்படுகின்றார்.

இவ்வுலகத்தில் உள்ள உயிர்கள் ஒவ்வொன்றும் தம் இம்மை, மறுமை வாழ்க்கையின் பயனை அறிந்து கொள்ளும் பொருட்டு திருமால் இவ்வுலகில் பல்வேறு அம்சமாகத் தோன்றினார். கோசலை வயிற்றில் திருமாலாகத்தோற்றம் பெற்றார். திருமால் தான் தாயாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பெண் எப்படிப்பட்டவளாக இருத்தல் வேண்டும் என்பதை முன்பே அறிந்திருந்தான். எனவே "திறம் கொள் கோசலை" (பால காண்டாம்:103:4) என்கிறார். குணங்களில் திறம் கொண்டவளைத் தாயாகக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே சிறந்த குணவதியின் வயிற்றுள் திருமால் தோன்றியிருக்கிற்.

**"துயில்வழி உணர்தரு சுடர் ஒளி ஒருவன்" (யுத்த.காண்டம்:86:4)**

என்ற பாடலில் இவ்வுலகில் இறைவனாகிய திருமால் தோன்றி உலக உயிர்களை தம் அரிதுயில் நிலையில் கொண்டு முற்றுணர்வினால் அறிந்து கொள்ளும் தன்மை படைத்தவனாக இருக்கிறான். என்பதையே கம்பர் துயில்வுழி உணர் என்ற அடியில் தெளிவுபடுத்துகிறார்.

திருமாலின் தோற்றச் சிறப்பினைப் பற்றி பரிபாடல்,

**"ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை**

**தீயுமிழ் திறனோடு முடிமிசை யணவர**

**மாயுடைய மலர்மார்பின் மையில் வால்வளைமேனிச்**

**சேயுயர் பனைமிசை யெழில்வேழ மேந்திய**

**வாய்வாங்கும் வாளை நாஞ்சிலொடு குழையொருவனை”**

**(பரி.1)**

என்கிறது. ஆயிரம் முடியுடைய ஆதிசேடனாகி திருமடியில் திருமால், திருமகள் தங்கும் மார்பனாகவும் சங்கைப் போன்ற திருமேனியையும், பனைக் கொடியையும், கலப்பைப் படையையும் ஒற்றைக் குழையையும் உடைய பலதேவனாகத் திருமால் விளங்குகின்றான்.

தேவர்களின் துன்பத்தைப் போக்கி, பகைவர்களான அரக்கர்களை ஒழித்து உலகங்களைக் காப்பாற்றத் தோன்றியவனாகத் திருமால் அவதரித்தார்.

மதுரைக் கண்ணத்தனார் திருமாலின் தோற்றத்தைப் பற்றிக் கூறும் பொழுது,

**“வெருஉரு கடந்திறல் இருபெருந் தெய்வத்து உருவுடன்**

**இயைந்த தோற்றம் போல்” (அகநானூறு:360)**

என்று இருபெருந் தெய்வங்கள் ஒரு பெருந்தெய்வமாகத் திருமாலைக் குறித்துள்ளார்.

**திருமாலின் திரு உறுப்புகள்**

**கண்**

திருமாலினுடைய கண்கள் மலர்ந்த தாமரை மலரைப் போல் சிவந்த கண்கள், திருமாலாகிய இராமனுடைய கண்களும் அவ்வாறே சிவந்த கண்களாகக் காட்சியளிக்கின்றன.

**“சிரித்த பங்கயம் ஒத்த செங்கண் இராமனை”**

**(கம்ப.பாலகாண்டம்:50:)**

என்பர். கருமை நிறமடைந்த திருப்பாற் கடலில் கண் வளர்ந்து அருள்புரிபவன் திருமால் அவன் அரிதுயில் வண்ணன் என்பதை,

**“கருங்கடலில் கண் வளர்ந்தோய் கைமமாறு உண்டோ”**

**(கம்ப.ஆரணிய-101)**

என்கிறார். உலகத்தில் காண்கின்றவர்களுக்கும், காணப்படும் பொருள்களுக்கும் ஆதாரமாயிருந்து எல்லாப் பொருள்களிடத்தும் பற்று உள்ளவன். காண்பார்க்கும் காணப்படும் பொருட்குக் கண்ணாகி இத்தகைய பண்புகளைக் கொண்ட திருமாலை நம்மாழ்வார்,

**‘‘செந்தாமரைக் கண் செங்கனிவாய் நால்தோள் அமுதே’’**

என்று திருமாலின் உறுப்புகளைக் கூறுகிறார். இப்பாடல் பாசுரம் 3558 -இல் இராமனைத் திருமாலாகக் கொண்டு திருமாலின் கண்களை சிறப்பித்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

திருமாலினுடைய கண்களைப் பற்றி,

**“செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்”[3] (சிலம்பு:11:35-45)**

என்று செந்நிறக் கண்களுடையவன் என இளங்கோவடிகள் பதிவு செய்கிறார்.

**தோள்கள்**

இராவணன் திருமாலின் சிறப்புகளை எல்லாம் அறிந்திருந்தும், அவனோடு போர் புரிவதை இப்பாடலில், இராமனின் தோள், தலை, வலிமையைக் கம்பர்,

**“ஆயிரம் பெருந்தோள்களும் அத்துணைத்தலையும்**

**மாஇரும் புவி உள்ளடி அடக்குறும் வடிவம்**

**தீயசாலவும் சிறிது என நினைந்து நாம் தின்னும்**

**ஓயும் மானுட உருவு”     (கம்ப.யுத்த-126)**

இவற்றைச் சிறப்புடன் எடுத்துரைக்கிறார்.

**கரம்**

திருமாலின் தாமரை மலர் போன்ற இராமனின் கரங்களை யானையின் தும்பிக்கை, மலர், கொடை இவற்றுக்கு எடுத்துக்காட்டாக,

**“திருமாலை, அக்கரிக்கரம் பொரு கைதலத்து”**

என்று கூறுகின்றார்.

**மார்பு**

தசரதன் தன் மகனைப் பார்த்து நன்மைகள் யாவையும் தனக்குள்ளே கொண்டிருப்பவன், என நினைந்துத் திருமாலாகிய இராமனை அணைத்துக் கொள்கிறார். அவ்வாறு மானிடரான இராமனைத் தசரதன் தழுவும் போது அவன் தோள்களைத் தன் தோளுக்குத் தோளாகவும், மார்புக்கு மார்பாகவும், அனைத்து கொள்கிறார்.இதனை

**“விலங்க அன்ன திண் தோனையும் மெய்த்திரு இருக்கும்**

**அலங்கல் மார்பையும் தனது தோள் மார்பு கொண்டுஅளந்தான்.”**

**(கம்ப.ஆரண்ய -:59)**

என்றும், திருமால் மார்பில் உள்ள மறுவை,

**“இருநிலம் கடந்த திருமறு மார்பின்**

**முந்நீர் வண்ணன் பிறங்கடை”[4] (பெரும்பாண்.30)**

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. மேலும் திருமால் மார்பில் அணிந்த மாலையைப் பற்றி,

**“செருமிக்க நேமியோன் தார்போல”[5] (கலி.127)**

என்று கலித்தொகை சுட்டுகின்றது.

**நிறம்**

திருமாலின் நிறத்தைப் பற்றி இளங்கோவடிகள்,

**"மயில் எடுத்து உறழ்மேனி மாயவன்"[6] (சிலம்பு:17:10:27-1)**

**"அஞ்சன வண்ணன்"[7] (சிலம்பு.6:47),**

**"தூமணி வண்ணன்"[8] (சிலம்பு:16-50),**

**"பூவைபுதுமலா் வண்ணன்"[9] (சிலம்பு:16:47)**

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

இராமனின் பண்பினை அறிந்து கொண்டு இவன் திருமால் தான் என்பதை,

**"கண்ட திறத்து இது கைதவம்; ஐய!**

**கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல்"**

**(கம்ப.பால:443)**

என்ற பாடலில் இராமனின் நிறமானது நீா் நிறைந்தக் கருநீல நிறத்தையுடைய கொண்டலாகிய மேகத்தைப் போன்று காணப்படுவதால் இவனைத் திருமாலாகக் காண்கிறாா் கம்பா்.

அவ்வாறே பரத்வாசு முனிவனும் இராமனைத் திருமாலாகக் காணும் பண்பாக அமையும் திறம் குறிப்பிடத்தக்கது. இவா் இராமனின் திருமேனி பற்றிக் கூறும் போது சத்தியம் போற்றும் தேவா்களுடைய துன்பத்தைப் போக்கி,பகைவா்களாகிய அரக்கா்களை ஒழித்து, உலகங்களைக் காப்பாற்றிய மரகதக்கல் போன்ற திருமேனி நிறத்தையுடைய இராமபிரான் என்று கூறுகிறாா்.

**திருமாலின் திருவடி**

கம்பன் தாம் படைத்த இராமாயணத்திற்கு இராம அவதாரம் என்று பெயர் சூட்டி, அத்தகைய இராமாயணத்தை எழுதத் துவங்கும் முன் தான் வணங்கும் உலக உயிர்களின் நாயகனாகிய இராமனின் பாதத்தை வணங்கிய பின் இராம அவதாரத்தைத் தான் எழுதத் துவங்குகிறார். அவ்வாறு துவங்கும் போது இறைவனே அவர் முன் “உலகம்” என்ற சொல்லை எடுத்துக் கூறிச் செல்கிறார். அத்தகையவருக்கே என் முதல் வணக்கம் என்கிறார்.

“அன்னவர்க்கே சரண் நாங்களே” என்று பாலகாண்டம் கூறுகின்றது. ஆறு காண்டங்களையுடைய இராமாயணத்தில் கடவுள் வாழ்த்தாக அமைவது குறிப்பிடத்தக்கது ஆகும்.

நன்மைகள் பெற வேண்டுமானால் கடவுளின் அருள் வேண்டும். நன்மை என்று கூறுவது, சாதாரணமான இப்போது தோன்றி, இப்போதோ, எப்போதோ அழியும் பொருள்களைக் காட்டிலும், என்றும் அழியாத புகழையும் மோட்சத்தையும் அளிப்பது சிரிமந்நாராயணனே. அத்தகைய நன்மைகளை அளிக்கும்

**“மெய்ந்நெறி நன்மையன் பாதம் அல்லது பற்றிலர் - பற்று**

**இலார்” (பாலகாண்டம்.கடவுள் வாழ்த்து)**

தேவர்களில் துன்பத்தைப் போக்கி அவர்களை நன்மை வாழ்விற்கு அழைத்துச் செல்லும் திருமாலின் திருப்பாதம் பற்றிக் கூறுகின்றார்.

இமையோ இடுக்கண் தீர்ந்த கழல்வேந்தர் எனத் திருமாலைக் குறிப்பிடுகிறார் கம்பர்.

உலகத்து உயிர்களுக்கு நிழலாகிய அருளைக் கொடுக்கின்ற திருவடிகளை உடையவன் திருமால் என்பதை,

**“நின் தாள் நிழல் தொழுதே”[10] (பரி.1:65-68)**

என்று பரிபாடல் திருமாலின் திருவடிகளைச் சுட்டுகிறது.

இறைவனது திருவடிகளைப் அடைதலே அடியவருக்குப் பிறவிப்பயன். பக்தியினால் பெற இயலாத வீடுபேற்றினை, மனிதரல்லாத உயிர்களுக்கும் அருளவல்லது. இறைவனது திருவடியின் தனிச் சிறப்பாகும்.

“முழுமையாகத் தன்னை இறைவன் ஒப்படைத்தல் என்பது பக்தியின் மிக உயர்ந்த நிலையாகும்.”

**சங்கு சக்கரம்**

சகோதரர்களான அசுரர்களும் தேவர்களும் பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட பொருள்களில் சங்கும் ஒன்று. அத்தகைய சங்கினைக் காக்கும் கடவுளான சிவபெருமானின் திருக்கரத்தில் இந்த சங்கினைப் பெறுவதற்கு விரும்பினார். திருமாலின் விருப்பப்படியே மங்கலப்பொருளான சங்கினைச் சிவபெருமான் திருமாலுக்கு அருளினார்.

திருமால் சிவபூசை செய்து தெய்வீகச் சங்கினைக் கைக்கொண்ட திருத்தலம் திருச்சங்கமங்கை (திருச்சங்கம் அங்கை) எனப் பெயர் பெற்றது.

**சக்கரம்**

இந்து தொன்மவியலின் விதிப்படி சக்ராயுதம் என்பது விசுணுவின் ஆயுதமாகும். இது சக்ராயுதம் (அ) சுதர்சன சக்கரம் என இவ்வாயுதம் அழைக்கப்படுகிறது.

சிவபெருமானை ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு தினம் அர்ச்சனை செய்து வந்தார். ஒருநாள் ஆயிரம் தாமரைப் பூக்களில் ஒன்று குறைந்தது. அதனை அறிந்த விசுணு தன் கண்களில் ஒன்றனைத் தாமரையாக்கி ஆயிரம் பூவாக முழுமையானப் பூசை செய்தார். ஆதனால் சிவபெருமான் மகிழ்ந்து சக்ராயுதத்தினை விசுணுவிற்குக் கொடுத்தார் என திருவீழிமழலை தலபுராணம் கூறுகிறது. இதன் மூலம் அரக்கர்களை அழித்து அடியவர்களைக் காத்துக் அருளினார்.

திருமால் கைகளில் உள்ள சங்கு சக்கரமானது, வெகுதூரத்திலுள்ள சிங்கம் கையில் கொண்டுள்ள சங்கு சக்கரம் போல் காட்சி தருகிறது என்பதை,

**“இருசுடர் இருபுறத்து ஏந்தி” (கம்ப.பால.192)**

என்ற அடிகள் மூலம் திருமால் தன் அழகிய கைகளில் சங்கினையும், சக்கரத்தையும் ஏந்திக்கொண்டு அழகுடன் காட்சி தருபவர். அவ்வாறு காட்சி தரும் பொழுது சிங்க ஏறு போல காட்சி தருகிறார் என்பதைக் கம்பர்.

**“சங்கொடு சக்கரம் தரித்த செங்கை அச்சிங்க ஏறு” (கம்ப.பால.753)**

என்றும், மனிதர்கள் தாம் செய்த தவத்தின் பயனால், இறைவன் திருமாலாக அவதரித்து வந்தான். அவன் சங்கையும், சக்கரத்தையும் தரித்திருப்பவன், அவன் ஈடு இணையற்றவன் என்பதை,

**“எங்கள் செய் தவத்தினில் இராமன் என வந்தோன்**

**சங்கினோடு சக்கரமுடை” (கம்ப.பால.1232)**

என்ற அடிகள் இயம்புகின்றன.

யானை கதறி அழ, முதலையின் உயிரை மாய்த்த சக்கரத்தை உடைய இறைவன்,

**“வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி”**

**(கம்ப.அயோத்தி.277)**

என்றும் சங்கு, சக்கர ரேகைகள் கொண்டவன். திருமால் இவை இரண்டும் எவரிடமும் காண இயலாது.

**“சங்கு சக்கரக் குறியுள தடக்கையிற் றாளில்**

**எங்கு மித்தனை யிலக்கணம் யாவர்க்கும் மில்லை”**

**(கம்ப.கிட்கிந்தா.160)**

என்றும்,

திருமாலாகிய இறைவன் இராமனாக அயோத்தியில் வந்த திருமால் சங்கு சக்கரம் இவற்றை விடுத்துக் கையில் வில் ஏந்திய செய்தியைக்

**“... கைவிமல் ஏந்தி து**

**சூலமும் திகிரி சங்கும் சக்கரமும் துறந்து”**

**(கம்ப.சுந்தர.1126)**

என்ற அடிகள் இயம்புகின்றன.

**துளசி**

வைணவர்கள் துளசிமாடம் அமைப்பதை ஒரு வகைச் சமயக்கடமையாக கொண்டுள்ளனர். துளசியை வைணவச் சமயப் பொருளாகக் கருதுகின்றனர். துளசிச் செடி வளர்ந்திருக்கின்ற பகுதியில் திருமால், நான்முகன், உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளுடன் வாசம் செய்வதாகக் கருதுகின்றனர்.

துளசி வழிபாடு குறித்து புராணங்களும், காப்பியங்களும் பலவகைக் குறிப்புகளைத் தருகின்றன. துளசி மீது பக்தி கொண்டு அதில் கடவுள் தன்மை கண்டு பிறரையும் காணுமாறு செய்தவர் துளசிதாசர். இவர் “சீதை துளசிக்குப் பூசை செய்ததன் பயனாக அவளுக்கு இராமபிரான் கணவனாகக் கிடைத்தார்” என்று தன்னுடைய துளசி ராமாயணத்தில் பாடியருளியுள்ளார்.

இலங்கைக்கு அனுமன் சென்ற போது விபீடணன் மாளிகையில் துளசி மாடத்தையும், நிறைந்த துளசி செடிகளையும் கண்டு இங்கு ஒரு விசுணு பக்தர் வசிக்கிறார் என்று எண்ணிய பொழுது, அது விபீடணனின் மாளிகை என்பதைப் பின்னர் அறிந்து கொண்டான். அனுமன் வைணவ சமயத்தின் அடையாளச் சின்னங்களில் ஒன்றாக விளங்கும் துளசி இலைகளை மாலையாக அணிபவன் திருமால். இதனையே,

**“இலைகுலாத் துழாய் முடி ஏக நாயகன்” (கம்ப.பால.454)**

**“மருவாரும் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவான்”**

**(கம்ப.ஆரணி.38)**

துளசி மாலையை அணிந்த மார்பினை உடைய திருமால் என்றும் திருமகளைத் தன் மார்பில் தரித்துக் காட்சி அளிப்பவன் என்றும் கம்பர் சிறப்பித்துள்ளார்.

இனியவை நாற்பதின் முதல் பாடலில் திருமால் துளசிமாலை அணிந்ததை,

**“தொல்மாண் துழாய் மாலையானைத் தொழலினிதே**

**துளசிமாலையினை உடைய திருமாலைத் தொழுதல் வாழ்வில்**

**இன்பம் பயக்கும்**

**(இனியவை.1)**

என்பதில் காணமுடிகிறது.

**பாற்கடலில் பள்ளி கொள்ளுதல்**

ஆதிசேசன் காசிபர்-கத்ரு தம்பதியரின் மகன். பாற்கடலின் திருமாலின் படுக்கையாக இருக்கின்ற நாகம். ஆதிசேசன் சிவபெருமானது கழுத்தில் ஆபரணமாக இருக்கும் வாசுகி பாம்பின் சகோதரனாக அறியப்படுகிறார்.

திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டு அரிதுயில் வண்ணனாகக் காட்சியளிக்கிறார். இதைக் கம்பர் பல்வேறு பாடல் அடிகளில் எடுத்துரைப்பது சிறப்புடையது ஆகும்.

**“அரா-அணை அமலன் என்று அயிர்க்கும் ஆற்றலான்”**

**(கம்ப.பால-807)**

**“அராஅணை துறநத்து போந்து அயோத்தி எய்திய இராகவன்”**

**(கம்ப.பால்-:1290)**

**உறைந்த பாற்கடல் சேக்கை உடன் ஓரீஇ”**

**(கம்ப.அயோத்தி-522)**

கடவுளான திருமால் பூவுலகில் இராமனாக அவதரித்தது தர்மத்தை நிலை நாட்ட அவர் எப்போதும் வசித்து வரும் திருப்பாற்கடலில் ஆதிசேசன் என்கிற படுக்கையில் எழுந்த பெருமான், அயோத்தியில் அவதாரம் செய்வதாகக் கம்பர் கூறுகிறார்.

**“பஞ்சு அணை பாம்பணை ஆகப்பள்ளி சேர்”**

ஆதிசேசனாகிய திருமாலின் படுக்கை பஞ்சு மெத்தைப் போல மென்மையானதாகக் காட்சியளிக்கும்.

திருமால் பாற்கடலில் பள்ளிகொள்வதைப் பெரும்பாணாற்றுப்படை,

**“நீடுகுலைக் காந்தளஞ்சிலம்பிற் களிறு படிந்தாங்கு**

**பாம்பணைப்பள்ளி அமர்ந்தோன் அங்கண்”[11] (பெரும்பாண்.371-379)**

நீண்ட பூங்கொத்துக்களை உடைய காந்த பூக்கள் மலர்ந்த அழகிய மலையிலே யானை கிடந்தாற்போல, பாம்பணையாகிய படுக்கையிலே அரிதுயில் கொண்டுள்ளான்.

**“அரவணை யமலனுக் களிப்ப ராலது”** என்று பாம்புப் படுக்கை பற்றியும் திருமாலின் பண்புகளையும் கூறுகின்றார்.

விபீடணன் இராமனைக் காணவரும் போது, இராமனைச் சூழ்ந்திருக்கும் வானரக் கூட்டங்களைக் காண்கிறான். அவை நான்கு புறங்களிலும் நான்கு கடல் போல் தோன்றின. தம்பி இலக்குவன் இராமன் பக்கத்தில் நின்று காவல்

செய்கிறார். அவனது தோற்றம் பாற்கடல் சூழ்ந்து நிற்க. வடக்கு மலையாகிய மேரு மலையை நினைவூட்டுவதைப் போலக் காட்டித்தருவதாகக் கூறுகியதை,

**"மார்க்கடம் சூழ்ந்த வைப்பினிளையவன் மருங்குகாப்ப**

**நாற்கடம் உடுத்த பாரின் நாயகன் புதல்வன் நாமம்**

**பாற்கடல் சுற்ற விற்கை வடவகை பாங்கு நிற்ப"**

**(யுத்தகாண்டம்:132)**

**"நெடும் பாற்கடல் கிடந்தாரும்"**

திருமால் ஓயாத அலைகளையுடைய பாற்கடலில் ஆதிசேடனாகிய பாம்பினை அணையாகக் கொண்டு அரிதுயில் அமர்ந்துள்ள தோற்றத்தினை,

**"பாடிமிழ் பரப்பகத் தரவணை அசைஇய**

**ஆடுகொள் நேமியாற் பரவுதும்"[12] (கலி.105)**

என்ற அடிகள் மூலமாக சோழன் நல்லுருத்திரனார் பரவிப் போற்றியுள்ளார்.

நீண்ட பாற்கடலில் அரிதுயில் கொண்டு செயல்படும் திருமாலே இவ்வுலகத்தைக் காத்து அருள்புரிந்து வருபவன் என்ற செய்தியையும் கூறுகிறார்.

**காத்தல் தொழில்**

திருமால் முன்பு யுகம் முடியும் காலத்தில், குறுகிய உருவிலேயே அண்டங்களைத் திருவயிற்றில் அடக்கிக்ளெளகாண்டு, சின்னஞ்சிறு பாலகனாக ஆலிலைமேல் பள்ளி கொண்டிருந்தவன் என கம்பர் திருமாலை உலகம் உண்ட திருமால் என வர்ணிக்கிறார்.

**"அண்டமும் முற்றும் அகண்டமும், மேல்நாள்**

**உண்டவன் ஆரம்" (கம்ப.பால-443)**

இத்தகைய உலகத்தைக் தன் வயிற்றில் அடக்கிக் காத்த நிகழ்வை விசுவாமித்திரர் கூறுகின்றார்.

திருமாலுக்குரிய காத்தற் தொழிலின் சிறப்பைப் பற்றி,

**“ஒருமை வினை மேவு உள்ளத்தினை”**13

என பரிபாடல் சுட்டுகிறது.

**“புவனம் ஆக்கி, மற்றவை அனைத்தையும் அணிவயிற்று அடக்கி**

**காக்கும் நீ, ஒருவேள்வி காத்தனை எனும் கருத்தே”**

**(பாலகாண்டம்:18)**

திருமால் அண்டம் பலவற்றையும், அனைத்து உயிர்களையும் உள்ளே உண்டும், வெளியில் உமிழ்ந்தும், அவை தனது வயிற்றின் உள்ளேயும், வெளியும் இருக்கும்படி புரிந்து, புறத்தும் உள்ளவனாகி இருந்து, பிரளய காலத்தில் அவைகளைத் தனது வயிற்றில் அடைத்து வைத்துக் கொண்டு, பிறகு உமிழ்ந்து வெளிப்படுத்திக் காத்தார்.

**வில்**

திருமால் தேவர்க்கெல்லாம் தேவனாகத் திகழ்பவர். சிவபெருமானின் வில்லை ஒடித்த வீரன் திருமால், மாபெரும் பூமி முழுவதையும் காப்பவன்,

**“வேதர் பிடித்த போர் வில் ஒடித்த சேவகன்” (கம்ப.பால:32)**

சிவன் கையில் உள்ள வில்லை ஒடித்து, கோதண்டமாகிய வில்லைத் தன் கையிலேந்தி, சிவந்த அடிகள் வருந்த அடியவர்களைக் காத்தருளியதை

**“தேவா விங்கிவ்வோ நின்னொன்று நிலையென்றார்**

**சிலையேநதி வந்தெம்மைச் சேவடிகள் ணோவ”**

**(கம்ப.ஆரண்ய.-99)**

**"நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்றான்"**

**(.கம்ப.சுந்தர.-1122)**

நீண்ட தன் அம்பு ஒன்றினால் தன்னை எரித்த இராவணனோடு போர்த்தொடுக்க நின்றான்.

**"மறை முதல் தனி நாயகன் வானினை மறைத்த"**

**(கம்ப-யுத்த:101)**

இராவணன் திருமாலோடு கடுமையாகப் போர் புரிகிறான். அம்புகளைச் சரமாரிப் பொழிகிறான். வானம் மறைந்து விடுகிறது. இராமன் தனது கொடுமையான அம்புகளால், இராவணனுடைய அம்புகளைப் பிளந்தெரிந்தான். இத்தகைய திருமாலாகிய இராமனை "வேதங்களில் புகழ்ந்து காணப்படுகின்ற தனித்தன்மை வாய்ந்த நாயகன் "ஸ்ரீமந் நாராயணன்" என்று கம்பர் குறிப்பிடுகிறார்.

வில்லினைப் பற்றி சிலப்பதிகாரம்,

**"அயலெழுதிய புலியும் வில்லும்"**[15]

**"சிலையமர் வென்றி கொடுப்போ ளல்லள்"**[16]

எனும் பாடலடிகள் மூலம் புலப்படுத்துகின்றன.

**தாமரை**

மலர்களில் சிறந்தது தாமரை மலர் என்பர். இத்தாமரையைத் திருமாலின் கண்கள், முகம், கை, கால்கள் முதலியவற்றிற்கு உவமை கூறுதல் ஆழ்வார்களின் மரபாகும். திருமாலின் வடிவழகை வருணிக்கும் பேயாழ்வார் திருமாலின் அழகில் தன்னை மறந்து பாடுகிறார்.

**"கண்ணும் கமலம் கமலமே கைத்தலமும்**

**மண்அளந்த பாதமும் மற்ற சுவையே" (மூன்றாம் திருமொழி.9)**

குளிர நோக்குகின்ற கண்கள், நோக்கியபின் அனைத்துக் கொள்கின்ற திருக்கைகள், அவ்வழகுக்கும் மென்மைக்கும் தோற்றுவிடும் திருவடிகள் என்று இவை யாவுமே ஆழ்வாருக்குத் தாமரைப் பூப்போன்று தோன்றுகின்றன.

திருமாலின் கண்கள் மலர்ந்த தாமரை மலரைப்போல் சிவந்த கண்கள், இராமனுடைய கண்கள் என்கிறார்.பெண்கள் இராமனுடைய பட்டாபிசேக திருமணத்தைக் காண அயோத்திக்கு வந்தனர். அவர்களது முகம் இராமனைக் கண்டதும் மலர்கிறது. அம்முகமானது தாமரை மலரை முந்திக்கொண்டு மலர்ந்தது என்கிறார்.

**“காவல் மாமுடி சூடுபேர் எழில் காணலாம் எனும், ஆசைகூர்**

**பாவைமார் முகம்˙என்ன முன்னம் மலர்ந்த பங்கயராசியே”**

**(கம்ப.அயோத்தி-249)**

அடியவர்களின் துன்பத்தைப் போக்க, அரக்கர்களிடமிருந்து விடுதலை பெற பகைவர்களிடமிருந்து அடியவர்களை மீட்டு, அவர்களின் வேண்டிய வரத்தின்படி அவர்களுக்கு உதவுவது தாமரை போன்ற திருமாலின் திருவடிகள் என்கின்றார் கம்பர்.

பன்னிரண்டு இதழ்களையுடைய மலராத தாமரை மலரில் சிரிமந்த் நாராயணன் எழுந்தருளியுள்ளான். பூமியில் உள்ள தாமரைக்கு மலர்வது, சாய்வது போல என்கிற தன்மைகள் உண்டு. சிரிமந் நாராயணன் வீற்றிருக்கும் தாமரை மலர்வது என்பது தனித்தன்மை உடையது. எப்போதும் மலர்ந்தே காணப்படும் சிறப்புடையது.

**“எண்திசையும் திண்சுவராவோழேழ் நிலை வகுத்த**

**அண்டப் பெருங் கோயிற்கெல்லாம் அழகுடைய**

**மண்டலங்கள் மூன்றின் மேலென்று மலராத**

**புண்டரீக மொட்டின் பொருட்டே புரையம்மா” (கம்ப.ஆரண்ய-1183)**

தாமரை மலர்களை ஒத்ததன் திருவடிகளால் இவ்வுலகத்தைத் திருமால் அளந்தான் என்பதை,

**“புண்டரீகக் கண் ஆழிப் புரவலன் பொலன் கொள்”** என்று இராமனுடைய தாமரை மலர் போன்ற இராமனுடைய பாதங்களை விட்டு நீங்காமல் வாழ்வாயாக என்று குறிப்பது சிறப்புடையதாகும்.

**“அரசியல் பாரம் பூரித்து அயர்ந்தனை இகழாது ஐயன்**

**மரைமலர்ப் பாதம் நீங்கா வாழுதி” (கம்ப.கிட்கிந்தா-382)**

இராமனைக் காணும் போது தாமரை மலர்கள் பூக்கப்பட்ட கரு நிறமுள்ள கடல் விளங்குவதைப் போல் காணப்படுகிறான் என்பதை

**“பாற்கடல் சுற்றவிற்கை வடவரை பாங்கு நிற்பக்**

**கார்கடல் கமலம் பூத்தது எனப் பொலிவானைக் கண்டான்”**

**(கம்ப.யுத்த-438)**

திருமாலைத் தாமரை மலரில் இருக்கும் பிரம்மாவும் போற்றி வழிபடுகிறார்.

**“பண்டை நான்மகனே ஆதிசராசரத்து உள்ளப் பள்ளப்**

**புண்டரீகத்து வைகும் புராதனா! போற்றி போற்றி”**

**(கம்ப.யுத்த.-604)**

தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மாவையும் அவனுக்கு இணையாகிய முனிவர்களும் தம்மை வணங்கும் திறம் படைத்தவர் திருமால் ஆவார்.

**திருமகள்**

அமுதம் வேண்டி தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த பொழுது அதிலிருந்து எண்ணற்ற பொருள்களும் இறைகளும் வெளிவந்தன. அதில் ஒன்றாக லட்சுமி தேவியும் தோன்றினாள். உலக இயக்கம்

அனைத்திற்கும் காரணமாக இருக்கும் இலக்குமி ஆகிய திருமகள் திருமாலின் மார்பில் இருந்து இயங்குகின்றாள். இந்துக்கடவுளின் இராணியாகவும் அதிர்ஷ்ட தெய்வமாக வழிபடுவது மரபு.

இலக்குமி என்ற சொல்லுக்கு இலட்சணம் பொருந்தியவள் என்று பொருள். திருமகள், அலைமகள் ஐசுவர்யா, வைசுணவி, நாராயணி, பார்கவி எனப் பல்வேறுப் பெயர்களில் அழைக்கப்படுகிறார்.

விசுணுவின் அவதாரங்களின் துணைவியாக சீதை, உருக்மணி, பத்மாவதி போன்ற அவாதாரம் எடுப்பதாகக் கூறுவதுண்டு.

'திரு' என்ற சொல்லிற்குச் செல்வம் என்பது பொருள். வடமொழியில் 'ஸ்ரீ' என்பது போல தமிழில் 'திரு' என்ற சொல் வழங்கப்படுவது சிறப்பு. அவ்வகையில் திருமகளாகிய இலக்குமி திருமாலின் மனைவியாக இங்குப் பல நிலைகளில் காட்டியுள்ளார் கம்பர்.

**"கரியவன் உலகு எலாம் கடந்த தாள் இணை**

**திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டவே" (கம்ப.பால-.455)**

உலகத்தை மூன்று அடியில் அளந்த பிறகு திருமால் இந்திரனுக்கு உரியது எனப் பதவியைக் கொடுத்து விட்டுப் பிறகு திருமகளோடு பாற்கடலில் பள்ளி கொண்டான் என்பதை விளக்கியுள்ளார்.

திருமகள் நாயகன் என்கிறார். கம்பர் திருமால் என்ற சொல்லை எங்கும் உணர்த்த வில்லை திருமாலைக் குறிக்கவே கம்பர் இவ்விடத்தில் திருமகள் நாயகன் எனக் கூறுவது பொருத்தமாக உள்ளது.

யாவர்க்கும் செல்வம் தரும் திரு என்ற சொல்லை உடைய திருமகள் யாவர்க்கும் செல்வமாகிய வீடுபேற்றை அளிப்பவள். திருமகள் திருமாலின் மார்பில் உறைபவள். மலர் போன்ற அழகினையும் உடையவள். திருமகள் அழகில் சிறந்தவள் என்பதை,

**“பூவில் திருவை அழகின் புனை கலத்தை**

**யாவர்க்கும் செல்வத்தை வீடு என்னும் இன்பத்தை**

**ஆவித் துணையை அமுதின் பிறந்தாளை**

**தேவர்க்கும் தம்மோயை ஏவினார் பாற்செல்ல”**

**(கம்ப.யுத்த-292)**

எல்லோருக்கும் அவரவர்கள் விரும்பும் ஐசுவா்யமாக உள்ளவள். பரமபதத்தில் வீடுபேறு அடையப்படும் பேரின்ப மயமாக உள்ளவள். எல்லோருக்கும் உற்ற துணையாகிறவள். திருப்பாற்கடலில் அமிழ்தத்துடன் தோன்றியவள். தேவா்களைப் பெற்று வளா்க்கும் தாய் போன்றவள். செந்தாமரை மலரில் வாழ்பவள்.

நம்மாழ்வாா் தம் பாசுரத்தில் கூறும் போது, இமைப்பொழுதும் பிரியாத திருப்பாற்கடலில் பிறந்த மலா்மகள் வாழும் மாா்பை உடையவன், ஒப்பற்ற புகழை உடையவன் என்று நம்மாழ்வாா் பாடும் பாடலில்,

**“அகலகில்லேன் இறையும் என்று அலா்மேல் மங்கை உறைமாா்ப”**

**(நம்மாழ்வாா்:3559)**

என்றும் நீங்காத திருமாலினைக் காணமுடிகிறது.

செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் களிப்புடன் அமா்ந்திருப்பது போல் என்கிறாா். நந்தா விளக்கு போல் (தூண்டா விளக்கு) என்கிறாா். மணம் மிக்கக் கொழுந்து. மூவுலகங்களையும், உயிா்களையும் முறை முறையாக ஆதிகாலத்தில் பெற்றுத் தந்தவள்.

திருமால் மாா்பில் அம்முதல்வனது தேவியாகிய திருமகள் அமா்ந்திருக்கும் திறத்தை,

**“திருமறு மாா்பின் முந்நீா் வண்ணன்”**[17] **(பெரும்பாண்.29-30)**

எனப் பெரும்பாணாற்றுப்படையும்,

**“மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர”[18] (கலி.145)**

எனக் ˙ கலித்தொகையும்,

**“திருவார் மார்பன்”[19] (மலைபடு.335)**

எனத் திருமகள் தங்கும் மார்பன் என மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது.

மேலும் கம்பர் கூறுகையில்,

**“தேவியைத் திருமறு மார்பின் தீர்ந்தனன்”**

என்றும்,

**“திருவாழ்மார்ப”**

என்றும் போரில் வெற்றி பெற்று வந்த திருமால் திருமகளாகிய திருமகளுடன் தன் அயோத்திக்கு வந்து சேர்ந்தான் திருமாலாகிய இராமன். திருமாலின் திருமார்பில் அமர்ந்தால் சீதை என்று குறிப்பிடுவது சிறப்புடையதாகும்.

**பிரம்மன்**

படைக்கும் கடவுள் பிரம்மா என்பது அனைவரும் அறிந்த ஒன்றாக இருக்க அத்தகைய பிரம்மாவையே படைத்த பெருமைக்குரியவன் திருமால். பரிபாடலும் இச்செய்தியைக் கூறுவதைக் காணமுடிகிறது.

**“மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை**

**பூவொடு புரையும் மேனி” (பரிபாடல்)**

திருமாலின் கொப்பூழிலிருந்து பிரம்மா தோன்றினான் என்ற செய்தி தரப்பட்டுள்ளது.

**“ஓயாத மலரயனே முதலாக உளராகி**

**மாயாத வானவர்க்கு மற்றொழிந்த மன்னுயிர்க்கும்" (கம்ப.ஆரண்ய-53)**

ஓயாத மலரனையன் என்று பிரம்மாவைக் குறிப்பிடுகிறார். பிரம்மன் தொடர்ந்து படைத்தல் தொழிலில் நீடிப்பதில்லை. ஆகையால் கற்பங்கள் தோறும் பலபிரம்மாக்களைத் தோன்றச் செய்கிறார் பரமனான திருமால் என்ற செய்தி இங்குச் சுட்டிக் காட்டியிருப்பது சிறப்பு.

அன்னப் பறவையை ஊர்தியாகக் கொண்டவன் பிரம்மன். அத்தகைய பிரம்மானும் திருமாலாகிய இறைவனை வழிபட்டு வாழ்வில் உயர்வு அடைபவன் என்று கம்பர் சுட்டுகிறார்.

**"அன்னவூர் தியை முதலா மந்தணர் மாட்டருந் தெய்வம்"**

**( கம்ப.ஆரண்-:56:)**

தாமரை மலரில் தோன்றிய பிரம்மா, குற்றமில்லாத உலகங்களை எல்லாம் அளவுக் கருவியாகக் கொண்டு, கற்ப காலமும் அழியாமலிருந்து, திருமாலின் கல்யாண குணங்களை அளவிட்டாலும், சிறிதும் முடியாத பெருங்கல்யாண குணங்களை உடைய உத்தமன் திருமாலே என்று பிரம்மன் வழிபடுகிறான் என்பதை,

**"நாழி நவை தீருலகமெலாமாக நளினத்து**

**நீதந்த நான்முகனார் தாமே" (கம்ப.ஆரண்ய -291)**

என்று குறிப்பிடுகிறது.

குளிர்ந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மன் திருமாலை வழிபட்டார் என்ற செய்தியையும், பிரம்மன் திருமாலை வழிபட்டதோடு அல்லாமல் முனிவர்களும் தேவர்களும் வழிபட்டனர் என்ற கருத்தை,

**"மறைகளு முனிவர் யாருமலர் மிசையனு மற்றைத்**

**துகளின் முடிவுஞ் சொல்லும் துணி பொரள்”**

**(கம்ப.கிட்கிந்தா-377)**

திருமாலின் சிறப்புகளாகக் கூறுகின்றார். நான்கு வேதங்களை இடைவிடாது ஓதும்படி நான்கு முகங்களுடைய ஒப்பற்ற, படைத்தல் கடவுளான பிரம்மாவும் அத்தகையக திருமாலின் உண்மை நிலையை அறிந்து கொள்ள முடியாது என்கிறார் கம்பர்.

**“எனக்கும் நான்முகத்து ஒருவற்கும், யாரினும் உயர்ந்த**

**தனக்கும் தன்நிலை அறிவு அரும் ஒரு தனித்தலைவன்”**

**(கம்ப.யுத்த-163)**

திருமாலின் திருமந்திரத்தின் சிறப்பை,

**“மண்ணில் நின்று மேல் மலர் அயன் உலகு உறவாழும்”**

**(கம்ப.யுத்த-173)**

மண் உயிர்களைப் படைக்கும் பிரம்மாவும் தன் மன உணர்வால் திருமாலை வழிபடுபவன் என்று குறிப்பிடுகிறார்.

**“எழுத்தியல் நாளத்தி எண்ணி யாவை**

**முழுத்தனி நான்முகன் முதல முற்றுயிர்**

**வழுத்தரும் பொருட்டதோர் புரையின் வைகுமால்**

**விழுத்தனிப் பல்லிதழ் விரையிலா முகிழ்” (கம்ப.யுத்த.200)**

**மலரோன் வைத்த நீள் இருங் கனக முட்டை நெடுசஞ்சுவர் தேய்ப்ப**

**(கம்ப.யுத்த-150)**

அளவில்லாத பகுப்புகளையுடைய பிரம்மனும் சிறப்பு மிக்கவன், அத்தகைய பிரம்மானும் அவனால் எல்லா உயிர்களும், ஓவியத்தில் வரையத்தக்க ஞானத்தோடு கூடியதும், சிறப்புமிகுந்த இதழ்களைக் கொண்டு நறுமணம் கமழும் தாமரையில் தங்கி இருக்கிறான்.

**அருளிச் செயல்கள்**

**கசேந்திரனுக்கு அருள்புரிதல்**

இந்திரயுத்மனன் என்கிற அரசன் விசுணு பக்தி மிகுந்தவன். அவன் விசுணு பூசையில் தன்னை மறந்து ஆழ்ந்திருந்த போது, அகத்திய முனிவர் அவனைக் காண வருகை தந்திருந்தார். இந்திரத்யும் அகத்தியர் வந்திருந்ததை அறியாமல், தொடர்ந்து விசுணு பூசையில் ஆழ்ந்திட, அகத்திய முனிவருக்குப் பணிவிடை செய்யத் தவறினான். கோபமடைந்த அகத்தியர், அரசனை யானை போல் கர்வமடைந்துள்ளதால் யானையாகப் பிறக்கும்படிச் சாபம் கொடுத்தார்.

யானையாகப் பிறந்திருப்பினும். விசுணு பக்தி மாறவில்லை. தினமும் ஆயிரம் தாமரை மலர்களால் விச்ணுவை அர்ச்சித்துப் பூசைசெய்து வந்தான். ஒரு நாள் விசுணு பூசையை மனத்தில் எண்ணி தாமரைக் குளத்தில் இறங்கி மலரைப் பறிக்க இறங்கியதும், ஒரு பெரும் முதலை அதனுடைய காலைப் பற்றிக் கொண்டு இழுத்தது. அம்முதலையும், முற்பிறவியில் கந்தர்வன். அவன், முனிவரின் காலை விளையாட்டாகப் பற்றி இழுக்க, முதலையாகப் பிறந்து போகும்படி சாபமிடப்பட்டான். எவ்வளவு முயன்றும் யானையால் முதலையின் வாயிலிருந்து தப்பிக்க முடியவில்லை. கசேந்திரனுடைய உறவினர்களும் சூழ்ந்து கொண்டு கதறினர். கசேந்திரனைக் காப்பாற்ற முடியவில்லை. யானையின் துதிக்கை மட்டும் நீர் மீது மிதந்தது. உயிர் போய்விடும் நிலை. அது ‘ஆதிமூலமே’ என்று துதிக்கையைத் தூக்குப் பிளிறி அடைக்கலமடைந்தது. தன்னைக் காப்பாற்ற அக்கடவுளின் திருநாமத்தை அறியாமல், ஆதியான பரம்பொருளே என்று சரணடைந்தது. கசேந்திரனின் அலறல் பிரம்மா, சிவன் மற்றத் தேவர்களின் காதுகளில் விழுந்தும், அவர்கள் யாரும் தங்களை ஆதிமூலமாக அறிந்து கொள்ளாததால், கசேந்திரனை மீட்கப் புறப்படவில்லை. விசுணுவின் காதுகளில் அந்த ஓசை ஒலிக்க, ஆதி மூலமான அவர் கருடன்

மீது ஏறி விரைந்து வந்தார். சக்ராயுதத்தைச் செலுத்தி முதலையை வெட்டிக் கொன்றார். யானை விடுவிக்கப்பட்டது. யானையும், முதலையும் சாபம் நீங்கின. இவ்வாறாக திருமால் அஃறிணை உயிர்களின் ஓசையைக் கேட்டு அவைகளுக்கும் அருள்புரிபவர் என்பதைத் திருமாலின் அருளிச்செயலாகக் கம்பர் கூறுகிறார்.

கருமையான நீண்ட தும்பிக்கையையுடைய யானை தனக்குத் துன்பம் உற்ற காலத்தில், அரவணையில் துயிலும் ஆதிசேசனைப் படுக்கையாகக் கொண்டவனிடம் என்று அடைக்கலம் அடைந்தது.

**“கரா மலைய தளர்கைக் கரி எய்தே” (கம்ப.பால-299)**

கம்பர் பல பாடல்களில் திருமாலை மும்மூர்த்திகளுக்கு முதல்வன் என்றும், அவரே ஆதிமூலம் என்றும் பாடியுள்ளார். இப்பாடலில் இப்புவியில் தோன்றியவர்கள், யாவற்றையும் துறந்து, திருமாலைச் சரணடைந்து மோட்சம் அடைபவர்கள், பரமபதத்தில் அடையும் இன்பமே பேரின்பமானது என்பதை

**“முப்பரம் பொருளிற்கும் முதலை மூலத்தை**

**இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை” (கம்ப.பால-1312)**

என்ற அடிகள் மூலம் இயம்புகிறார். யானை கதறி அழ, முதலையின் உயிரை மாய்த்துச் சக்கரம் கையில் கொண்டிருக்கும் நாராயணனை ஒத்த மனிதருள் சிறந்தவகாக இராமனின் கருணை வேதங்களும் அறியமுடியாத திருமால் என்கிறார். இதனை

**“வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி**

**நாரணன் ஒக்கும், இந்த நம்பிதன் கருணை என்பார்”**

**(கம்ப.அயோத்தி-217)**

என்ற பாடலில் உணர்த்துகின்றார்.

கசேந்திரனைக் காத்த திருமாலைக் கம்பர் பாடும் போது,

**“கடுத்து நிமிர் கரம்கவ்வக் கையெடுத்து மெய்கலங்கி**

**உடுத்த திசை யனைத்தினும் சென்றொலி கொள்ள வுறுதுயரால்**

**அடுத்த பெருந்தனி மூலத் தரும் பரமே பரமேயென்**

**றெடுத்தொருவரா ரணமழைப்ப நீயோ வர்தே னென்றாய்.”**

**(ஆரண்யகாண்டம்:49)**

**“போர் அணங்கு இணங்கர் கவ்வ, பொது நின்று ‘முதலே’ என்ற**

**வாரணம் காக்க வந்தான் அமரரைக் காக்க வந்தான்”**

**(கம்ப.சுந்தர-1125)**

என்கின்றார். தேவர்களைக் காப்பது போலவே, ஆதிமூலம் என அழைத்த யானையின் துயரினையும் காத்தவன் என்பதும் புலனாகிறது.

“பிரகலாதன் தன்னை அழிக்க வந்த யானையிடம் கூறுவதாக அமையும் இப்பாடலில் உன்னுடைய தாய், தந்தை இனத்தைச் சேர்ந்த கசேந்திரனைப் பல காலம் முன்பு ஒரு முதலை விழுங்க முனைய, ‘முதல் பொருளே’ என்று சிரிமந் நாராயணனை ஓதி அழைக்க, அவன் உடனே வந்தான். முதலையைக் கொன்று கஜேந்திரனுடைய உயிரைக் காப்பாற்றினான். அத்தகைய நாராயணனே எப்போதும் எல்லா உயிர்களையும் காப்பவன் என கம்பர் கூறும் கருத்து சிறப்புடையது. இதனை

**“போதகம் ஒன்று கன்றி இடங்கர் மாப்பொருதபோரின்**

**ஆதிஅம்பரமே! யான்உன் அபயம் என்று அழைத்த அந்நாள்**

**வேதமும் முடிவு காணா மெய்ப்பொருள் வெளிவந்த எய்தி**

**மாதுயர் துரைத்த வார்த்தை மறப்பரோ, மறுப்பிலாதார்”**

**(கம்ப.யுத்த-419)**

என்ற பாடலில் கசேந்திரனைக் காக்க திருமால் கருடன் மீது ஏறி, விரைவாக பறந்து வந்து காப்பாற்றிய நிகழ்ச்சி, கசேந்திரன். முதலையின் வாயில் சிக்கித் தவித்து, தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத் திணறியது. அது அழகிய ஆதிமூலமே நான் உன்னை அடைக்கலம் அடைகிறேன். அபயம் அளி என்று கூக்குரல் இடுகிறது. வேதத்தினாலும் இத்தகையவன் என்று அறிந்துகொள்ள முடியாத மெய்ப்பொருளான திருமால் விரைத்து வந்து காட்சியளித்து கசேந்திரனுடையத் துயரை நீக்கினான். இறைவனின் இந்நிகழ்வை யாராலும் மறக்கமுடியாது என்கிறார்.

**“வள்ளலே! காத்தி என்ற மாகரி வருத்தம் தீர**

**புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதனா! போற்றி! போற்றி”**

**(கம்ப.யுத்த-605)**

என்று கம்பர் திருமாலைப் புகழ்கிறார்.

## திருமாலின் திரு அவதாரம்

### அவதாரம்

அவதாரம் என்பது வைணசமயத்தில் தலையாய ஒன்றாகும். அவதாரம் என்ற சொல்லை அவ+தார் எனப்பிரித்து, அவ-கீழ், தார்-இறங்கிவரும் முறை எனப் பிரித்துப் பொருள் கொள்வர் இறைவன் மேலிருந்து மனிதன் வேண்டுகோளுக்கு இணங்கி இறங்கி வரும் நிலையைக் குறிக்கிறது என்பர்.

முழுமுதற் கடவுளான திருமாலின் பல்வேறு அவதாரங்களின் வழிபாட்டினைச் சுற்றியே வைண சமயம் சுழல்கின்றது. அடிப்படையில் காணும்போது இதிகாசங்களும், புராணங்களும் திருமாலின் அவதாரத்தைப் போற்றியே எழுந்துள்ளன எனலாம். திருமாலின் அவதாரங்கள் பத்து என்றும், அவை தசாவதாரம் என்றும் அழைக்கப்படுகிறது.

ஐவணவ சமயத்தின் வளர்ச்சி முழுவதும் அவதாரத்தை மையமாகக் கொண்டு வளர்ந்து வந்துள்ளது. திருமாலின் பல்வேறு நாமங்கள் அவதாரத்தினை அறிவுறுத்துகின்றன.

**தசாவதாரங்கள்**

இறைவன் கருணை காரணமாகப் பரம ரகசியமாய்த் தன்னை எவ்வுயிரும் அறியாதபடி மறைத்துக்கொண்டு மக்களுள் ஒருவனாய் வாழ்வதே அவதாரமாகும் 'அவதாரம்' பற்றிய சொல்லாட்சியை இலக்கியங்களில் காண முயலும் பொழுது சங்கஇலக்கியங்களில் இச்சொல்லாட்சி இல்லை. கம்பர் தன் கம்பராமயணத்தில் அவதாரம் பற்றிப் பதிவு செய்கிறார்.

திருமால் மனுவைக் காப்பாற்றுவதற்தாகவும் வேதங்களை மீட்பதற்காகவும் மச்சமாகிய (மீன்) அவதாரமும், பாற்கடலைக்கடையும் போது தேவர்களைக் காப்பாற்றுவதற்காக மேருமலையைத் தன் முதுகில் தாங்கும் பொருட்டுத் திருமால் கூர்ம (ஆமையாக) அவதாரமும், பாதாள உலகத்தில் பூமியைக் காக்கும் பொருட்டு வராக (பன்றியாக) அவதாரமும், இரணியன் என்ற பாலகனைக் காக்கும் பொருட்டு நரசிம்ம அவதாரமும், மாவலிக்கு முக்தி அளிப்பதற்காக வாமன அவதாரமும், தாய்தந்தையரைக் காப்பாற்றுவதற்காக பூமியில் பரசுராம அவதாரமும், அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலைநாட்ட கல்கி அவதாரமும் எடுத்தார்.

திருமாலின் தசாவதாரங்களின் மூலம் உலக உயிர்களின் மீது அன்புகொண்டு தன் மேன்மை நிலையிலிருந்து இறங்கி பல அவாதாரங்களை எடுத்து மக்களுடைய வாழ்வினை மேம்படுத்திறார். அறநெறிகளின் படி வாழ்ந்து சமுதாயம் முழுமையும் இன்பமாகவும் அமைதியாகவும் வாழ திருமாலின் அவதாரங்கள் வழிகாட்டுகின்றன.

**வாமன அவதாரம்**

மகாபலிச் சக்கரவர்த்தியின் பொருட்டுத் திருமால் எடுத்த அவதாரம் வாமன அவதாரம் திருமால் முதலில் வாமனனாகத் தோற்றம் எடுத்துக் கொண்டு

பிறகு திரிவிக்கிரமனாக உலகங்களைத் தனது அடிகளினுள்ளே அடங்கச் செய்ததைக் கம்பர்,

**“உலகெலாம் உள்ளடி அடக்கி ஓரடிக்கு**

**அலகிலாது அவ்வடிக்கு அன்பன் மெய்யதாம்**

**இலைகுலாத் துழாய் முடிஏக நாயகன்**

**சிலைகுலாத் தோளினாய் சிறியன் சாலவே” (கம்ப.பால-437)**

எனக் குறிப்பிட்டுள்ளார். எல்லா உலகங்களையும் தனது இரண்டு அடிகளினால் திருமால் அடங்கச் செய்துவிட்டார். மகாபலியாசகம் கொடுத்தது மூன்று அடி மண், திருமால் மூன்றாவது அடிக்கு இடம் கேட்க, மகாபலியிடம் இடம் ஏதும் இல்லை. திருமால் மூன்றாவது அடியாக மகாபலியின் தலையை ஏற்றுக்கொண்டார். துளசி இலையை மாலையாக அணியும் நாயகன் திருமால் வில்லை ஏந்திய தோளுடையவனாகக் காட்சி தந்து மிகச் சிறியவனாக வந்தான்.

‘உலகெல்லாம் உள்ளபடி என்று பாடுகிற கம்பன், திருமால் உலகங்களை எல்லாம் தனது திருவடியின் கீழ் அடைத்துக் கொண்டாலும், அவைகளுக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படவில்லையாம். காலால் நசுக்கப்பட்டால் சேதம் உண்டாகும். அதனால் திருமால் கால்பட்டும் அவைகள் உள்ளபடியே கிடந்தனவாம். எவ்வித துன்பமும் ஏற்படவில்லை. மூன்றாவது அடியாக மகாபலியன் தலையின் மீது திருப்பாதத்தை அளக்க வானளாவி நின்றதைச் சுருக்கிச் சிறியதாக்கிக் கொண்டார் திருவிக்ரமனன். இதனை

**“ஒரு குறள் ஆய், இருநிலம் மூவடி மண் வேண்டி**

**உலகு அனைத்தும் ஈர் அடியால் ஒடுக்கி ஒன்றும்**

**தருக எனா, மாவலியைச் சிறையில் வைத்த**

**தாடாளன் தாள் அணைவீர் ...”**

என்ற பாடல் விளக்கிறது. வாமன வடிவம் பெற்று, ஓரடியுள் மண்ணைப் பெற்று, இரண்டு அடிகளால் உலகங்களை அளந்த பின்னர் மூன்றாவது அடியாக மகாபலியைப் பாதாளத்தில் அடைத்த பெருமான். திருமால் மகாபலியை அன்பன் என்கிறார். மகாபலிக்கு வரமும் அளிக்கிறார். மகாபலிமீது விரோதம் கிடையாது. இந்திரனும் அவன் பதவியில் நீடிக்க வேண்டும்.

"இதையே ஆண்டாள் தன் திருப்பாவையில் ஓங்கி உலகளந்த உத்தமன்" (திருப்பாவை-3) என்றும் அன்று இவ்வுலகம் அளந்தாய் என்று நாச்சியார் திருமொழியிலும் குறிப்பிடுவது திருமாலின் சிறப்பை விளக்குகிறன.

கம்பர் இராமனுடைய கால்களை அலங்கரிக்கும் சிலம்பினைப் பற்றிக் கூறுகிறார். தாமரை மலர் போன்ற பாதங்கள் சரணமடைந்தவர்களை ஏற்று அவர்களைக் காப்பாற்றும். அம்மலர்ப்பாதங்களின் சலங்கை பற்றிக் கொண்டதாகக் காட்டுகிறார் கம்பர்.

**"இனிப்பரந்துலகினையளப்ப தெங்கெனத்**

**தனித்தனித் தடுப்பன போலும் சால்பின்**

**நுனிப்பரு நுண்வினைச் சிலம்பு நோன்கழல்**

**பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே" (கம்ப.பால-1309)**

**"கண்டிலன் உலகம் மூன்றும் காலினால் கடந்துத கொண்ட**

**புண்டரீகக் கண் ஆழிப் புரவலன் பொலன்கொர்"**

**(கம்ப.கிட்கிந்தா-78)**

**"ஒத்திரு சிறு குறட் பாதம் உய்த்த நாள்**

**வித்தக அருமறை உலகை மிக்குமேல்**

**பத்துஉள விரல் புடை பரந்த பண்புஉன**

**சித்திரச் சேவடிக்கழலும் சோர்த்தினான்" (கம்ப.யுத்த-1072)**

**“ஓங்கிய உலகமும் உயிரும் உட்புறம்**

**தாங்கிய பொருள்களும் தானும் தான் என”**

**(கம்ப.யுத்த-1077)**

பக்திப் பரவசம் மிகுந்து, இராமன் தனது கால்களில் கட்டிக் கொண்ட சித்திரம் போன்ற கழல்களைச் இராமனுடைய பாதங்களை, திருமாலின் பாதங்களாகப் பாவித்துக் கொண்டு, அந்தத் திருவடிகளின் சிறப்புக்களைத் தனது கற்பனைக் கண்களால் காண்கிறார்.

திருமாலின் திருவடிகளின் சிறப்புகள் கணக்கற்றவை. அவைகளில் ஒன்று, திருமால் திருவிக்கிரமனாக, காண்பது திருவடிகளால் ஈரேழு பதினான்கு உலகங்களையும் அளந்து, கண்களால் கண்டு அறிந்து கொள்ள முடியாத அத்திருவடிகளை, வேதங்களை உணர்ந்த பற்றுடைய பக்தி ஞானிகள்-தங்களது கைவிரல்களால் பரப்பிப் பிடித்தனராம். அவர்களுடைய பக்தி மிகு சின்னமாக அவர்களுடைய விரல்கள் பதிந்த இடம் புடைத்துக் காணப்பட்டதாம் அவைகள் பரந்தாமனின் திருவடிகளில் பதிந்திருந்தாலும், மானிடராக அவதரித்த இராமனுடைய பாதங்களில் உலகில் உள்ளவர்களுக்குத் தங்களது கண்களுக்குப் புலப்படாதது. ஆனால் பக்திப் பரவசம் மிக்க கவியான கம்பரின் கண்களுக்குத் தெரிகின்றன. பரமன் பற்றற்றவர்களுக்குக் காண்பதற்கு அரிய வித்தகன், திருமாலை பற்றுடையவனாகக் காண்கிறார்.

**பரசுராம அவதாரம்**

மகாவிசுணு சமத்க்கினி முனிவருக்கும், ரேணுகாவுக்கும் மகனாக பரசுராமன் என்ற பெயரில் பூமியில் அவதரித்தான். கார்த்திய வீராசுணன் என்ற அரக்கனை அழிக்க எடுத்த அவதாரம் இதுவாகும். இதில் பரசுராமன் அந்தணரின் மகனாக அவதரித்தார். அவர் விரும்பிய ஆயுதமோ கோடாரி. தன் ஆசிரமத்தில் இருந்த காமதேனுவை திருடிச் சென்ற கார்த்திய வீராசுரனையும்

அவர்தம் மைந்தர்களையும் அழிக்கும் பொருட்டு எடுத்த அவதாரம் பரசுராமஅவதாரம் ஆகும்.

அத்தகைய பரசுராமன் இராமனை இறைவனாகக் காண்பதாகக் கம்பர் கூறுகிறார். பரசுராமன் இராமனைக் கண்டு இராமன் தர்மம் தெரிந்தவன். நீதி வழுவாதவன். நேர்மையானவன். கோபத்தை வென்றவன். உலகிற்குக் காவலன். உலகத்தின் துன்பங்களைப் போக்குபவன். உனக்கு நான் தந்த வில்லும் ஏற்றதாகாது என்கிறார்.

**“நீதியாய் முனிந்திடேல், நீ இங்கு யாவர்க்கும்**

**ஆதியான் அறிந்திினென்; அலங்கல் நேமியால்” (கம்ப.பால.1384)**

என்றும்,

**“உன்னுடைய வில்லும் உன்னுரத்து கீடன்றால்” (கம்ப.பால.1385)**

உன் வலிமைக்கு முன்னால் நான் கொடுத்த வில் உனது வலிமை ஈடு இணையற்றது என்கின்றார்.

**நரசிம்ம அவதாரம்**

பிரகலாதன் ஞானம், ஒழுக்கம், அன்பு, தூய்மை நிறைந்தவன். பிரகலாதன் கருவிலே திருவுடையவனாக இருந்தான். பாலகனான அவனுக்கு திருமால் பற்றிய அறிவுதிறன் கருவில் வளர்ந்த சமயத்தில் நாரதரால் போதிக்கப்பட்டவன். தன் அறிவு ஞானத்தால் குருவுக்கும், தந்தைக்கும் உபதேசித்தான்.

பிரகலாதன் ‘ஓம்’ என்கிற பிரணவத்துடன் மந்திரம் கூறித் தொடங்குகிறான். ‘ஓம்’ என்ற பிரணவம் (அ, உ, ம) ஆகிய மூன்று எழுத்துக்களுடைய சேர்க்கை நாராயணனை மட்டும் குறிப்பிடுகிறது. இதனை,

**“தொல்லை நான்மறை வரன்முறைத் துணிபொருட்டு எல்லாம்**

**எல்லை கண்டவன் அகம்புகுந்து இடம் கொண்டது என் உன்”**

**(கம்ப.யுத்த.158)**

என்றும்,

**“ஓதிக்கேட்பது பரம்பொருள் இன்னம் ஒன்று உளதோ?”**

**(கம்ப.யுத்த.160)**

என்றும்,

**“வீடு பெற்றவர், பெற்றதின் விழுமிது என்று உரைக்கும்”**

**(கம்ப.யுத்த.161)**

சுட்டப்பட்டுள்ளன. வேதங்களுக்கு எல்லாம் தலைவனான திருமால் ஒருவனே உலக உயிர்களை உய்விக்க வல்லவன். அவன் நாமமே எல்லோராலும் போற்றி வழிபடக் கூடிய சிறந்த நாமமாகக் கருதப்படும். அத்தகைய திருமாலின் நாமத்தை உச்சரித்தான்.

பிரகலாதன் இரணியனிடம் உன் முன்வினையில் நற்பயனை முன்பே அனுபவித்துவிட்டாய். இப்போது செய்து வரும் தீவினைகளை, இனி அனுபவிப்பாய் என்றான்.

திருமாலாகிய நாராயணன் எல்லாப் பொருளிலும், உயிர் உள்ளவை, உயிர் அற்றவை என அனைத்திலும் உள்ளான் பொருள்கள் வடிவத்தால் வேறுபட்டாலும், அத்தகைய மாறுபட்ட பொருளில் இருப்பவன் நாராயணனே என்கின்றான் கம்பர். பொன்னால் செய்யப்பட்ட நகைகள் மாறுபட்டவை ஆனால் அவைகளைப் பொன் என்றே கூறுகிறோம். அதைப்போல இறைவனும் எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்துள்ளான் என்கின்றான்.

**“உன்னில் பிறிது ஆயினதாம் உலகம்**

**பொன்னின் பிறிதாகில பொற்கலனே” (கம்ப.யுத்த.242)**

பிரகலாதன் தன் தந்தையுடன் தந்தையே என் உயிர் உன்னால் கொல்லப்படுவதற்கு மிக எளிமையானது அல்ல. நாவில் உறையும் திருமால் ஒவ்வொரு இடங்களிலும் தோன்றவல்லவன். அவ்வாறு அவன்

தோன்றவில்லையேல் நானே என் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்றான். திருமாலும் அவன் கண்முன் தோன்ற, பிரகலாதன் ஆடினான், பாடினான் ஆரவாரம் செய்தான். தனது சிவந்த கைகளைத் தனது தலையில் வைத்து வணங்கினான். தூணிலிருந்து கிளம்பிய சிங்கமாகிய திருமாலிடம் வஞ்சினம் பேசி, போர் புரிந்து இரணியன் தன் அகந்தை என்னும் தீயால் அழிந்தான்.

**இரணியனின் சீற்றம்**

பிரகலாதன் கூறிய திருமால் மந்திரத்தைக் கேட்ட தந்தை, இரணியன் மீது கோபம் கொண்டு சீறி எழுந்தான். மும்மூர்த்திகளும், தேவர்களும் மூவுலகில் உள்ள எல்லோரும் போற்றினார்கள். அவர்கள் துதிப்பது எனது பெயரையே. அவர்கள் திருமால் என்ற பெயரைக் கூற பயம் கொள்வர்.

திருமால் என்னுடன் போர் புரிய பலமுறை முயன்று, கருடனுடைய வேகத்தில் தப்பி சென்று மறைந்து, பாற்கடலினுள் புகுந்து இன்னும் உறங்கிக் கிடக்கிறான் எனச் சுட்டுகிறான்.

**வராக அவதாரம்**

இரண்யாகுசன் என்ற அரக்கன் கொடுமை நிறைந்தவர். பூமியைத் தூக்கிச் சென்று நீரினுள் அமுக்கி விட்டான். பூமியை அவன் வைத்திருந்த இடம் யாருக்கும் தெரியவில்லை. இயற்கைக்கு முதலான செயல் இது. பிரம்மாவும், தேவர்களும் பூமியை மீட்டுத்தருமாறு முறையிட்டு, வழிபட திருமால் வராகவதாரம் எடுத்துக் கொள்கிறார். மாபெரும் வராகமாக நீரினுள் பாய்ந்து, பூமியைக் கண்டுபிடித்துத் தனது கொம்பின் மீது வைத்துக் கொண்டு, வெளிக்கிளம்புகிறார். இரணியனை வராகத்தோடு போர் புரிகிறான். வராகம் இரண்யாக்சனைக் கொன்று விட்டுப் பூமியை அதனுடைய பழைய நிலையில் இறக்கி விடுகிறது. பூமி தேவிக்குத் திருமால் அருளிய செயல் இது ஆகும்.

**“அரவாகிச் சுமத்தியால் அணி யெயிற்றி னேந்துதியால்**

**ஒருவாயின் விழுங்குதியா லோரடியா லொளித்தியால்**

**திருவான நிலமகளை யி.்.தறிந்தாற் சீறாளோ**

**மருவாருந் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவான்”**

**(ஆரணியகாண்டம்:58)**

அழகுமிக்க பூமி தேவியைப் பாம்பாக்கி ஆதிசேசனாகச் சுமக்கின்றாய், வராகமாகி அழகு பல்லால் கொம்பால் தாங்குகின்றாய், பிரளய காலத்தில் விழுங்கிக் கொள்கிறாய் இப்படிப்பட்ட உனது செய்கைகளினால் உனது மார்பில் துளசி மாலையுடன் விளங்கும், லஷ்மி கோபம் கொள்ள மாட்டாளோ? என்று கம்பர் கேட்பதைப் போல இப்பாடல் அமைகிறது.

அன்ன வடிவில் பிரமனுக்கு வேதங்களை உபதேசம் செய்த திருமால்,

**“அன்னமா அருமறைகள் அறைந்தாய் நீயவை உன்னை**

**முன்னமா ரோது வித்தா ரெல்லாரும முடிந்தாரோ**

**பின்னமா யொன்றாதல் பிரிந்தேயோ பிரியாதோ**

**என்னமா மாயமிரை யேனமாய் மண்ணிடந்தாய்”**

**(ஆரண்யகாண்டம்:60)**

திருமாலே நீ வராகமாகப் பூமியைக் கொம்பால் தூக்கி நிறுத்தினாய் அன்னப் பறவை உருவத்தில் பிரம்மனுக்கு அருமையான வேதங்களை உபதேசம் செய்தான். வேதங்களை உனக்குப் போதித்தவர் யார்? பிளவுபட்டு பிரிந்தவைகளை ஒன்றாக்கி நீ பிறந்து வந்தாயோ? அல்லது பிரியாமல் தனித்து வந்துள்ளாயோ! உனது மாயத்தை என்ன என்பது,

திருமால் உலகங்கள் அனைத்தையும் காக்கத் தீர்மானம் கொண்டார். அவர் அன்னப்பறவை உருவத்தில் பிரம்மாவின் முன்பு தோன்றி ‘ஓம்’ என்றும், ‘தவ’ என்றும் கூறிவிட்டு மறைந்தார். பிரம்மா, அந்த யூகத்தைப் புரிந்து கொண்டு, பிரணவமாகிய ‘ஓம்’ என்பதைத் தொடக்கமாகக் கொண்டு ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தார். நான்கு வேதங்களும் தோன்றின. பூமி ஆகிய பஞ்சபூதத்தின் வடிவாகத் தோன்ற, மதுபாடகன் என்கிற

அரக்கர்கள்,வேதங்களைத் தூக்கிச் சென்று விட்டனர். மகாவிஷ்ணு கயக்கிரீவ மந்திரத்தை அவதாரம் எடுத்து மதுபாடகர்களை அழித்து வேதங்களை மீட்டுப் பிரம்மாவிற்கு உபதேசித்தார்.

**புராணக் கதை**

பரமசிவனுக்கு ஐந்து தலை. பிரம்மாவிற்கும் முதலில் ஐந்து தலைகள் இருந்தன. பரமசிவன், இவ்வொற்றுமையைத் தவிர்த்துவிட பிரம்மாவினுடைய ஒரு தலையைக் கிள்ளி அகற்றிவிட்டார். ஆனால் அந்தக் கபாலம் பரமசிவன் கையில் ஒட்டிக்கொண்டுவிட்டது. அதை அகற்ற முடியவில்லை. பரமசிவன் செய்தது மகாபாவம். அது நிவர்த்தியாக வேண்டுமானால் கபாலத்தில் பிச்சை எடுக்க வேண்டும். கபாலம் நிறைந்தால் தான், பாவம் நீங்கி, கபாலமும் அகன்று விடும்." என்று தேவர்களும், முனிவர்களும் கூற, பரமசிவன் பல தலங்களுக்குச் சென்று பல காலம் பிச்சை ஏற்றார். கபாலம் நிறைவதாக இல்லை. அவர் மகாவிஷ்ணுவை அடைந்து பிச்சை பெற, மகாவிஷ்ணு 'அட்சயம்' என்று ஆசியுடன் பிச்சை கொடுக்க, கபாலம் நிறைந்தது. அது பரமசிவனுடைய கையைவிட்டு அகன்றது. திருமாலின் சிறப்பை உணர்த்தக் கம்பர் சிவனின் பாவத்தைப் போக்கி அருளிய புராணக் கதையை இங்கு கூறியுள்ளார்.

**"மெய்யைத் தான் சிறிதுணர்ந்து நீ விதித்த மண்ணுயிர்கள்**

**உய்யத்தா னாகாதோ வுளக்கென்ன குறையுண்டோ**

**வையத்தார் வானத்தார் மழுவாளிக் கன்றளித்த**

**ஐயத்தாற் சிறிதையந் தவிர்ந்தாரு முளரையா"**

**(ஆரண்யகாண்டம்:59)**

திருமால் பகவான் ஒருவனே. சிவனுக்கும், பிரம்மனுக்கும் மற்றைய தேவர்களுக்கும், தலைவன், சிவன் கையில் ஒட்டிக் கொண்டிருந்த கபாலம் எம்பெருமானால் விடுபட்டது. இதனால் திருமாலே முதல்வன் என்று அறிந்து கொள்ளலாம் என்று நம்மாழ்வார் பாசுரச் செய்தியும் குறிப்பிடுகிறது.

**“பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும்,பிறர்க்கும்**

**நாயகன் அவனே, கபால நல் மோக்கத்துக் கண்டுகொண்மின்”**

**(நம்மாழ்வார் பாசுரம்:3333)**

**தொகுப்புரை**

- முல்லைநில மக்களின் முழுமுதற் கடவுளாகத் திருமால் திகழ்கின்றார்.
- இந்து சமயத்தில் அறுவகைப் பிரிவுகளில் ஒன்று வைணவம்.
- படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களில் காத்தல் கடவுளாகத் திருமால் விளங்குகின்றார்.
- சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய பதினென்கீழ்கணக்கு நூல்கள் மற்றும் இரட்டைக் காப்பியங்கள் ஆகிய இலக்கியங்களில் திருமால் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.
- இவ்விலக்கியங்களில் திருமால் கடல் வண்ணன், பூ வண்ணன், மாமமணிவண்ணன், அஞ்சன வண்ணன், கரியவன், பலநிறம் உடைய கடவுளாகக் குறிக்கப் பெற்றுள்ளார்.
- பல்வேறு உவமைகளின் வாயிலாக திருமாலின் தோற்ற மாண்பினை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர்.
- திருமாலுக்கு உகந்த மலராக துலாபம் குறிக்கப்பட்டுள்ளது. முடிமுதல் அடிவரை துலாபம் அணிந்த மேனியராக ஆழ்வார்கள் திருமாலைச் சுட்டுகின்றார்கள்.
- திருமால் தன்னுடைய திருக்கரங்களில் ஏந்தியுள்ள படைக்கலன்களாகச் சங்கு, சக்கரம், வாள், வில், தண்டு, கலப்பை, அம்பு முதலானவை குறிப்பிடப்பெற்றுள்ளன.
- திருமாலின் வாகனமாகவும், கொடியாகவும் கருடன் சுட்டப்பெற்றுள்ளான்.

- உலக உயிர்கள் ஒவ்வொன்றும் தம் இம்மை, மறுமையை அறிந்து கொள்ளும் பொருட்டுப் பல்வேறு அம்சங்களாகத் தோன்றினார்.
- தேவர்களின் துன்பங்களைப் போக்குவதற்காக, அரக்கர்களை அழிப்பதற்காகவும், உலகங்களைக் காப்பாற்றத் திருமால் அவதரித்தார்.
- உலகத்து உயிர்களுக்கு நிழலாகிய அருளைக் கொடுக்கின்ற திருவடிகளை உடையவன்.
- முல்லைநிலத் தெய்வமாகிய மாயோன், மலை தரும் கார்மேகத்தை ஒத்த நிறத்தவனாகவும், இலையில் விரும்பி உறைபவனாகவும் விளங்குகின்றான்.
- திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டு அரிதுயில் வண்ணனாகக் காட்சியளிக்கிறார்.
- மூவுலகில் உள்ள அனைத்து உயிர்களின் பிறப்பு முதல் இறப்பு வரை காத்து வருபவன்.
- பிரம்மா, விசுணு, சிவன் என்னும் மும்மூர்த்திகளுக்கு முதல்வனாக விளங்குபவன்.
- திருமால் அண்டம் பலவற்றையும், அனைத்து உயிர்களையும் காத்து வாழ்பவன்.
- பஞ்சபூதங்களாகிய ஆகாயம், வாயு, தீ, நீர், நிலம் இவைகளைக் கொண்டு திருமால் உலகங்களை உண்டாக்கி வருகின்றார்.
- திருமால் இராமன், அரி, மால், கண்ணன், கருநீல வண்ணன், மாதவன், மதுசூதனன், யாதவா என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறார்.
- வைணவ மந்திரமான எட்டெழுத்து மந்திரத்தை உச்சரிக்கும் போது பக்தர்களின் துன்பத்தைப் போக்கி முக்தியை அளிப்பவன்.
- சிவதனுசு வில்லை ஒடித்து உலகம் முழுவதையும் காத்து வருபவன்.
- படைக்கும் கடவுளான பிரம்மாவையே படைத்தற்குரிய பெருமைக்குரியவன்.
- தாமரை மலர்களை ஒத்த திருவடிகளால் உலகத்தை அளந்தவன்.

- திருமகளாகிய லட்சுமியுடன் திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டுள்ளார்.
- கசேந்திர யானை கதறி அழ, முதலையின் உயிரை மாய்த்த சக்கரத்தைக் கையில் கொண்டுள்ளான் திருமால்.
- மாபலிச் சக்கரத்தியின் பொருட்டுத் திருமால் முதலில் வாமனமாகத் தோற்றம் எடுத்து, பிறகு திருவிக்கிரமனாக உலகங்களைத் தனது அடிகளில் அடங்கச் செய்தவன்.
- இரணியனின் தம்பி இரணியாசன் பூமியை நீரினுள் ஒழித்த போது, அதனை மீட்பதற்காக வாராக அவதாரம் எடுத்தான்.

## சான்றெண்விளக்கம்

1. பரிபாடல் - 1
2. அகநானூறு – 360
3. சிலப்பதிகாரம் - 11:35-45
4. பெரும்பாணாற்றுப்படை -30
5. கலித்தொகை -127
6. சிலப்பதிகாரம் -17:10:27-1
7. மேலது - 6:47
8. மேலது - 16:50
9. மேலது – 16:47
10. பரிபாடல் - 1:65-68
11. பெரும்பாணாற்றுப்படை -371
12. கலித்தொகை - 105
13. பரிபாடல் - 3:45
14. சிலப்பதிகாரம் - 11:128-130
15. மேலது -ஆய் - 2
16. மேலது - வேட்டு – 17
17. பெரும்பாணாற்றுப்படை – 29
18. கலித்தொகை - 145
19. மலைபடுகடாம் - 335
20. எத்திராசன் - மு.நூ.ப.60

## இயல் நான்கு

## பாத்திரங்கள் வழி வைணவப்பதிவுகள்

உலகக் காப்பியங்களில் உயர்ந்த இடத்தைப் பெற்றது இராமாயணம். இந்த இராமாயணக் கதை உலகின் பல்வேறு மொழிகளில் எழுதப் பெற்றுள்ளது. கம்பராமாயணத்தில் கதை மாந்தர்களை எளிமையான முறையில் கம்பர் படைத்துள்ளார்.

கம்பர் கதாப்பாத்திரங்களைப் பட்டை தீட்டி மிளிரச் செய்கிறார். நடிப்பின் இலக்கணம் பற்றிப் பேரறிஞர் அண்ணா அவர்கள் “இதுதானே இதை யாரால் தான் செய்யமுடியாது என்று எளிமையாக நினைக்கும்படி இயல்பாக நடிக்க வேண்டும். பார்த்தவர்கள் வீடு திரும்பி அதுபோல நடித்துப் பார்த்து முடியாமல் கைபிசைந்து நிற்க வேண்டும். அதுதான் நடிப்பு.” என்று விளக்குகிறார்.

கம்பனின் இராமகாதையில் ஏராளமான பாத்திரங்கள் இடம்பெறுகின்றன. பாத்திரங்களின் தன்மையையும் ஒவ்வொரு நிலையின் உருவகமாகக் காட்டுகிறார். எடுத்துக்காட்டாகக் கூறினால் இராமன் ஒரு மனைவியோடு வாழும் உத்தமனாகவும், இராவணனைப் பெண்ணாசை கொண்ட அரக்கனாகவும், சீதையைப் பெண்மைக்குரிய கற்பின் கொழுந்தாகவும், சூர்ப்பனகையைப் பெண்ணினத்திற்கே அவமானமாகவும் எடுத்துக்காட்டுகிறார்.

மனிதர்கள், தேவர்கள், அரக்கர்கள், வானரங்கள், முனிவர்கள், பறவைகள் முதலிய நூற்று நாற்பத்தேழு கதை மாந்தர்கள் வருகின்றனர் பாத்திரப் படைப்பு காப்பியத்தின் வெற்றிக்குக் காரணமாக அமைகிறது. சில பாத்திரங்கள் வைணவ சமயக் கடவுளான திருமாலே இராமனாக அவதாரம் எடுத்துள்ளார் என்பதைப் பல இடங்களில் போற்றுகின்றன. அதன் மூலம் திருமாலின் தோற்றங்களையும், வடிவங்களையும் அறிய முடிகின்றது.

**பிரகலாதன்**

இரணிய கசிபு என்னும் கொடிய அரக்கனின் மகன். பிரகலாதன். இவன் சிறந்த திருமால் பக்தன். அவன் தாய் கயாது கர்ப்பமாக இருக்கும் பொழுதே

நாரத முனிவர் அரி என்னும் நாராயணன் தான் ஈரேழ் உலகத்திற்கும் கடவுள் என்பதைதக் கற்பித்தார்.

இச்செய்தியை அறிந்த தந்தை இரணியன் பல விதமுயற்சிகள் செய்து அவனை மாற்ற நினைத்தான். அவை அனைத்தும் பயனளிக்கவில்லை.

யுத்த காண்டத்தில் விபீடணனால் இராவணனுக்கு உரைக்கப்படுகின்ற வரலாறாக இரணியன் பிரகலாதன் கதை அமைந்துள்ளது.

பரிபாடலில் திருமாலைப் பற்றி வரும் நான்காவது பாடலில் பிரகலாதன் கதையை,

**"செயிர் தீர் செங்கட் செல்வ! நிற் நிகழப் -**

**புகைத்த நெஞ்சின், புலர்ந்த சாந்தின்**

**பிருங்கலாதன் பலபல பிணிபட**

**வலங்குழி மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து**

**அலர்ந்த புகழோன், தாதை ஆகலின்**

**இகழ்வோன் இகழா நெஞ்சினனாக, நீ இகழா**

**நன்றா கட்ட அவன் நன்மார்பு முயங்கி**

**ஒன்றா நாட்டவன் உறுவரை மார்பின்**

**படிமதம் சாம்ப ஒதுங்கி**

**இன்னல் இன்னரொடு இடிமுரசு இயபே**

**வெடிபபா ஓடித்தூண் தடியோடு**

**தடிதடி பலபட - வகிர் வாய்த்த உகிரினை"**

என்ற அடிகள் மூலம் அறிய முடிகிறது.

திருமாலைப் பற்றி எழுபத்து மூன்று அடிகளில் உள்ள பக்திப்பாடலை, பிரகலாதனுக்காகத் திருமால் நரசிம்ம அவதாரம் எடுத்த கதையைப் புலவர் கடுவண் இளவெயினார் இயம்புகின்றார்.

**திருமந்திரம்**

பிரகலாதன் "ஓம் நமோ நாராயணாய நம" திருமாலின் திருநாமத்தை அசைவற்றுத் தியானித்து, இரு கைகளையும் தலைமீது கை கூப்புகிறான். இதனையே,

**"ஓம் நமோ நாராயணாய என்று உரைத்து உள்ளம் உருகி**

**தான் அமைந்து இரு தடக்கையும் தசை மிசைத் தாங்கி"**

**(கம்ப.யுத்த-153)**

எனக் கம்பர் கூறுகின்றார்.

நாராயணனை வணங்கும் உலகத்து உயிர்களுக்கெல்லாம் நன்மை உண்டாகும். வேதம் தெரிந்த ஒவ்வொருவரும் தெரிந்து வைத்திருக்க வேண்டிய சொல் நாராயணன் என்பது ஆகும். பிரகலாதன் குரு கற்பித்தவற்றைக் கூறாமல் நாராயணன் என்ற சொல்லை மட்டும் கூறினான். உலகிலுள்ள அனைத்து உயிர்களுக்கு எல்லையைக் கண்டவன் நாராயணன் ஒருவனே. எனவே அப்பெருமானுடைய திருநாமத்தைக் காட்டிலும் சிறந்தது வேறு எதுவும் இல்லை என்பதை,

**"தொல்லை நான்மறை வரன்முறைத் துணிபொருட்டு எல்லாம்**

**எல்லைக் கண்டவன் அகம் புகுந்து இடம் கொண்டது"**

**(கம்ப.யுத்த-158)**

எனும் பாடல் விளக்குகின்றது.

வேதங்களைக் கற்றவர்கள், வேள்வி செய்தவர்கள் அடையும் பேற்றினை விட, நாராயணனின் திருநாமத்தைக் கூறுவதால் கிடைக்கும் பயனைவிட மேலானது எதுவும் இல்லை என்பதை,

**"பதம் தலைக்கொண்டு சமைந்தேன்**

**ஓதிக் கேட்பது பரம் பொருள் இன்னம் ஒன்று உள்ளதா"**

**(கம்ப.யுத்த-160)**

என்ற பாடல் சுட்டுகின்றது.

காடுகளில் வாழும் முனிவர்கள் மலையில் வசித்து, தன்னை வறுத்தி, கடும் தவம் செய்தவர்கள் மேன்மை அடைந்தவர்களைக் காட்டிலும் நாராயணன் அருளால் நான் மேன்மை அடைந்துவிட்டேன். நான்கு முகங்களை உடைய படைத்தல் தொழில் மோற்கொள்ளும் பிரம்மாவாலும் அறியமுடியாத உண்மை நிலையை உடையவன். என் மனதில் எம்பெருமான் உள்ளதால் பிறரால் கற்றுக் கொடுக்கப்படாமலே அனைத்தும் அறிந்து கொண்டேன். இதனை,

**"எனக்கும், நான்முகத்து ஒருவற்கும், யாரினும் உயர்ந்த**

**தனக்கும் தன் நிலை அறி அரும் ஒரு தனித் தலைவன்"**

**(கம்ப.யுத்த-163)**

எனும் பாடலில் அறியலாம்.

பிரகலாதன் தன் தந்தை இரணியனிடம் எம்பெருமானின் திருப்பெயரை ஓதுவதற்கும், போற்றுவதற்கும், காதுகளால் கேட்பதற்கும் உறுதி கொள்ள வேண்டும் என்பதை

**"ஒருவன், யாவர்க்கும் நாயகன், திருப் பெயர் உணரக்**

**கருதக் கேட்டிடக் கட்டுரைத்து, இடர்க் கடல் கடக்க**

**உரிய மற்று இதன் நல்லது ஒன்றுஇல்" (கம்ப.யுத்த-170)**

என்ற அடிகள் மூலம் இப்பிறவியிலே ஏற்படுகின்ற துன்பங்களைக் கடக்க வேண்டுமொனால் எம்பெருமானுடைய திருப்பெயரை உச்சரிப்பதைத் தவிர வேறு எதுவுமில்லை என்கின்றான்.

"நாமோ நாராயணாய" என்கிற எட்டெழுத்து மந்திரத்தை உச்சரிப்பதன் மூலம் விரும்பிய தெல்லாம் கிடைக்கும் அத்துடன் வீடுபேறு கிட்டும் வேள்விகள், யாகங்கள் மூலம் கிடைக்கும் பலனை இத்திருநாமத்தின் மூலம் பெறமுடியும்.

பூலோகம் முதல் மேலுலகம் வரை உள்ள எல்லாவற்றிலும் நிறைந்துள்ளவன். எட்டு எழுத்துக் கொண்ட எம்பெருமானே என்பதை

**"சேம வீடு உறச் செய்வதும், செந் தழல் முகந்த**

**ஓம வேள்வியின் உறு பதம் உய்ப்பதும், ஒருவன்**

**நாமம்; அன்னது கேள்: நமோ நாராயணாய!**

**(கம்ப.யுத்த-172)**

**உள் நிறைந்துள காரணத்தின் ஊங்கு ஒள உணர்வும்;**

**எண்ணுகின்றது இவ் எட்டு எழுத்தே பிறிது இல்லை"**

**(கம்ப.யுத்த-173)**

மூன்று கண்களையுடைய மகாதேவன், நான்கு முகங்களை உடைய பிரம்ம தேவன் முதல் சாதாரண மனிதர்கள் வரை இத்திருநாமத்தை மறந்தவர்கள் இறந்தவர்களுக்குச் சமம்.

**"முக்கண் தேவனும், நான்முகத்து ஒருவனும் முதலா**

**மக்கள்காறு, இம் மந்திரம் மறந்தவ ரிறந்தவார்;"**

**(கம்ப.யுத்த-174)**

என்பதன் மூலம் மந்திரத்தின் மகிமையை விளக்குகிறான்.

பிறவியாகிய ஆழ்கடலில் இருந்து வீடுபேறு என்கின்ற நிலைக்கு ஏற்றிச் செல்லும் மரக்கலமாகவும், ஆபரணமாகவும், மங்கலச் சொல்லாகவும் விளங்குவது இதனையே,

**"தோற்றம் என்னும் அத்தொல் வினைத் தொடு கடல் சுழிநின்று**

**ஏற்று நன் கலன், அருங் கலன் யாவர்க்கும், இனிய**

**மாற்ற மங்கலம், மா தவர் வேதத்தின் வரம்பின்**

**தேற்ற மெய்ப்பொருள் தெரிந்த மற்று இதின்இல்லை."**

**(கம்ப.யுத்த-175)**

என்ற அடிகள் மூலம் இயம்புகின்றான் பிரகலாதன்.

பிரகலாதன் தன் தந்தை இரணியனிடம் எம்பெருமானின் திருநாமமே உன் உயிர், என் உயிர் இவ்வுலகில் உள்ள எல்லா உயிர்க்கும் உறுதியைக் கொடுப்பது என்பதை நிருபணம் செய்ய

**"உன் உயிர்க்கும், என் உயிர்க்கும், இவ்வுலகத்திலுள்ள**

**மன்னுயிர்க்கும்,ஈது உறுதி என்று உணர்வுற மதித்துச்"**

**(கம்ப.யுத்த-176)**

**"வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை: வேந்த! நின்**

**பித்து இன்றி உணர்தியேல் அளவை பெய்குவேன்"**

**(கம்ப.யுத்த-188)**

என்ற அடிகள் மூலம் அறிவுரை பிரகலாதன் பகர்கின்றான்.

நாராயணன் ஒருவனே முழுமுதற்கடவுள் அவன் ஒப்பற்றவன். எல்லா உலகங்களையும் உண்டாக்குபவன். உலகத்தின் முதலும் முடிவும் ஆனவன் இதனைத்,

**"தன்னுள்ளே உலகங்கள் எவையும் தந்து அவை**

**தன்னுள்ளே நின்று, தான் அவற்றுள் தங்குவான்."**

**(கம்ப.யுத்த.189)**

என்ற அடிகள் மூலம் இயம்புகின்றான்.

பிரகலாதன் திருமாலிடம் தன்னைக் காப்பாற்றும்படி துதிக்கவில்லை. திருமால் என்ற சொல்லை உச்சரிக்கவில்லை. தூயவனான திருமால் பக்தனுடைய உள்ளத்தில் என்றும் நிலையாகக் குடி கொண்டிருப்பவன் இதனையே,

**"தூயவன்தனைத் துணை என உடைய"**

**(கம்ப.யுத்த-.212)**

பிரகலாதனைக் கொல்வதற்காக அவன் மீது எறியப்பட்ட அம்புகள் உடலில் பட்ட நொடியில் பொடியாகத் துகள் ஆயின. அதற்குக் காரணம் உலகின் நாயகனான திருமாலின் திருவடிகளையும், அவன் திருநாமத்தையும் எப்பொழுதும் மறக்காதவன் பிரகலாதன் இதனையே,

**"செறிந்த தன்மையும் செய்தில ஆயின: தூயவன் துணிவு ஞன்றா**

**அறிந்த நாயகன் சேவடி மறந்திலன் அயர்த்திலன், அவன்நாமம்"**

**(கம்ப.யுத்த-213)**

என்ற அடிகள் மூலம் திருமாலைத் தூயவன் என்கின்றான்.

“இளங்கோடிகள் வைணவ மந்திரமான “ஓம் நாமோ நாராயணா” எனும் எட்டெழுத்து மந்திரத்தின் மேன்மையை நாடுகாண்காதையில் (சிலம்பு.10:100) உரைக்கின்றார்.”

பிரகலாதன் திருமாலின் திருநாமமான அரியை என்பதை வணங்கி நின்றான். ‘ஆரி’ என்றால் தாங்குபவர், காப்பாற்றுபவர் என்பது பொருள். திருமாலின் திருநாமங்கள் பலவற்றுள் அரி என்கின்ற திருநாமத்தை உச்சரிக்கின்றான். இதனையே,

**“அழுது நின்றவர் அயர்வுற, ஐயனைப் பெய்தனர்: அரி என்று**

**தொழுது நின்றனன், நாயகன் தாள் இணை குளிர்ந்தது சுடு தீயே”**

**(கம்ப.யுத்த.215)**

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன.

உலகத்திலேயே கொடிய விடமுடைய பாம்புகளைப் பிரகலாதன் மீது அவன் தந்தை ஏவிவிட்டான். வாசுகி என்னும் பாம்பு பாற்கடலைக் கடைய கயிறாகப் பயன்படுத்தப்பட்டபொழுது, அதனால் உமிழப்பட்ட விடத்தைச் சிவன் அருந்தி நீலகண்டன் ஆனான்.

அதைப் போலக் கொடிய விடமுடைய பாம்புகள் பிரகலாதனைக் கடிக்க மாற்றம் ஏதும் நிகழவில்லை. இதற்குக் காரணம் திருமாலின் திருநாமத்தை மறவாதவன் என்பது இதை

**“அனந்தனே முதலாகிய நாகங்கள், அருள் என்கொல்?” என அன்னான்**

**நினைத்த மாத்திரத்து எய்தின, நொய்தினில் நெருப்பு பகுவாயால்**

**வளைந்ததாம் அன்ன மேனியினான் தன்மேல், வாள் எயிறு ஊன்ற**

**சினம் தம் மீக்கொள, கடித்தன, துடித்திலன் திருப்பெயர் மறவாதான்”**

**(கம்ப.யுத்த-217)**

என்ற பாடல் உணர்த்துகின்றது.

நாராயணனின் திருநாமத்தை மறவாத பிரகலாதன் உடலில் பாம்புகளினால் கடிக்கப்பட்ட விடம் அமிழ்தமாக மாறியது.

அரக்கர்கள் பிரகலாதனுடைய கைகள், கால்கள், மார்பு, கழுத்து ஆகியவைகளைக் கட்டி அவனை மதங்கொண்ட யானையின் எதிரில் தூக்கிப்போட்டார்கள்.

தன்னைக் கொல்ல வந்த யானையிடம் பிரகலாதன் உன் முன்னோரைக் காப்பாற்றிய அம்முழுமுதற்கடவுள் என் மனத்தில் குடி கொண்டவர் என்று கூறினான். இதைக் கேட்ட ஐராவதம் என்னும் யானை திருமாலை வணங்கி பட்டம் தரையில் படுமாறு வணங்கிவிட்டுச் சென்றது. திருமாலின் கருணையை,

**“உம்பரா லறிய லாகா ஒளியுளார் ஆனைக் காகிச்**

**செம்புலா லுண்டு வாழும் முதலை மேற் சீறி வந்தார்”**

**(திருமாலை:28)**

என்று வியக்கின்றார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

பிரகலாதன் திருமாலின் திருநாமத்தை எந்நாளும் மறவாதவன். தன்னுடைய அடியார்க்கு ஆபத்து நேர்ந்தால், அது வந்த வழி தெரியாமல் நீக்கிவிடும் இயல்புடையவன் எப்பெருமான்.

**“நடுஒக்கும் தனி நாயகன் நாமம்**

**விடுஈற்கின்றிலன் ஆகலின், வேலை”**

**(கம்ப.யுத்த.231)**

என்ற அடிகள் மூலம் நாராயணனைப் பிரகலாதன் தனிநாயகன் என்று கூறுகின்றான்.

பிரகலாதன் மீது மலை போன்ற கல்லைக் கட்டுமாறு தந்தை இரணியன் ஆணையிட்டான். அக்காட்சி திருமால் சிறுவயதில் ஆலமரத்தின் இலையின் மீது காட்சியளித்து போல் இருந்தது. இதனையே,

**“சிலையில் திண் புனலில், சினை ஆதலின்**

**இலையில் பிள்ளை எனப் பொலிகின்றான்.”**

**(கம்ப.யுத்த-232)**

என்ற அடிகள் மூலம் அறியமுடிகிறது.

பிரகலாதன் கருவில் இருக்கும் பொழுதே வேதங்களை நன்கு கற்றவன். அவன் மீது கட்டியிருந்த கலை ஓயாது அலைகள் வீசும் கடலிலும் மூழ்கவில்லை. அவன் நாராயணன் மீது கொண்டிருந்த பக்தியின் வெளிப்பாடாகும் இதனை

**“மோதுற்று ஆர் திரை வேலையில் மூழ்கான்**

**மீதுற்று ஆர் சிலை மீது கிடந்தான்**

**ஆதிப் பண்ணவன் ஆயிர நாமம்**

**ஞதுற்றான் - மறை ஞல்லை உணர்ந்தான்.”**

**(கம்ப.யுத்த-233)**

என்ற பாடல் புலப்படுத்துகின்றது.

நாராயணனைத் தன் மதிநுட்பத்தால் யாராலும் அறிந்து கொள்ள முடியாது. ஆழ்ந்த பக்தியினால் மட்டுமே அறிந்து கொள்ளமுடியும்.

உலகத்தில் ஒப்பற்ற முதன்மையான நாயகன் திருமால். அவரே உண்மையான பரம்பொருளாக விளங்குகின்றான். பிரம்மா, சிவன் ஆகியவர்களும் திருமாலினுள் அடங்கியவர்கள் என்கின்றான் பிரகலாதன்.நாராயணன் உயிர்

உள்ளவை, உயிறற்றவைகளிலும் நிறைந்துள்ளான். பொருட்கள் மாறுபட்டிருந்தாலும் அவனே அனைததிலும் நீக்கமற நிறைந்துள்ளவன். இதனை,

**“அம்போருகனார், அரனார், அறியார்**

**(கம்ப.யுத்த-241)**

**“நன்னின் பிறிதாய், நிலையின் திரியா,**

**தன்னின் பிறிது ஆயின தாம் எனினும்”**

**(கம்ப.யுத்த-242)**

என்ற அடிகள் மூலம் விளக்குகின்றார்.

பிரகலாதன் நாராயணனே நீ எனக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து என்னைப் படைத்தாய். பிறவி என்கின்ற நோயினைக் கொடுத்து அதற்குப் பரிகாரமும் தந்தவன் நீயே எனத் திருமாலை வணங்குகிறான்.

திருமாலின் நாமத்தினை மனத்தில் தியானித்தான். அரி தான் திருமால், உலகங்களிலில் உள்ள உயிர்களை எல்லாம் படைத்து அதனுள் உறைந்து காணப்படுகின்றான். இதனையே,

**“தாய் தந்தை எனும் தகை வந்தனைதான்,**

**நீ தந்தனை: நீ உறு நெஞ்சினென் நான்”**

**(கம்ப.யுத்த-243)**

**“உலகு தந்தானும், பல்வேறு உயிர்கள் தந்தானும், உள் உற்று**

**உலைவு இலா உயிர்கள்தோறும், அங்கு அங்கே**

**உறைகின்றாறும்”**

**(கம்ப.யுத்த-250)**

என்ற அடிகள் மூலம் நாராயணனின் பெருமையினைப் பற்றி இயம்புகின்றான்.

**"ஆழ்வார்களும் ஆங்காங்கு நாராயணன் என்ற சொல்லுக்கே முக்கியத்துவம் கொடுத்து எட்டெழுத்து மந்திரத்தையும் குறிப்பிடுகிறார்கள்"**[1] (வரலாற்றில் பிறந்த வைணவம்.ப.318)

**வீபீடணன்**

வீபீடணன் பற்றிய அறிமுகம் இயல் இரண்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பக்தி**

விபீடணன் அரக்கர்கள் குலத்தில் பிறந்தவன். ஆனாலும் தர்ம நீதிகளை அறிந்து, அரக்க குணம் கொள்ளாதவன். வீபீடணன் தர்ம மார்க்கத்திலிருந்து தவறாதவன். அவன் முழுமுதற்கடவுளான திருமாலாகிய இராமனிடத்தில் மாறாத அன்பு கொண்டிருந்தான். இதனை

**"அற நிலை வழாமையும், ஆதி மூர்த்திபால்**

**நிறைவரு நேயமும், நின்ற வாய்மையும்**

**மறையவர்க்கு அன்பும் என்று இனைய, மா மலர்**

**இறையவன் தர, நெடுந்தவத்தின் எய்தினான்"**

**(கம்ப.யுத்த.-352.**

என்பதிலும் ஆதிமூர்த்தியான திருமாலிடம் கொண்டுள்ள மேன்மை நிறைந்த பக்தியை,

**"ஆயவன், தருமமும், ஆதி மூர்த்தி பால்**

**மேயது ஓர் சிந்தையு, மெய்யு, வேதியர்"**

**(கம்ப.யுத்த-361)**

என்ற அடிகளிலும் குறிப்பிடுகின்றான்.

**இராம அவதாரம்**.

வீபீடணன் திருமாலே மானிடனான இராமனின் மூலம் அரக்கர்களை அழிப்பதற்காக வந்துள்ளான். என்பதை,

**"தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனித் தலைவன்**

**அன்ன மானுடன் ஆகி வந்து வதரித்து அமைந்தான்"**

**(கம்ப.யுத்த-123)**

எனும் பாடல் உணர்த்துகின்றது.

இராமனாகிய திருமால் ஒப்பற்ற தனித்தலைவன். தேவர்கள் செய்த வினையின் காரணமாக பலராலும் தூற்றப்படுவனாகிய இராவணனை கொல்வதற்காக இராமனாக அவதரித்துள்ளான்.

**மூவர்க்குத்தலைவர் ஆன மூர்த்தியார், அறத்தை முற்றும்"**

**(கம்ப.யுத்த-1368)**

மும்மூர்த்திகளின் முதல்வனான திருமாலாகிய இராமன் தர்மத்தை நிலைநாட்ட அவதாரம் எடுத்துள்ளான்.

**பாற்கடல்**

வீபீடணன் இராமனில் தெய்வமான திருமாலைக் காண்கிறான். இதனால் இராமனைத் தெய்வநாயகன் என்றும் குறிப்பிடுகிறார். இராமனைச் சுற்றிக் காணப்படும் தாமரை மலர்கள் நிரம்பிய கரிய கடல் போல் காட்சியளிப்பது பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமால் போல் காட்சியளிப்பதை,

**"பாற்கடல் சுற்ற, விற் கை வடவரை பாங்கு நிற்ப**

**கார்கடல் கமலம் பூத்தது எனப் பொலிவானைக் கண்டான்"**

**(கம்ப.யுத்த.438)**

எனும் பாடல் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

இராமன் வானரங்களின் நடுவில் இருப்பது, ஓயாது அலைகளையுடைய வெண்ணிறமான பாற்கடலின் நடுவே வீற்றிருப்பது போலக் காட்சியளிக்கிறான். என்பதை,

**"வெள்ளி வெண் கடலுள் மேல்நாள் விண்ணவர் தொழுது வேண்ட**

**பள்ளி தீர்ந்து இருந்தான் என்னப் பொலிதரு பண்பினானை"**

**(கம்ப.யுத்த.439)**

என்ற அடிகள் மூலம் இராமனைத் திருமாலாகக் காண்கிறான்.

**மார்பு**

இராமனின் திருமார்பைக் கண்ட வீடீடணன் அதை அலங்கரிக்கும் ஆரமும், தோள்களை அலங்கரிக்கும் வாகுவலயமும் இன்றிக் காணப்படுவது பாற்கடலைக் கடையக் கயிறாகப் பயன்படுத்தப்பட்ட வாசுகி என்கின்ற நாகம் கழற்று விடப்பட்டது போல் காணப்படுவதாக,

**"... ஆரம் தீர் மார்பினானை**

**சுடர் கடை மத்தின் பாம்பு சுழற்றியது என்னக் காசின்**

**சுடர் ஒளி வலயம் தீர்ந்த சுந்தரத் தோளினானை"**

**(கம்ப.யுத்த-441)**

என்ற பாடலில் தனது மன உணர்வுகளை வெளிப்படுத்துகிறார்.

**நிறம்**

வீபீடணன் இராமனைக் கருநிறமாகக் காண்கிறான். இதனால் திருமாலும் கரியநிறம் படைத்தவராக இருக்க வேண்டும் என்று எண்ணினான். திருமாலை இராமனாகப் பாராமல், இராமனைத் திருமாலாகக் காண்கிறார். மேலும் அவனைத் தர்மமூர்த்தியாகவும், கருணா மூர்த்தியாகவும் காண்கிறான். இதனையே,

**“கார்முகில் கமலம் பூத்தது! அன்று இவன் கண்ணன் கொல்லாம்;**

**ஆர் அருள் சுரக்கும் நீதி அற நிறம் கரிதோ? என்றான்**

**(கம்ப.யுத்த.443)**

என்ற பாடலடிகள் உணர்த்தும்

**திருவடி**.

வீபீடணன் இராமனைத் தாமரை மலரில் இருக்கும் பிரம்மாவின் தந்தையாகக் கருதி, அவன் திருவடிகளை வணங்கியதை எண்ணி பெருமை அடைகின்றான். இதனை,

**“கமலத்து அண்ணல் தாதையார் சரணம் தாழ,”**

**(கம்ப.யுத்த.444)**

என்ற அடி குறிப்பிடுகின்றது.

**சிறப்பு**

தன் உடலை வருத்தித் தவம் செய்யும் தவமுனிவர்களாலும் அடைய முடியாதப் பிறப்பு என்கின்ற நோயை நீக்கி வீடுபேறு அளிப்பவன் இராமனாகிய திருமால். அவனைச் சரணடைந்ததை எண்ணிப் பரவசம் அடைகின்றான் வீபீடணன். இதனை,

**“பெருந் தவம் இயற்றினோர்க்கும் பேர்வு அரும் பிறவி நோய்க்கு**

**மருந்து என நின்றான் தானெ வடிக் கணை தொடத்துக் கொல்வான்"**

**(கம்ப.யுத்த.445)**

எனும் பாடலில் அறியலாம்.

இராமனை ஆழியான் என்று அழைப்பதன் மூலம் சக்கராயுதத்தை உடையவனான, திருமாலாகக் காண்கிறான். இராமனாகிய திருமால் தனக்கு இலங்கை அரசு அளித்து,ஈரேழ் உலகங்களும் நிலைத்து நிற்கும் நாள் வரை இலங்கையை ஆழ்வாயாக என்ற இராமனின் சொல்லைத் திருமாலின் சொல்லாகக் கருதியதைக் கீழிகண்ட பாடல் சுட்டுகின்றது.

**"ஆழியான் அவனை நோக்கி, அருள் சுரந்து, உவகை கூர**

**ஏழினோடு ஏழாய் நின்றஉலகும் என்பெயரும் எந்நாள்"**

**(கம்ப.யுத்த-448)**

இராமனின் பாதுகைகளைப் பரதனுக்கு அடுத்தபடியாக மகுடமாகத் தன் தலையில் சூட்டிக் கொண்டு அரசாட்சி செய்தான் வீபீடணன். இது இராமனாகிய திருமாலின் மீது கொண்டிருந்த பக்தி பரவசத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இராமனின் பாதுகைகளைத் தனது தலையில் சூட்டியதை எண்ணி தேவர்கள் வாழ்த்தினார்கள்.

வீபீடணன் இந்திரனுக்குரிய செல்வததைப்பெற்றதால் இலங்கை அரசனாகச் சூட்டிக்கொள்ளவில்லை. இராமனாகிய திருமாலின் பாதுகைகளைச் சூட்டியதலே பெற்றான் என்பதை

**"அந்தம் இல் குணதலினானை அடியிணை - முடியினோடும்**

**சந்தன விமானம் ஏற்றி வானரத் தலைவா் தாங்க"**

**(கம்ப.யுத்த-458)**

எனும் இப்பாடல் உணர்த்துகின்றது.

யாகங்களும், தவங்களும் செய்பவர்கள் கூட காண முடியாத திருமாலை வீபீடணன் கண்களால் தரிசித்து, திருவடிகளை அடைந்து, தன் தலையில் சூட்டிக் கொள்கிறான். இப்பாக்கியம் தன்னைத் தவிர யார்க்குக் கிடைக்கவில்லை என பெருமிதம் கொள்கின்றான்.

இராமனாகிய திருமாலிடம் சேர்ந்தால், அவன் அருள் புரிவான். முற்பிறவிப் பாவங்களைப் போக்கி, இன்பதுன்பங்கள் மாறி மாறி வரும் மண்ணுலக வாழ்க்கைக்கு மோட்சம் அளிப்பவன்,

திருமகள் வாசம் செய்யும் திருமாலாகிய இராமன் சகலத்தை அளிப்பான் என்கிறான். வேதநாயகனான திருமாலான இராமனே கருணை கொண்டுள்ளதை

**"திரு மறு மார்பன் நல்க, அனந்தரும் தீர்ந்து, செல்வப்**

**பெருமையும் எய்தி, வாழ்தி; ஈறு இலா நாளும் பெற்றாய்"**

**(கம்ப.யுத்த-1367)**

என இயம்புகின்றான்.

**வாலி**

**திருநாமம்**

'இராம' என்ற நாமம் ஒன்று ஆயிரம் நாமங்களுக்குச் சமம். வாலி மார்பில் பட்ட அம்பைப் பிடுங்கிய பொழுது, அதில் 'இராம' என்ற நாமம் பொறிக்கப்பட்டிருந்தை. இதனையே,

**"... இராமன் என்னும்**

**செம்மை சேர் நாமம் தன்னை, கண்களின் தெரியக் கண்டான்"**

**(கம்ப.கிட்கிந்தா-316)**

திருமால் தன்னைத் துதிப்பவர்களுக்குச் சிறந்த வரம் அளிக்கிறார் என்றால், திருமாலாகிய இராமனது ஒப்பற்ற நாமத்தால் மட்டுமே என்கிறான் வாலி. இதனையே,

**"பாலக் சூலியார் வாழ்த்து நர்க் குயர்வரம்**

**ஓவலற் றுதவனின் ஒருதனிப் பெரியம்பு"**

**(கம்ப.கிட்கிந்தா.161)**

என்பதில் அறியலாம். "இராம" நாமத்தைக் கூறினால் திருமாலின் ஆயிர நாமங்களை கூறியதற்குச் சமம். அவனுடைய நாமத்தைக் மனத்தால் நினைத்து நாவால் உச்சரிக்கும் பொழுது முக்தியைப் பெறலாம் என்கின்றான்.

**இராமஅவதாரம்**

வாலி இராமனைத் திருமாலாகக் கண்டு துதிக்கிறான். கூரிய அம்பினால் எய்து, நாய் போல் இழிவாக்கப்பட்டவனான தனக்கு உயிர் பிரியும் சமயத்தில் ஞானத்தை அருளியதை

**"மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!**

**பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ**

**ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்**

**ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்"**

**(கம்ப.கிட்கிந்தா.167)**

என்கிறார்.

இதன் மூலம் முத்தொழில்களை ஏற்று நடத்தும் முதல்வனாகவும், எம்பெருமானாகிய திருமாலே பாவமாகவும், தருமமாகவும், பகையாகவும், உறவாகவும் விளங்குவதாகக் கூறுகின்றார்.

வாலி இராமனாகிய, திருமாலைத் தர்மமே உருவானவன். இராமன் கரத்தால் தாக்கப்பட்டு உயிர் இழக்கும் வாய்ப்பு, தனக்கு மோட்சம் அளிப்பதை,

**"பண்டொடு இன்று அளவுமே என் பெரும் பழவினைத்**

**தண்டமே அடியனேற்கு உறு பதம் தருவதே!"**

**(கம்ப.கிட்கிந்தா-370)**

என்று கூறுகின்றான்.

வஞ்சனைகள், பாவங்கள் செய்பவர்கள் இராமானகிய திருமாலின் அம்பினால் கொல்லப்பட்டு, உயர்ந்த வீடுபேறு அடையலாம். அவனுடைய திருவடிகளைப் பக்தியுடன் வணங்கித் தொண்டு செய்தால் முக்தி அடையலாம். பாவச் செயல்கள் செய்து, இராமனால் கொல்லப்பட்டு வீடுபேறு அடைந்தற்கு எடுத்துக்காட்டாக விளங்குபவர்கள் விராடன், கபந்தன் போன்றவர்கள் ஆவார்கள்.

முக்தியைத் தருபவன் திருமால் ஒருவனே என்பதை,

**"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை**

**ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்"**[2] **(பரிபாடல்-14)**

இப்பாடலில் இளம் பெரும் வழுதியார் அவனருள் இன்றேல் வீட்டுலகை அடைதல் இயலாது என்கின்றார்.

ஒரு வில்லைக் கையிற்கொண்டு, மனித வடிவம் கொண்டு, தனது பாதங்கள் பூமியில் படுமாறு, கண்களில் படும் விதகமாக இராமனாகிய திருமால் வந்துள்ளான்.

**சிறப்பு**

திருமாலாகிய இராமன் வானத்தைக் காட்டிலும் உயர்ந்த சிறப்பை உடையவன். வானத்துடன் ஒப்ப உயர்ந்து நிற்கும் இராமனாகிய திருமாலின்

பெருமையானது அறிவுக்கும், கண்களுக்கும், சொற்களுக்கும் எட்டாத பரம்பொருள் என்பதை,

**"மற்று இனி உதவி உண்டோ வானிலும் உயர்ந்த மானக்**

**கொற்றவ! - நின்னை, என்னைக் கொல்லிய கொணர்ந்து**

**தொல்லைக்" (கம்ப.கிட்கிந்தா-371)**

இராமனாகிய திருமாலே உலகத்திலுள்ள உயர்திணை, அ∴றிணைப் பொருள்களாகவும், மலர்களில் உண்டாகும் நறுமணத்தைப் போலவும், எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவன். யாராலும் அறிந்து கொள்ள முடியாதவன் என்கின்றான்

இராமனாகிய திருமாலின் மனம் சஞ்சலம் அடையாமல் மூன்று உலகங்களிலும் சிறப்பாகும் அளவிற்கு, என்றும் குரங்கு இனத்திற்கு இயல்பாக அமைந்திருக்கும் அறியாமை நீக்கி வீடுபேறு என்னும் 'மோட்சத்தை அடைந்தேன்' என்பதை,

**"மத இயல் குரங்குச் செய்கை மயர்வொடு மாற்றி வள்ளல்**

**உதவியை உன்னி ஆவி உற்றிடத்து உதவு கிற்றி"**

**(கம்ப.கிட்கிந்தா-381)**

என்கின்றான். இவ்வுலகில் பிறந்தவர்கள் அனைவருக்கும் பிறப்பு, இறப்பு உண்டு. முற்பிறவியில் செய்த புண்ணியத்தின் பயனாக இராமனாகிய திருமாலின் வீடுபேறு கிட்டியது. அவன் அம்பு பட்டதால் வாழ்வு அர்த்தமுள்ளதாகியதை

**"யான்தவம் உடைமையால், இவ்இறுதி வந்துஇசைந்த; யார்க்கும்**

**சான்ற என நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்"**

**(கம்ப.கிட்கிந்த-147)**

என்று உணர்த்துகின்றான் வாலி.

**திருமகள்**

திருமகளைத் தன்மார்பில் உடையவனானத் திருமாலாகிய இராமனின் சொற்படி கேட்டு, அதனைத் தன் தாரக மந்திரமாகக் கொள்பவர்கள் இம்மையிலும் மறுமையிலும் கொண்டு மேன்மை அடைவார்கள்.

**திருவடி**

இராமனாகிய திருமாலுடைய திருவடிகளை இமைப்பொழுதும் நீங்காமல் இருப்பதை

**“மரை மலர்ப் பாதம் நீங்கா வாழுகி: மன்னர் என்பார்”**

**(கம்ப.கிட்கிந்தா.-381)**

என்கிறார்.

இராமனுடைய செந்தாமரை போன்ற திருவடிகளைத் தலையிற் கொண்டு வாழ்ந்து வந்தால் இராமனாகிய திருமாலே நன்மைகள் பல செய்வார் என்பதை

**“... வில்லும் தாங்கி**

**கால் தரை தோய நின்று கட்புலக்கு உற்றது அம்மா**

**மால தரும் பிறவி நோய்க்கு மருந்து என வணங்குமைந்தா”**

**(கம்ப-கிட்கிந்தா.-393)**

**“மன்னுயிர்க்கு உறுதி செய்வான் மலர்அடிசுமந்து வாழ்க”**

**(கம்ப.கிட்கிந்த-394)**

என்ற அடிகளின் வாயிலாகத் திருமாலின் பெருமைகளைப் பற்றி இயம்புகின்றான் வாலி. இதனைத் திருவள்ளுவர்,

**“குறிப்பு அறிந்து காலம் கருதி வெறுப்புஇல**

**வேண்டுப வேட்பச் சொலல்”[3]**

என்ற குறள் வழி விளக்குகிறார்.

**இரணியன்**

இரணியன் காசிபர்-திதி வயிற்றில் பிறந்தவன். அவன் பொன் நிறமுடையவனாக விளங்கியதால் இப்பெயர் பெற்றான். உடலை வருத்தித் தவங்கள் பல மேற்கொண்டு பிரம்மனிடம் வரங்கள் பல பெற்றான். தன் தவ வலிமையால் மூவுலகத்தையும் ஆணவத்துடன் ஆண்டு வந்தான். பெரும் பரந்த கடல் நீரில் நீராடுவான்.

நாகலோகத்தில் நாகமகளுடன் உணவருந்துவான். இந்திரலோகம் சென்று பகற்பொழுதைக் கழிப்பான். இரவில் பிரம்மலோகம் செல்வான்.

வேள்வியின் போது திருமாலின் பெயரை நீக்கித் தன் பெயரையே உச்சரிக்கச் செய்வான். எந்த உயிராலும் சாகாத வரம் பெற்றிருந்தான். இதனால் தன்னைக் கொல்லவும், வெல்லவும், யாருமில்லை என்ற செருக்குக் கொண்டிருந்தான்.

இரணியன் தம்பி இரண்யாட்சம், அவன் பூமியை ஒளித்து வைத்தபோது, திருமால் வாமனனாக அவதாரம் எடுத்து உலகைக் காக்க இரணிய அசுரனைக் கொன்றான். திருமால் தன் தம்பியைக் கொன்ற காரணத்தால் திருமாலிடம் இரணியன் பகைமை கொண்டான்.

தான் பெற்ற வரத்தினால் தேவர்களையும் முனிவர்களையும் துன்புறுத்தித் தன்னையே அவர்கள் தெய்வமாக வணங்கும்படிச் செய்தான். ஓம் இரணியாய நம! என மந்திரம் கூற வைத்தான்.

இரணியன் தன் மகன் பிரகலாதன் திருமாலின் மீது கொண்டிருந்த பற்றின் காரணமாக, அவனைக் கொல்வதற்காக அரக்கர்களை ஏவினான். அவர்கள் எய்த ஆயுதங்கள் பிரகலாதன் உடலில்பட்டுப் பொடியாகிவிட்டன. பெருங்குழியில்

நெருப்பிட்டு அதனுள் தள்ளினர். அவன் திருமாலின் மீது கொண்ட பக்தி அவனைக் காப்பாற்றியது.

**திருநாமம்**

பிரகலாதன் எம்பெருமானாகிய திருமாலின் திருவடியை வணங்கி ‘அரி’ என்கின்ற நாமத்தைக் கூறியதால் அக்கினிபோல் எழுந்த தீ அவனிடம் குளிர்ந்ததை

**“அழுது நின்றவர் அயர்வுற ஐயனைப் பெய்தனர்: “அரி” என்று**

**தொழுது நின்றனன் நாயகன் தாள் இணை குளிர்ந்தது சுடுதீயே”**

**(கம்ப.யுத்த.-215)**

**“ஆலம் அன்ன நம் அரக்கர்கள் வயங்கு எரிமடுதலின் அனுமன் தன்**

**கூலம் ஆம் என என்புறக் குளிர்ந்தது, அக்குரு மணித் திருமேனி”**

**(கம்ப.யுத்த.-216)**

எனும் பாடல் வழி அறியலாம்

**அவதாரம்**

இரணியன் பிரகலாதனிடம் இவ்வுலகம் முழுவதும் நிறைந்திருக்கும் திருமாலை இத்தூணிடத்தில் காணும்படி காட்டவேண்டும். அவ்வாறு தவறினால் உன்னைக் கொன்று உன் இரத்தத்தைப் பருகி உன் உடலை நானே தின்றுவிடுவேன் என்றான்.

இரணியன் பிரகலாதனின் சொற்களைக் கேட்டவுடன் கோபம் கொண்டு, இடி விழுந்தது போல் தன் கையால் தூணை ஓங்கி அறைந்தான். உடனே அதிலிருந்து சிங்கம் கிழித்துக் கொண்டு வந்ததை,

**"... ஓர் தூணின், வென்றி**

**இசை திறந்து உயர்ந்த கையால் எற்றினான் எற்றலோடும்**

**திசை திறந்து அண்டம் கீறச் சிரித்தது அச்செங்கண் சீயம்"**

**(கம்ப.யுத்த-257)**

**".. நான்முகனும் காணாச் சேயவன் சிரித்தலோடும்**

**ஆடினான் அழுதான் பாடி அரற்றினான் சிரத்தில செங்கை"**

**(கம்ப.யுத்த-258)**

என்னும் அடிகளில் விளக்குகின்றது.

இதனையே பரிபாடல்,

**"இன்னல் இன்னரொடு இடிமுரசு இயம்ப**

**இவடிபடா ஒடிதூண் தடியோடு,**

**தடிதடி பலபட வகிர்வாய்ந்த உதிரினை"4 (பரி.4:10-12)**

என்ற வரிகள் விளக்குகின்றது.

இரணியன் வானிலிருந்து வெளிப்பட்ட திருமால் தனக்குப் பயந்து இத்தூணில் ஒளிந்து கொண்டாதாகவும், வலிமை மிக்கவன் என்றால் தன்னுடன் போர் புரிய வருமாறு அழைத்தான். நரசிங்க மூர்த்தி இரணியனையும், பிரகலாதனையும் தவிர அரக்கர் அனைவரையும் அழித்தான்.

இரணியன் நரசிங்க மூர்த்தியுடன் போரிட வச்சிராயுதத்தை வாள் உறையிலிருந்து எடுத்துத் தனது வலது கையிலும், கேடயத்தை இடது கையிலும் வைத்துக்கொண்டு மிகுந்த கோபத்துடன் காணப்பட்டதை,

**“வயிர வாள் உறையின் வாங்கி வானகம் மறைக்கும் வட்டச்**

**செயிர் அறு கிடுகும் பற்றி வானவர் உள்ளம் தீய”**

**(கம்ப.யுத்த.274)**

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இரணியன் பிரகலாதனிடம் சிங்கப் பெருமாளின் கைகளையும், கால்களையும் நீக்கும், என்னுடைய வாளைத் தவிர மற்ற யாரையும் வணங்க மாட்டேன் என்று பயம் நீங்க வெளிப்படையாகக் கூறியதை

**“கேள் இது நீயும் காண கிளர்ந்த கேள் அரியின் கேழ் இல்**

**தோளொடு தாளும் நீக்கி, நின்னையும் துணிந்து பின் என்”**

**(கம்ப.யுத்த.-276)**

என்றும்,

இரணியன் சிரித்துக் கொண்டு வானில் புகை தோன்றப் பெருந்தீயானது பொங்கி எழுவது போல் கோபம் கொண்டு நரசிம்மனை எதிர்க்க விளைந்தான். வலிமை மிக்க திருமாலாகிய நரசிங்கமூர்த்தி இரணியனைச் சுற்றி வளைத்துக் கொண்டான்.

இருவரும் போரிட்டுக் கட்டிபிடித்துக் கொண்டனர். அரக்கனான இரணியன் மேருமலையைப் போலவும் அண்ணலான நரசிம்ம பிரான் மற்ற மலைகளைப் போலவும் காட்சயளித்தார் இதனை

**“தொகை செயற்கு அரிய தேகுளால் சுற்றிச் சூழ்ந்தான்**

**மிகை செய்வார் வினைகட்கு எல்லாம் மேற்செயும் வினையம்**

**வல்லான்.”**

**(கம்ப.யுத்த.-277)**

**“வெருவரும் தோற்றத்து அஞ்சா வெஞ்சின அவுணன்மேரு**

**அருவரை ஒத்தான் அண்செல் அல்லவை எல்லாம் ஒத்தான்”**

**(கம்ப.யுத்த.-278)**

என்ற அடிகள் இரணியன் நரசிம்ம போரின் மூலம் திருமாலின் அவதாரம் பற்றி இயம்புகின்றான்.

**கவந்தன்**

யானை முதல் எறும்புகள் வரை ஒரு சேர உண்பவன் கவந்தன். இராமனின் கைப்பட்டவுடன் கந்தர்வனாக மாறி இராமனைப் புகழ்கின்றான். தனு பெயருடையவன். கவந்தன் இராமனைத் தந்தைக்கும் தந்தையானவர் எனப் புகழ்கின்றான். சீதையைத் தேடுவதற்கான வழியையும் கூறுகின்றான்.

கபந்தன் எனும் சொல்லின் திரிபே கவந்தன் என்பது. இவன் ஓர் அரக்கன். கபந்தம் - தலையற்ற உடல் வயிற்றில் வாய் முதலானவை உள்ளவன் கவந்தன்.

கவந்தன் முற்பிறவியில் விசுவாவசு என்னும் பெயருடைய கந்தருவனாயிருந்தான். தனு என்னும் கந்தர்வனின் மகன். அழகனான இவன் அறிவின்மையால் அரக்க உருக் கொண்டு வனம் வாழ் முனிவருக்கு ஊறு விளைவித்து வந்தான்.

தூலசிரசு என்னும் முனிவரை இவன் துன்புறுத்தும் போது, அவர் இவனை அரக்கனாகச் சபித்தார். அரக்கனாக மாறிய அவன் தன் சாபம் நீங்கக் கோரி மன்னிப்புக் கேட்டான். அதற்கு முனிவர் இராமனால் உன் சாபம் நீங்கப் பெறுவாய் என்றார்.

இதற்கிடையில் அரக்கர் உருப்பெற்ற கவந்தன் பிரம்மனை நோக்கி நீண்ட காலம் தவம் புரிந்தான். நீண்ட ஆயுள் பெற்றான். இந்திரனுடன் போரிட்டான்.

கவந்தன் தனது சாபம் நீங்கி இயலபான பழைய நிலையை அடைந்து வானத்தில் நின்றான். அவன் அரக்கனாக வாழ்ந்த சமயம் இராமனைத் திருமாலாகக் காணவில்லை. தேவனாகப் பழைய நிலையை அடைந்த பிறகுதான் இராமனைத் திருமாலாக வணங்கியதை

**“விண்ணில் நின்றவன், விரிஞ்சனே முதலினர் யார்க்கும்**

**கண்ணில் நின்றவன் இவன், எனக் கருத்துற உணர்ந்தான்”**

**(யுத்த.ஆரணி.1178)**

திருமாலாகிய இராமனை வணங்குவதற்குப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். நல்வினைகள் புண்ணிய பலனை அளிக்கும் என்கின்றான் கவந்தன்.

கவந்தன் தன்னைச் சாபத்திலிருந்து நீக்கி இராமனைத் திருமாலாகத் துதிப்பதை பாடல்,

**“மூன்று கவடு ஆய் முளைத்து எழுந்த மூலமோ?**

**தோன்றி, அரு வினையேன் சாபத் துயர் துடைத்தாய்.”**

**(யுத்த.ஆரணி-1179)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது.

இராமனைத் திருமாலாகக் கண்டு காத்தல், அழித்தல், படைத்தல் ஆகிய முத்தொழிலையும் செய்கிறார் என்கினறான் கவந்தன். இதன் மூலம் மும்மூர்த்திகளாகத் தோன்றி மூன்று தொழில்களைச் செய்யும் முதல்வர் திருமாலே என்கின்றான் கவந்தன்.

திருமால் மும்மூர்த்திகளின் முதல்வன் என்பதை நம்மாழ்வார் பாசுரத்தில்,

**“மூவர் ஆகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன் தன்னை”**[5]

என்ற அடிகள் மூலம் குறிப்பிட்டுள்ளார். பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர்கள் மூவரில் முதல்வராக விளங்குகிறான் எம்பெருமான் என்பது பொருள்.

கவந்தன் நாராயணனைப் பிரம்மவாகக் காண்கிறான். ஆதிபிரம்மன் என்கின்றான். நாராயணனே பிரம்மாகவும், சிவனாகவும், திருமாலாகவும் முத்தொழில்களையும் ஏற்று நடத்துகிறார் என்பதை

**“ஆதிப் பிரமனும் நீ? ஆதிப் பிரமனும் நீ**

**ஆதி எனும் பொருளுக்கு அப்பால் உண்டாயினு நீ!”**

**(கம்ப.ஆரணி-1182)**

என்றும்,

இராமனைப் பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனே என்று கூறுகின்றார். இதனையே,

**“உண்பாய் நீ: ஊட்டுவாய் நீ: இரண்டும் ஒக்கின்ற**

**பண்பு ஆர் அறிவார்? பகராய் பரமேட்டி”**

**( யுத்த.ஆரணி.1184)**

என்ற இப்பாடலின் மூலம் தெளிவுபடுத்துகிறார்.

**சங்கு**

கவந்தன் மூலமாக இராமனை தேவர்களிலும் சிறந்தவன். எம்பெருமான் படைக்கும் போது பல கோடி அண்டங்களைத் தனது சங்கால் உண்டாக்குகிறார். அவர் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி வைத்துக் காக்கின்றார் என்கிறார்.

இராமாயணத்தை வேதம் என்று அழைப்பர். எம்பெருமானாகிய இராமனை வேத முதல்வன் எனக் கூறுவது உண்டு. இராமஅவதாரமே வேதத்தின் கூற்று என்கின்றனர். அறியாமையால் கொண்ட என் பகையை ஒழித்தருளியவனே. நாய் போல் மிக இழிந்தவனான நான், எம்பெருமான் கருணையால் நல்தவம் செய்தேன் எனக் கூறுகின்றான்.

கவந்தன் தன்னை நாய்க்கு ஒத்தவனாக இழிந்தவனாகக் தாழ்த்திக் கொள்கிறான். நாய் பார்ப்பதற்கு இழிவானதாக இருக்கலாம். ஆனால் அது நன்றியுள்ளது. அதுபோல கவந்தனும் நன்றியுணர்வை வெளிப்படுத்துகிறான்.

அனுமன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் முன்னரே கூறப்பட்டுள்ளது.

அனுமன், ஈரேழ் உலகத்தில் உள்ளவர்கள் தங்கள் மனத்திலும், செயலிலும், சொல்லிலும், கண்ணிலும் உள்ளவர். ஸ்ரீராமனாகிய எம்பெருமானே.. அவர் தம்மை நாடி அடைக்கலம் அடைந்தவர்களுக்கு அமிர்தம் போன்று விளங்குபவன் இதனை,

**“மண் உளார், விண் உளார், மாறு உளார், வேறு உளார்**

**என் உளார், இயல் உளார், இசை உளார், திசை உளார்”**

**(கம்ப.கிட்கிந்தா.84)**

என்ற அடிகள் மூலம் இராம இலக்குமணர்களைத் திருமாலாக எண்ணி இயம்புகிறான்.

அனுமன் இராமனைத சிரிமத் நாராயணனாகக் காண்கின்றான். ஊழ்வினை என்கின்ற சாபத்திலிருந்து நீக்கி வீடுபேறு என்னும் முக்தியை அளிப்பவன் என்பதை

**“சங்க சக்கரக்குரி உள, தடக் கையில், தாளில்:**

**எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை”**

**(கம்ப.கிட்கிந்தா.160)**

என்னும் பாடல் விளக்குகின்றது. விபீடணன் இராமனைத் திருமாலாகக் காண்கிறான் இராமனாகிய திருமால் மும்மூர்த்திகளின் சூலம், சங்கு, சக்கரம் ஆகியவற்றைக் கையில் கொள்ளாமல், ஆலிலை, தாமரை, கைலாய மலை ஆகியவற்றை இடமாகக் கொள்ளாமல், அவைகளைளெல்லாம் விட்ட அயோத்தி மாநகரில் இராமனாக அவதரித்தான்..

சங்கு, சக்கரப்படையைப் பற்றி,

**“பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்து**

**இருவேறு மண்டிலத்து இலக்கம் போல**

**நேமியும் வளையும் ஏந்திய கை”[6] (பரிபாடல்:13)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

**சிறப்பு**

கொடிய கோபத்தையுடைய எமனது ஆயுட் காலத்தைக் காலினால் உதைத்து அழித்த பரமசிவனின் வில்லை முறிக்கின்ற சக்தி, இராமனாகிய திருமால் அன்றி வேறுயாருக்கும் கிடையாது என்பதை

**“செறுக்கும் வன் திறல் திரிபுரம் தீ எழச் சினவிக்**

**கறுக்கும் வெஞ்சினக் காலன் தன் காலமும் காலால்”**

**(கம்ப.கிட்கிந்தா-161)**

என்ற அடிகள் மூலம் சிவபெருமானின் வில்லை முறித்தவன் இராமன். சிவபெருமானுக்கு மேம்பட்டவன் திருமாலே எனப் புகழ்கின்றான் அனுமன்.

உலகங்களையெல்லாம் படைத்தவனான எம்பெருமானாகிய திருமாலுக்கு அடிமைத் தொழில் செய்க. அதுவே சிறந்த தவம். இதனால் உனக்கு மட்டுமல்லாமல் உன்னைப் பெற்ற எனக்கும் மேன்மை அளிக்கும் என அனுமனிடம் அவன் தந்தை வாயுபகவான் கேட்டுக்கொண்டான்.

**இராமஅவதாரம்**

மும்மூர்த்திகளின் முதல்வனான எம்பெருமானாகிய திருமால் இராமனாக அவதாரம் எடுத்துள்ளான் என்பதை,

**“எனையவர் எனையவர் யாவர் யாவையும்**

**நினைவு அரும் இருவினை முடிக்க நின்றுளோன்.”**

**(கம்ப.யுத்த.-1121)**

என்ற அடிகள் மூலம் விளக்குகின்றார்.

பூமியின் எல்லை அனைத்தையும் ஒரே குடையின் கீழ் ஆட்சி செய்யும், பேரரசனாகிய தசரதனின் குமாரன் என்று புகழ்கிறான். தேவர்களைப் பாதுக்காப்பதற்காக மனிதனாகத் திருமால் அவதரித்துள்ளார் என்பதையும் குறிப்பிட்டுள்ளார்.

இராமனாகிய திருமால் மும்மூர்த்திகளின் சூலம், சங்கு, சக்கரம் ஆகியவற்றைக் கையில் கொள்ளாமல், ஆலிலை, தாமரை, கைலாய மலை ஆகியவற்றை இடமாகக் கொள்ளாமல், அவைகளையெல்லாம் விட்டு அயோத்தி மாநகரில் இராமனாக அவதரித்தான் என்பதை,

**“... எல்லைப்**

**பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன் போலாம்”**

**(கம்ப.சுந்தர-1123)**

**“... ஈண்டுப்**

**பிறந்தனன்-தன்பொன்-பாததம் ஏத்துவார்-பிறப்பு அறுப்பான்”**

**(கம்ப.சுந்தர-1127)**

என்ற அடிகள் மூலம் திருமால் இராமனாக அவதாரம் எடுத்ததை விளக்குகின்றான்.

சிலப்பதிகாரத்திலும்,

**“தாதை ஏவலின் மாதுடன் போகிக்**

**காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்”[7]**

**“தம்பியொடுங் காடு போந்து**

**சோவரனும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த”[8]**

என்ற பாடலில் இராம அவதாரத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வில்**

அனுமன் இராவணனிடம் வலிமைமிக்க படை பலமும், வரத்தின் மகிமையும் உடைய உன்னை வீழ்த்தத் திருமாலாகிய ஒரு அம்பு போதும் என்கின்றான். திருமால் பிரம்மாவிடம் இராவணனையும், அவனது புத்திரர்களையும், உறவினர்களையும் அடியோடு கொல்வேன் என்று உறுதியளித்தான்.

இராமனாகிய திருமால் வில் ஏந்தி இருப்பது வேதமும் அறக்கடவுளும் பெருமை சொல்லும் சிறந்த பரம்பொருள் என்பதை

**“தீட்டிய பிறவும் எய்தித் திருந்திய வாழ்வும் எல்லாம்**

**நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்றான்.”**

**(கம்ப.யுத்த-1122)**

**“வேதமும் அறனும் சொல்லும்; மெய் அறமூர்த்தி, வில்லோன்”**

**(கம்ப.யுத்த-1124)**

என்று அனுமன் இயம்புகிறான்.

**சிறப்பு**

அனுமன் இராமனிடம் வாலியைக் கொன்றவனும், இனி இராவணனைக் கொல்லப் இருப்பவனும் மானிட உருவில் தோன்றிய திருமாலான இராமனே என்கிற ஞானம் திருமாலுக்கு உரிய காலத்தில் தோன்றிவிட்டது என்கின்றான்.

இராவணனைக் கொல்ல தேவர்கள், அசுரர்கள், மும்மூர்த்திகளாலும் இயலாது. இராமனாகிய திருமாலினால் மட்டுமே செய்யமுடியும் என்பதை,

**"எலுமிங்கிவள் கிளி இறுதி என்றுனை**

**மூலமென்று உணர்வரப் பிரிவு முற்றினான்"**

**(கம்ப.யுத்த-400)**

**"தேவர்க்கும், தானவர்க்கும், திசைமுகனே முதலாய தேவதேவர்**

**மூர்க்கும், முடிப்ப அரிய காரியத்தை முற்றுவிப்பான் மூண்டு**

**நன்றாய்" (கம்ப.யுத்த.409)**

என்ற அடிகள் மூலம் வீபீடணன் இராமனிடம் சரணடைந்ததைக் கூறுகின்றான்.

**மாலியவான்**

சுகேசனுக்கும் தெய்வதி என்பவளுக்கும் மகனாகப் பிறந்தான் மாலியவான். அவன் உடன்பிறந்தவர்கள் சுமாலி, மாலி என்னும் இருவர். மூவரும் பிரம்மனை வேண்டித் தவம் புரிந்து மூவலகையும் வெல்லும் ஆற்றலும், நீண்ட ஆயுளும், குறைவற்ற செல்வமும் வேண்டி வரம் பெற்றனர்.

மாலியவான் இராவணனின் மூதாதை, மூத்த மந்திரத் தலைவன், மால்யவான் வயதில் முதிர்ந்த அரக்கன், இராவணனின் பாட்டன்.

மாலியவானுக்கு ஏழு ஆண் பிள்ளைகளும், அனலை என்ற பெண்ணும் பிறந்தனர். மக்கள் எழுவரும் பல ஆண்டுகள் கழித்து அரக்கர் கூட்டம் நிறைந்த இலங்கையில் இராவணைன் படையில் இணைந்து உலகத்தையேத் துன்புறுத்தினர்

அரக்கர்களின் கொடுமைகளைத் தாங்க முடியாமல் தேவர்கள் திருமாலிடம் முறையிட்டனர். திருமால் அவர்களுக்கு உதவி செய்து தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் நடைபெற்ற போரில் அரக்கர்களை அழித்து

மாலியைக் கொன்றார். மால்யவானும், சுமாலியும் திருமாலினால் துரத்தப்பட்ட போது பாதாளத்திற்குள் புகுந்தனர். பின் இலங்கைக்கு வந்தார்கள்.

தொடக்கம் முதல் இறுதி வரை இராவணனுக்கு அறிவுரை கூறினான். இராவணிடம் சீதையை விடுவிக்குமாறு வாய்ப்பு நேரிடும் பொழுதெல்லாம் அறிவுரை கூறியவன் பாட்டன் மாலியவான். இராவணன் இராமனால் வதைக்கப்பட வேண்டும் என்பது நியதி. ஆதலால் இதனை யாராலும் மாற்றமுடியாது. மாலியவானின் முயற்சி வேலிக்கு இரைத்த நீர் போல் பயனற்று ஆனது.

**இராமஅவதாரம்**

தசரதன் சக்கரவர்த்தியின் புதல்வன். அவன் அரக்கர்களை அழிப்பதற்காகத் திருமால் இராமனாக அவதாரம் மேற்கொண்டதையும்

**"மாசு அற்ற சோதி வெள்ளத்து உச்சியின் வரம்பில் தோன்றும்**

**ஈசற்கு ஈசன் வந்தான் என்பதோர் வார்த்தை இட்டார்"**

**(கம்ப.யுத்த-763)**

என்னும் அடியில் குறிப்பிட்டுள்ளார்.

இராமனாகிய திருமால் ஈசற்கெல்லாம் ஈசனாகவும் குற்றமில்லாத ஜோதியாகவும், வானத்தின் அப்பாற் காணப்படும் பரம்பொருளாக விளங்குவதாகவும் இயம்புகின்றான்.

**திருமகள்**

திருமாலாகிய இராமன் மனைவி சீதை. தூய்மையானவள்பாற்கடலைக் கடைந்த போது அமிர்தத்துடன் தோன்றிய இலக்குமியாகச் சீதை காட்சியளிப்பதாகக் கூறுகின்றான். உலகில் வாழும் உயிரினங்களுக்கெல்லாம் தாயாகவும், அணுகுவதற்கு எளிமையாகவும் காட்சி தருபவள் திருமாலாகிய இராமனின் மனைவி சீதை. இலங்கையில் தீயநிமித்தங்கள் பல தோன்றி வருகின்றன. உலகத்து உயிர்களுக்கெல்லாம் எல்லாம் தாய் போன்ற அன்பு

உள்ளம் கொண்டவள் சீதை. அவள் இருக்கும் இலங்கை நகரைக் கண்டு தேவர்கள் அழித்தால் இலங்கையில் தெய்வமே வெளியேறிவிடும் என்பதை

**“ஏயின தூதன் எற்ற பற்றுவிட்டு இலங்கைத் தெய்வம்**

**போயினது என்றும் சொன்னார் புகுந்தது போரும் என்றார்”**

**(கம்ப.யுத்த-770)**

எனும் பகுதில் குறிப்பிட்டுள்ளார்

**ஆதிசேசன்**

இராமனின் தம்பியான இலக்குவன் திருமால் பாற்கடலில் பள்ளி கொள்ளும் ஆதிசேனாக விளங்குகின்றான். யாராலும் அறிய முடியாத பரம்பொருள். இராமன், இலக்குவனுடைய வில்கள் பிரம்மாவினால் அளவிடமுடியாத சக்தியால் படைக்கப்பட்டது என்கின்றான். வில்லுக்கு நாண் ஆதிசேன் போன்றது. அதன் அம்பு ஆராய்ந்து சேர்க்கப்பட்டுள்ளது. பகைவர்களுடைய உயிரை எளிதில் மாய்க்கும் காலசக்கரத்தின் தன்மையை ஒத்துக்காணப்படுவதாகக் மாலியவான கூறுவதை,

**“அன்னவர்க்கு இளவல் தன்னை ‘அருமறை பரம்’ என்று ஓதுமத்**

**நல் நிலை நின்று தீர்ந்து நவை இலா உயிர்கள் தோன்றும்”**

**(கம்ப.யுத்த-763)**

**“அவ்வவர்க்கும் அமைந்த வில்லும் குலவரை அவற்றின்ஆன்ற**

**வெவ் வெலி வேறு வாங்கி விரிஞ்சனே விதித்த மேல்நாள்”**

**(கம்ப.யுத்த.-764)**

எனும் இப்பாடல்கள் விளக்குகின்றன.

மால்யவான் தன் பேரனான இராவணனிடம் நம்முடைய அரக்கர் குலம் முன்னர் அழிந்தது. திருமாலால் தான். உன்மீது கொண்ட அன்பினால் மனம் நொந்து நான் கூறுகிறேன். சீதையை இராமனிடம் ஒப்படைத்தால் நமக்குத் தீமை ஏதும் நேரிடாது என்று அறிவுரை கூறுகின்றான்.

**பிரம்மன்**

தேவர் மூவருள் படைப்புத் தொழிலை மேற்கொள்பவர் பிரம்மன். நான்கு முகங்கள் கொண்டவர். இவரை விரிஞ்சன் கஞ்சமா, மலரோன், சரோகமுகன் தினசங்க முனி என்றும் அழைப்பர். பிரம்ம தேவன் இராமாயணக் காவியத்தின் தொடக்கத்தில் அறிமுகமானவர்.

இராவணன், கும்பகருணன், வீபீடணன் ஆகியோருக்குத் தவம் அளித்தார். தேவர்களும், முனிவர்களும் இராவணனின் கொடுமையைச் சிவனிடமும், பிரம்மனிடமும் சொல்ல, இருவரும் இராவணனுக்குத் தவம் அளித்த காரணத்தைத் திருமாலிடம் கூறினார்கள்.

இராவணனை அழிப்பதற்காகத் திருமால் இராமனாய்த் தோன்றினார். தேவர்கள் வானரமாகவும், பிரம்மமன் சாம்பவனாகவும் அவதரித்தார்கள். பிரம்மதேவன் தன்னை நோக்கித் தவம் புரிவோர்க்கு எளிதில் வரம் அளிப்பவன் என்ற புகழ்ச்சிக்கு உரியவர். இராவணன் முதல் பலரும் நான்முகனிடம் வரம் பெற்றுள்ளனர். பிரம்மா நரசிங்க மூர்த்தியாகிய திருமாலின் ஆணையால் உலகத்தில் உள்ள உயர்திணை, அ∴றிணைப் பொருட்களைப் படைத்தேன். எனக்கென்று முன்பின் எதுவும் கிடையாது என்கிறான்

**தொழில்**

பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்கள் பொன் என்று கூறுவது போல என்னை உண்டாக்கிப் பிரியாமல் உள்ளவன் என்பதை,

**"நின்னுள்ளே என்னை நிருமித்தாய்: நின் அருளால்**

**என்னுள்ளே எப்பொருளும் யாவரையும் யான் ஈன்றேன்."**

**(கம்ப.யுத்த.-290)**

என பிரம்மன் இயம்புகின்றான்.

பிரம்மன், இந்திரன், சிவன் ஆகியவர்கள் தேவர்களுடன் இராமன் முன் தோன்றுகின்றனர். பின்னர் நான்கு முகங்களையுடைய பிரம்மன் இராமனை வழிபட்டான்.

**சிறப்பு**

பிரம்மன் இராமனை இராம என்றும், நெடியோன் என்றும் வணங்குகின்றார். தொன்மையான குலமான சூரிய அரச வம்சத்தில் பிறந்த மனிதன் அல்ல. ஆதி தெய்வமாகிய நாராயணன் என்பதை உணரவேண்டும் கூறுகின்றார். இதனை

**“மன்னர் தொல்குலத்து அவரினத்தனைஒரு மனிதன்**

**என்ன உன்னலை உன்னை நீ: இராம கேள், இதனை”**

**(கம்ப-யுத்த.4019)**

என்னும் பாடலில் அறியலாம்.

பிரம்மாவாகிய தனக்கும், சிவனுக்கும், தேவர்களுக்கும், அரசனான இந்திரனுக்கும், பல சிறந்த முனிவர்களுக்கும், உயிருள்ள எல்லாவற்றிறகும் பரம்பொருள் என்பதை அறிந்தவர்கள் பாவ, புண்ணிய வினைகளிலிருந்து விடுபட்டு முக்தி அடைய முடியும்.

தத்துவங்களை எல்லாம் ஆராய்ந்து அறிந்து அவற்றிற்கு மேலே நிற்கின்றார் இராமனாகிய திருமால். பரம்பொருளுக்கு மேல்வேறு எதுவும் இல்லை. இதற்குச் சான்றோர்கள் சாட்சி. திருமாலின் கருணையை அறியாதவர்களுக்கு ஐம்பொறிகள் இருந்தும் பயனில்லை. ஐம்பொறிகளை வெல்ல வேண்டும் என்றால் அவனைச் சரணடைய வேண்டும்.

பிரம்மாவாக உருவங்கொண்டு படைத்தல் தொழிலையும், திருமாலாக உருவம் கொண்டு காத்தல் தொழிலையும், சிவனாக உருவம் கொண்டு அழித்தல் தொழிலையும் செய்கின்றார். இது சூரியன் எல்லோருடைய

கண்களிலும் தோன்றல், ஒளிபரப்புதல், மறைதல் ஆகிய மூன்று தொழில்களையும் செய்வது போன்றுள்ளது என்கின்றான்.

இதனை,

**“மூவேழ் உலகமும் உலகினுள் மண்பலும்**

**மாயோய் நின்வயிற் பரந்தவை உரைத்தே”[9]**

என்னும் பாடல் சுட்டுகிறது.

திருமாலின் தொப்புளிலிருந்து தோன்றிய பிரம்மன், இராமன் ஆதியாகி முழுமுதற்கடவுள் என்கின்றான். மூவுலகத்திற்குத் தாயான சீதை மார்பில் வாசம் செய்வது,திருமகள் ‘மதி’ தேவியாகக் காட்சியளிப்பதாக வாழ்த்துகின்றான்.

**கருடன்**

கருடன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது.

கருடன் இராமனைத் தந்தை என்று அழைக்கின்றான். திருமாலே இராமனாக இங்குத் தோன்றியுள்ளார். இவ்வுலகில் மானிடனாகப் பிறந்து திருமாலை நினைக்கும் அடியார்க்கும் துன்பங்களை நீக்குபவன். அவர் ஒருவரே செயற்கரிய செயல்களைச் செய்து எண்ணிலடங்காத அற்புதங்களை நடத்துபவர். உலகம் தோன்றும் போது ஆலிலையில் பள்ளி கொண்டு ஈரேழ் உலகங்களையும் தன் வயிற்றில் அடக்கிக் கொள்கிறான். உலகத்து உயிர்கள் பெறமுடியாத இன்பத்தைத் திருமால் ஒருவரால் மட்டுமே பெறமுடியும் என்பதை

**“தம் தாதை தாதை இறவைா! பிறந்து விளையாடுகின்ற தனியோய்**

**சிந்தாகுலங்கள் களைவாய்! தளர்ந்து துயர் கூரல் என்ன செயலோ”**

**(கம்ப.யுத்த.-2202)**

**“தேவாதிதேவர் பலராலும் முந்தி திருநாமம் ஓது செயலோய்**

**மூவாது எந்நாளும் உலகு ஏழோடு ஏழும் அரசாளும் மேன்மை முதல்வா"**

**(கம்ப.யுத்த.2203)**

இப்பாடல்களில் சுட்டியுள்ளார். கருடன் திருமாலாகிய இராமன் அண்டத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் வாழ்நாட்களை அளிக்கின்றாய். உயிர்களின் வினைகளுக்கு ஏற்ப வாழ்நாள் அமைகின்றது. தனக்கென்று எதையும் விரும்பாமல் தன் அடியார்களின் ஆசைகளை நிறைவேற்றுபவன். உயிராகவும் கடலாகவும் இருக்கின்றாய் ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும் பல உருவங்களில் காட்சியளிக்கினறாய் என்பதை

**"ஊண்ஆய் உயிர்க்கும் உயிர்ஆகிநிற்றி உணர்வுஆய பெண்ணின்**

**உருஆய்**

**ஆண்ஆகி மற்றும் அலிஆதி - ஆர் இவ் அதிரேக மாயை அறிவார்"**

**(கம்ப.யுத்த-2206)**

என்றும்,

கருடன் திருமாலுக்கு ஊர்தியாகவும், கொடியாகவும் இருப்பவன் என்பதை,

**"ஆனையின் துயரம் தீரப்புள் ஊர்ந்து**

**சென்று நின்றொழி தொட்டானை"[10] (பெரியதிருமொழி:2:3:9)**

என்ற அடிகளில் மூலம் விளக்குகின்றார்.

**இராமஅவதாரம்**

பிறவி என்ற நோயைப் போக்குபவன். இராம அவதாரத்தின் நோக்கம் அரக்கர்களை அழிப்பதாகும். இத்தன்மை உடையவர் என்று யாராலும் உறுதியிட்டுக் கூறமுடியாது. உலகில் அறத்தையும் தர்மத்தையும் நிலைநாட்ட மனிதனாக அவதாரம் எடுத்துள்ளதை,

**“பிறந்தாயு ஒத்தி, பிறவாயும் ஒத்தி பிறவாமல் நல்கு பெரியோய்**

**அறம்தான் நிறுத்தல் அரிதுஆக! ஆர் இவ்”**

**(கம்ப.யுத்த.-2210)**

எனும் பாடல்களில சுட்டியுள்ளார். பாவ புண்ணியங்களின் வினைகளுக்கு ஏற்ப பிறப்புத் தோன்றுகிறது. திருமாலின் திருநாமங்களைத் தியானம் செய்பவர்களுக்குப் பாவ, புண்ணியங்கள் அகன்று வீடுபேறு கிடைக்கின்றது என்று இயம்புகின்றான்.

**மக்கள் கூற்று**

அயோத்தி மக்கள் இராமன், இலக்குமணன் பயிற்சி பெற்றுத் திரும்புகையில் அவர்களைக் கண்டு மகிழ்வதை,

**“கடல் கருமுகில் ஒளிர் கமலம் அது அலரா**

**வடவரையுடன் வருசெயல் என மறையுல்**

**தடவுதல் அறிவு அரு தனி முதலவனும்**

**யுடை வரும் இளவலும் என நிகர் புதல்வார்”**

**(கம்ப.பால.113)**

எனும் பாடல் சுட்டுகின்றது. இராமன் வேதங்களால் ஆராய்ந்து அறியமுடியாதவன். அருமையான முதல்வன். கடல், கருமேக நிறமுடையவன். வடக்கிலுள்ள மேருமலை போன்று இராமனும் இலக்குவனும், இணைந்து வருவதைக் கண்டு அயோத்தி மக்கள் மகிழ்ந்ததை,

நீலநிறத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

**நீல்நிற உருவின் நெடியோன்”**[11] **(பெரும்பாண்.402)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

மனிதருள் சிறந்த இராமனாகிய திருமால் கருணையாலும், வேதங்களாலும் அறியப்படாதவன் அயோத்தி மக்கள் இராமனைக் கண்டதும், காரணம் எதுவும் இல்லாமல் கண்களில் கண்ணீர் பெருக்கியதை,

**“வாரணம் அரற்ற வந்து கரா உயிர் மாற்றும் நேமி**

**நாரணன் கருணை ஒக்கும்” (கம்ப.அயோத்தி-277)**

அயோத்தி மக்களின் ஆனந்தத்தை வெளிப்படுத்துகின்றனர். இவரின் வடிவமும் உலகங்களை எல்லாம் தன் வாயில் அடக்கி வைத்திருந்த திருமாலினுடைய மணிகளால் ஜொலிக்கும் உதரத்தை ஒத்திருந்தது.

**தாமரை**

பெண்கள் இராமனுடைய பட்டாபிஷேகத்தைக் காணவந்தனர். அவ்வாறு வந்த பெண்களின் கண்கள் மலர்வதற்கு முன்னரே தாமரை மலர்கள் மலர்ந்ததை

**“காவல் மாமுடி சூடு போர் எழில் காணலாம் எனும் ஆசைகூர்**

**பாவை மார்முகம் முன்னம் மலர்ந்த பங்கயராசியே”**

**(கம்ப.அயோத்தி-50)**

எனும் அடிகளில் குறிப்பிட்டுள்ளார்.

மக்கள் இராமனைத் திருமாலாகக் கண்ட காட்சியை விளக்குகின்றார். தயரதன் புதல்வனான இராமனாகிய திருமாலை உருவங்களுக்கு எல்லாம் நாயகன், தாமரைக கண்ணன், தாமரை மலர் போன்ற கண் படைத்தவன் என்கிறார்.

**“புயல் இவன் மேனி என்பார், பூவையே பொருவும் என்பார்**

**கயல் பொரு கடலுள் வைகும் கடவுளே காணும் என்பார்” (கம்ப.பால-790)**

எனும் அடியில் இராமனைத் திருமாலாகக் காண்கின்றனர்.

இதனையே சிலப்பதிகாரம்,

**"கரியவனைக் காணாத கண் என்ன கண்ணோ?"[12] (சிலம்பு.17:36:4)**

என்று திருமாலின் கண்ணினைப் பற்றிக் கூறுகின்றது.

**பாற்கடல்**

இராமன் சிவதனுசை வளைத்ததைக் கண்ட தோழிகள் சீதையிடம்

**"அரா-அணை அமலன் என்று அயிர்க்கும் ஆற்றலான்**

**இராமன் என்பது பெயர் ... " (கம்ப.பால.-32)**

என இராமனை சுட்டுகிறாள் ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்ட எம்பெருமானே அவதரித்து வந்துள்ளான் என்று வியக்கும் அளவிற்கு ஆற்றல் படைத்தவன். இராமன் திருமாலாகக் காட்சி தருகின்றான் என்று தோழி கூறுகின்றாள்.

இராமன் சீதா திருமண வைபவம் காண வந்த எல்லோரும் மண்டபத்தினுள் அடங்கியிருந்தனர். இதனைக் கண்டவர்கள்,

**"... வானும் வாய்மடுத்து**

**உண்டவன் மணியணி யுகர மொத்ததே" (கம்ப.பால.1289)**

எனச் சுட்டினர். வானிலுள்ள உலகங்களை எல்லாம் தன் வாயில் அடக்கி வைத்திருந்த திருமாலினுடைய மணிகளால் ஒளிரும் உதரத்தை ஒத்திருந்தது. இவ்வாறு இராமனைத் திருமாலாகக் கண்ட மக்களின் கூற்றுக்கள் பலவாக இருந்தன.

**அகத்தியர்**

இராமாயணத்தில் அகத்தியர் ஒப்பற்ற தவ ஆற்றலால் சிறந்து அவர் ஈசனுக்கு நிகரானவராக இடம் பெற்றவர். அகத்தியர் சித்தர்களுக்கும் முதன்மையானவர். தமிழ் உலகத்தின் அருந்தவப்பயன். பொதிகை முனி

என்றும், அகமாகிய மனத்தின் உள்ளே ஈசனைக் கண்டதால் அகத்தியர் என்றும் அழைக்கப்படுகிறார். தவ ஆற்றலில் சிறந்தவர் ஈசனுக்கு நிகரானவர். இவரைப்பற்றி தமிழிலும், வடமொழியிலும் புராணக்கதைகள் பல உள்ளன.

இராமன் வனவாசம் சென்றபொழுது அகத்தியர் இராமனைச் சந்தித்து மந்திர பலமிக்க ஆயுதங்களை அருளினார். சிவபிரான் தமிழை அகத்தியருக்குக் கற்பித்து, அம்மொழியை வளர்க்கவும், அம்மொழிக்கு இலக்கணம் வகுக்கவும், தென்னகம் அனுப்பி வைத்தார். இவர் இயல், இசை, கூத்து என முத்தமிழ் வித்தகர்.

சுந்தன் அகத்தியரின் சோலைக்குள் இருந்த மரத்தை அழித்ததால், முனிவர் கோபம் கொண்டு எரித்துச் சாம்பலாக்கினார். இதனால் கோபம் கொண்ட சுந்தனின் மனைவி, மக்கள் அகத்திய முனிவரைத் தாக்க வந்தனர். அழிவன செய்தலால் அரக்கர் ஆகுக எனச் சாபம் இட்டார். அவர்களே தடாகையும், சுபாகுவும் மாரீசனுமாவர்.

**சிறப்பு**

தேவலோகத்தில் இருப்பவாகள், பூலோகத்தில் இருப்பவாகள் மற்றும் பாதாளம் போன்ற ஏனைய உலகங்களிலும் இருப்பவர்கள், வேதங்களைக் கற்றவர்கள் தங்களது உள்ளங்களில் இருக்கும் எம்பெருமான் இராமனைக் காணப் போவதை எண்ணி ஆனந்தமடைவதை

**“விண்ணினில் நிலத்தில், விகற்ப உலகில் பேர்**

**எண்ணினில் இருக்கினில் இருக்கும் என யாரும்”**

**(ஆரணிய.அகத்தியப்படலம்:42)**

என்கிறார்.

வேதங்கள் அனைத்தையும் அம்மியால் அரைத்து அறிவது போல் ஆராயந்து அறிந்து வைத்திருந்தவர். இராமனைக் காணப் போவதை எண்ணித்

தனது அறிவால் மகிழ்கிறார். உடலால் அடையும் மகிழ்ச்சியைக் காட்டிலும், அறிவால் அடையும் மகிழ்ச்சி அளவில்லாதது என்பதை

**"அரைத்தும், அயனாலும் அறியாத பொருள் நேர் நின்ற**

**உரைக்கும் உதவுமால் எனும் உணர்ச்சியின் உவப்பான்"**

**(ஆரணி.அகத்தியப்படலம்:43)**

என்னும் பாடல் சுட்டுகிறது. இராமனைத் திருமாலாகக் காண்கின்றார் அகத்தியர்.

**இராவணன்**

இராவணன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டள்ளது. இராவணன் திருமாலைப் பற்றிக் கூறும் பொழுது அவர் வலிமை மிக்கவர். ஆயிரம் தோள்களும், ஆயிரம் தலைகளும், ஆயிரம் கண்களும், ஆயிரம் கைகளும் உடையவர். பூமியை உளளடக்கி மாவுருவம் கொண்டிருப்பவர் மனிதனாகத் தோன்றியுள்ளான் என்கின்றான்.

**சிறப்பு**

இராவணன் தன் மாநகரான இலங்கைக்குள் புகுந்த வானரங்களைக் காண்கின்றான். இராமனை முதன்முதலாக இராவணன் நிமிர்ந்த கண்கொண்டு காண்பதை

**"ஆரணத்தை அமுதை அம்முறை தேரும்**

**காரணத்தை நிமிர் கண்கொடு கண்டான்"**

**(கம்ப.யுத்த17)**

என்கிறார். இராவணன் ஞானக் கண்களால் மட்டுமல்லாமல், புறக்கண்களாலும் இராமனைத் திருமாலாகக் கண்டதை,

**“மறை முதல் தனி நாயகன் வானினை மறைத்த”**

**(கம்ப.யுத்த.-100)**

என்கிறார். வேதங்களில் புகழ்ந்து கூறப்படுகின்ற தனித்தன்மை வாய்ந்த நாயகன் இராமனாகிய திருமாலே என்கின்றான்.இராவணன் - இராமன் யுத்தம் ஏற்பட்ட பொழுது இராவணனின் வரத்தையொல்லாம் வலிமையிழக்கச் செய்தவன் இவன். சிவனும் அல்லன், நான்முகனும் அல்லன். இவன் வேதங்கள் கூறும் முதற்காரணமான இராமனாகிய நாராயணனே என்பதை,

**“தவனோ என்னின் செய்து முடிக்கும் தரன் அல்லன்**

**இவனோ தான் அவவேத முதல் காரணன்! என்றாள்”**

**(கம்ப.யுத்த ̇-:134)**

எனக் குறிப்பிட்டுள்ளார். இராமனைத் திருமாலாகக் காண்பதால், திருமாலின் சக்கராயுதமும், பிரம்மாஸ்திரத்துடன் சேர்ந்து கொண்டது.

**வில்**

இராமனுடைய தூய்மையான அம்பு இராவணனின் மூன்று கோடி வாழ்நாளையும் அவன் முயற்சி செய்து பெற்ற பெருமையான தவத்தையும், பிரம்மனிடம் பெற்ற வரத்தையும் மார்பில் புகுந்து உயிரைக் குடித்ததை,

**“முக்கோடி வாழ்நாளும் முயன்றுடை பெரும் தவமும் முதல்வன்**

**முன்நாள்**

**எக்கோடி யாராரும் வெல்லப்படாய் எனக் கொடுத்த வரமும்**

**ஏனைத்” (யுத்த.இராவணன்வதைப்படலம்:196**

என்ற பாடலில் இயம்புகின்றான்.

**வசிட்டர்**

வசிட்டர் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது.சீதையை முதன் முதலாகக் கண்ட வசிட்டர் தாங்கள் செய்த தவத்தின் மகிமையால் இராமன் திருமாலாக அவதரித்து வந்துள்ளான். அவன் சங்கையும், சக்கரத்தையும் தரித்திருந்தவன். அவன் ஈடு இணையற்றவன். மும்மூர்த்திகளின் முதல்வன். அவனுக்குத் துணையானவள். செந்தாமரை மலர் மீது குடிகொண்டிருக்கும் மகாலெட்சுமியே என்பதை,

**“எங்கள் செய் தவத்தினில் இராமன என வந்தோன்**

**சங்கினொடு சக்கரமுடைத் தனி முதற்பேர்**

**அம் கண் அரசு ஆதலின், அவ்வல்லிமலர் புல்லும்,**

**மங்கை இவள் ஆம் என வசிட்டன் மகிழ்வுற்றான்”**

**(யுத்த.பால்.:32)**

என்ற பாடலில் உணர்த்துகின்றார். எல்லாருக்கும் தலைவன். திருமாலின் மார்பில் திருமகள் போல இராமனுக்குச் சீதை விளங்குபவள் என்பதை உளக்குறிப்பால் அறிந்து கொண்டார் வசிட்டர்.

**தசரதன்**

தசரதன் பற்றி முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது. இராமனுக்குப் பட்டாபிசேகம் நிகழ்வுகளைத் தெரியப்படுத்தி அவனைத் தன்மார்போடு கட்டி அணைத்துக் கொண்ட தசரதன்

**“விலங்கல் அன்ன திண் தோளையும், மெய் திரு இருக்கும்**

**அலங்கல் மார்பையும், தனது தோள், மார்பு, கொண்டு**

**அளந்தான்.” (கம்ப.அயோத்தி:-:59)**

என்ற பாடலில் அறியலாம்.

திருமாலே இராமனாக அவதாரம் எடுத்துள்ளான் என்பதை மெய்பிக்கும் வகையில் மலை போன்ற வலிமையான தோள்களையுடைய இலக்குமி வாசம் செய்யும் மார்பினைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

மக்கள் பின்பற்ற வேண்டியப் பொது அறங்களை இராமன் தான் கடைபிடித்து உலகுக்கு வழி காட்டியவன்,

**"பெருமையும் உரனும் ஆடுஉ மேன" (தொல்.பொருள்.98)**

என்று தொல்காப்பியம் சிறந்த ஆண்மகனுக்கு கூறுகின்ற இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழ்ந்தவன் இராமன்.

**இலக்குவன்**

இலக்குவன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது. இலக்குவன் இராமனாகிய திருமாலே எக்காலத்திலும் நிலைத்து நின்று உலகங்களைக் காக்கும் தெய்வம் என்பதை,

**"மாதங்கம் தின்று உய்ந்து இவ்வனத்தின் தலைவாழும்**

**பூதம் கொல்லப் பொன்றுதி என்னின் பொருள் உண்டோ"**

**(கம்ப.ஆரணி-33)**

என்கின்றான். யானைகளை உணவாக உண்ணும் காட்டில் வாழும் இப்பூதமும் கொல்ல முடியாத ஊழிகாலத்தில் அறியமுடியாத பரம்பொருளாக விளங்கும் திருமாலாகிய இராமன் இறந்து போதல் என்பது ஏற்புடையதன்று என இயம்புகின்றான்.

இலக்குவன் இரந்திரஜித்தின் மீது அம்பு எய்யும் பொழுது ஏற்பட்ட சபதம், இராமன் திருமாலே, இராமனே சிறந்த தர்ம மூர்த்தி என்பதையும் உறுதிப்படுத்துகிறது.

இராமபிரானின் இணை பிரியாத தம்பி ஆகிய இலக்குவன் எங்குச் சென்றாலும் தொடரும் நிழல் போல இராமனாகிய திருமாலுடன் இருந்து பெரும் செயல் ஆற்றினான்.

**இந்திரசித்**

உலகத்து உயிர்கள் எல்லாம் புண்ணிய பலன் பெற உதவுபவன் பாகசாதன் என்னும் இந்திரன். மேகநாதன் இந்திரசித்துவின் முதற்பெயர். இராவணன் - மண்டோதிரிக்கு மகன். அவன் பிறந்த போது மேகம் போல் முழங்கியதால் மேகநாதன் என்னும் பெயர் பெற்றிருந்தான்.

இந்திரசித்து மாவீரன். மும்மூர்த்திகளை ஒத்த வீரம் கொண்டவன். இதனை நினைத்து இராவணன் பெருமிதம் கொண்டான். அனுமன் இலங்கைக்கு வந்த போது முதலில் கும்பகர்ணனையும், இரண்டாவது விபீடணனையும், மூன்றாவதாக இந்திரசித்தையும் கண்டான். இந்திரசித்து வானில் மறைந்து போர் புரிவதில் வல்லவன்.

**சிறப்பு**

இந்திரசித்து இராமனை மானிடன் இல்லை. தேவர் இல்லை. முனிவர் இல்லை. தவம் செய்யும் ஞானிகள் உள்ளத்தில் நினைத்து நிறைந்திருக்கும் பரம்பொருள் என்று புகழ்ந்ததை

**“மானிடன் அல்லன் தொல்லை வானவன் அல்லன் மற்றும்**

**மேல் நிமிர் முனிவன் அல்லன் வீடணன் மெய்யின் சொன்ன”**

**(கம்ப.யுத்த.-13)**

என்ற கூற்றில் இராமனைத் திருமாலாகக் காண்கிறான்.

**கும்பகர்ணன்**

கும்பகர்ணன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டள்ளது.

இராமன் அரக்கர் குலத்தை அழிப்பதற்காக இராமனாகிய திருமாலாக வந்து நிற்கின்றான் என்பதை,

**“ஏற்றிய வில்லோன் யார்க்கும் இறைவன் இராமன் நின்றான்”**

**(கம்ப.யுத்த.136)**

என்னும் அடி குறிப்பிடுகின்றது.

இலங்கை நகருக்கு மீண்டும் வர வேண்டிய யுத்தம் முடிவு பெற்றது. திருமகள் தங்கியிருக்கும் மார்பை உடைய இராமன் இலங்கைக்குள் வந்தார். இங்கு இராமனைத் திருமாலாகக் காண்கின்றான் கும்பகர்ணன்.

கும்பகர்ணன் இராமானாகிய திருமாலுடன் போரிட்டுத் தோல்வியடைந்து தன் உயிர் பிரியும் நிலையில் பிறகு இராமனிடம் அரசனாக உருக்கொண்டு வந்துள்ளது எம்பெருமான் என்பதை உணர்ந்தான். தன் தம்பி விபீடணனின் பாவநெறி நீக்கி தர்மநெறியை அளித்து அடைக்கலம் கொடுக்குமாறு வேண்டியதை

**“ஆதயாய்! உனை அடைந்தான் அரசர் உருக்கொண்டு அமைந்த**

**வேதியா! இன்ன உனக்கு அடைக்கலம் யான் வேண்டினேன்”**

**(கம்ப.யுத்த-1575)**

எனும் பாடல் இயம்புகின்றது. இவ்வாறு இராமனைத் திருமாலாகக் காண்கின்றான் கும்பகர்ணன்.

**சுக்கிரீவன்**

சுக்கிரீவன் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது. சுக்கிரீவன் இராமனை முதன் முதலாகக் காணும் போது எல்லா உலகங்களுக்கும் முதல்வனான திருமால் மானிட உருவத்தில் வந்துள்ளான் என்பதை அறிந்துகொண்டான். இதனை,

**தோன்றினன் அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம் தேவர் அன்றே**

**மாறி இப்பிறப்பில் வந்தார் மானிடம் ஆகி (கம்ப.கிட்கிந்தா-100)**

எனும் பாடலில் அறியலாம். இலங்கைப் படையெடுப்பின் போது பெரும் உதவிபுரிந்தான். சில நேரங்களில் அவசரமாகச் செயல் புரிந்து பின்னர் அதற்காக வருந்தியவன். வைணவச் சான்றோர்களால் மகாராசர் எனப் போற்றப்படும் சிறப்பு சுக்கிரீவன் பெற்றான்.

**சீதை**

காப்பியம் முழுமையும் இடம்பெறும் சீதையை,

**"கற்பினுக்கு அரசினை பெண்மைக் காப்பினை**

**பொற்பினுக்கு அழகினை புகழின் வாழ்க்கையைக்**

**கற்பிரிந்து அருள்புரி தருமம் போலியை**

**அற்பின் அத்தலைவனும் அமைய நோக்கினான்"**

**(கம்ப.யுத்த.-3963)**

எனும் பாடல் மேலும் சிறப்பிக்கின்றது. சீதாப் பிராட்டியும் இராமனைத் திருமாலாகக் கொண்டு பெருமையுடன் கூறுவது மூன்று உலகங்களையும் படைத்தவன் பிரம்மன். பிரம்மாவைப்படைத்தவன் எம்பெருமானாகிய திருமாலே என இன்புறுவதை

**"மும்மை ஆம் உலாம் தந்த முதல்வற்கும் முதல்வன் தூது ஆய்,**

**செம்மையாய் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியது**

**உண்டே" (கம்ப.சுந்தர-559)**

எனும் இப்பாடலில் அறியலாம். இவ்வாறு சீதாப் பிராட்டி அனுமனிடம் பெருமையுடன் கூறுவது காணத்தக்கது. மலைமகள் கலைமகள் போன்ற பெண்

தெய்வங்களும் வணங்கும் தன்மை சீதை தன் கற்பினாலேயே பெற்றார். அத்தகைய பெருமையுடையவளாக விளங்கினாள்

**சடாயு**

சடாயு பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டள்ளது. சடாயு இராமனை மும்மூர்த்திகளின் முதல்வன் என்றும், வேறு எந்தத் தெய்வங்களுடனும் ஒப்பிட்டுக் கூறமுடியாதவன் என்று கூறுவதை

**"முத்தேவரின் மூல முதற்பொருள் ஆம்**

**அத்தேவர் இம்மானிடர் ஆதலினால்" (கம்ப.ஆரணி-911)**

என்றும்,

**"முதல் ஆவார் மூவரே அம்மூவருள்ளும்**

**முதல் ஆவான் மூரி நீர்வண்ணன் முதல் ஆய"[13]**

**(பொய்கைஆழ்வார்:2069)**

என்பதன் வழி அறியலாம். மூவரில் முதல்வராக இருப்பவர் கடல்நீர் நிறமுடைய திருமால், இவருடைய அருளே சிறந்தது. மற்றவைகள் எல்லாம் குற்றமுடையது என்கிறார்.

சடாயு இராமனைத் திருமாலாகக் காண்கிறார். திருமால் பாம்புப் படுக்கையில் கண் அயர்ந்த நிலையில் இராவணன் சீதையை வஞ்சனையால் பர்ணசாலையுடன் தூக்கிச் சென்றுவிட்டான் என்பதை,

**"பஞ்ச அணை பாம்பணை ஆகப்பள்ளி சேர்**

**அஞ்சன வண்ணனே இராமன், ஆதலால்,"**

**(கம்ப-ஆரணி-953)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது. இவ்வாறு இராமனைப் பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமாலாகக் காண்கின்றான் சடாயு.

**சூர்ப்பனகை**

சூர்ப்பனகைப் பற்றிய முன்னுரை இயல் இரண்டில் கூறப்பட்டுள்ளது. சூர்ப்பனகை குற்றமில்லாத திருநாமங்களை உடைய திருமாலின் திருவடிகளைத் தொழுதவள் தியானத்தில் இருந்த செந்தாமரை மலா் போன்ற கண்களை உடைய திருமாலாகிய இராமனைக் கண்டதை,

**"அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்**

**நிமலப்பாத நினைவின் இருந்தவக் கமலக் கண்ணணை"**

**(கம்ப.ஆரணி-382)**

என்றும்,

திருமாலின் திருவடியின் சிறப்பை,

**"நின்னிற் சிறந்த நின் தாளியனையவை"[14] (பரி:4:62)**

என்ற அடிகள் மூலமும் பரிபாடல் விளக்குகின்றது.

கற்பு நலமில்லாது, காம வெறியுடன், பொய்யும் வஞ்சகமும் கொண்டு தன் குலத்துக்கே இராமனாகிய திருமால் மீது கொண்ட காதல் மயக்கம் என்னும் பேய் காமத்தால் அழிவைத் தேடிக் கொண்டாள்.

## தொகுப்புரை

- பிரகலாதன் சிறந்த திருமால் பக்தன். இறைவன் தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான் என்ற உண்மையை மெய்பித்துக் காட்டியவன்.
- விபீடணன் அரக்கர் குலத்தில் பிறந்தவன், திருமாலே இராமனாக மானிட அவதாரம் எடுத்தான் என்பதை உணர்ந்து இராமன் மீது மாறாது அன்பு கொண்டிருந்தான்.
- வாலி வானரத்திற்குரிய அறியாமை நீங்கித் திருமாலாகிய இராமன் மூலம் வீடுபேறு அடைந்தான்.
- இரணியனின் தம்பி இரண்யாட்சன் பூமியை ஒளித்து வைத்த பொழுது வராக அவதாரம் எடுத்து அவனைக் கொன்றான். இதன் காரணமாக இரணியனுக்கும் திருமாலுக்கும் பகைமை ஏற்பட்டது.
- கவந்தன் தூலசிரசு என்னும முனிவர் சாபத்தால் அரக்கனாக வாழ்ந்து பின் இயல்புநிலை அடைந்து இராமனைத் திருமாலாகக் காண்கின்றான்.
- அனுமன் உலகங்களையெல்லாம் படைத்தவனான எம்பெருமானாகிய திருமாலுக்கு அடிமைத்தொழில் செய்தலே சிறந்த தவம் என்று எண்ணி வாழ்ந்து வந்தவன்.
- மாலியவான் இராவணனின் மூதாதையர். தேவர்களின் வேண்டுகோளை ஏற்றுத் திருமால் மாலியவானைப் பாதாளத்திற்குள் துரத்தினார்.
- பிரமனிடம் தேவர்களும், முனிவர்களும் இராவணன் கொடுமையைப் ப கூறத், தான் தவம் அளித்த காரணத்தால் திருமாலிடம் கூறினார்.
- கருடன் திருமாலுக்கு ஊர்தியாகவும், கொடியாகவும் இருப்பவன் இராமனைத் தந்தையே என்று அழைப்பவன்.
- இராமன் வனவாசம் சென்றபொழுது அகத்தியரைச் சந்தித்து மந்திரமிக்க ஆயுதங்களை வழங்கியவர்.

- இராவணன் மூன்று கோடி வாழ்நாளையும், அவன் முயற்சி செய்து பெற்ற தவத்தையும் இராமனுடைய அம்பு மாய்த்தது.
- சீதை செந்தாமரை மலர் குடிகொண்டிருக்கும் இராமனாகிய திருமாலின் மார்பில் குடிகொண்டிருக்கும் திருமகள் போலக் காட்சியளிக்கின்றாள்.
- கும்பகர்ணன் இராமன் திருமாலாக மானிட அவதாரம் கொண்டு அரக்கர் குலத்தை அழிக்கப் பிறந்தவன் என்பதை அறிந்தவன்.
- சடாயு இராமனை மும்மூர்த்திகளின் முதல்வன் என்றும் வேறு எந்த தெய்வத்துடனும் ஒப்பிட்டுக் கூறமுடியாதவன் என்றும் கூறுகின்றார்.

**சான்றெண் விளக்கம்**

1. வரலாற்றில் பிறந்த வைணவம் ப.318
2. பரிபாடல் - 14
3. திருக்குறள் - 691
4. பரிபாடல்:4.10-11
5. நம்மாழ்வார் பாசுரம்:3177
6. பரிபாடல்:13
7. சிலப்பதிகாரம்:14:46:27
8. சிலப்பதிகாரம்:14:49-50
9. பெரிய திருமொழி:2:3:9
10. பெரும்பாணாற்றுப்படை:402
11. தொல்காப்பியம், பொருள்:98
12. .சிலப்பதிகாரம் (17:36:4)
13. பொய்கை ஆழ்வார் பாசுரம்:2069
14. பரிபாடல்:4:62

## முடிவுரை

- ❖ தமிழச் சான்றோர்கள் தங்கள் சமயங்களைக் கருவியாகக் கொண்டு தமிழ்மொழியின் மேன்மை உணர்த்திடக் கருதினர். அதில் சைவமும் வைணமும் முதன்மையாக இருந்தன.
- ❖ மக்கள் தாம் உண்பதற்குப் உடுப்பதற்கும் காரணமான மூலப்பொருள் யாது என்பதைச் சிந்தித்து வந்தனர். இச்சிந்தனையின் பயனாக அவரவர்க்குத் தோன்றிய கருத்துகளே வடிவம் பெற்று சமயம் என அழைக்கப்பெற்றது.
- ❖ ஒவ்வொரு காலகட்டத்திலும் சில சமயங்கள் சிறப்புப் பெற்று விளங்கின.
- ❖ உலகில் பல சமயங்கள் தோன்றியுள்ளன தென்னகத்தில் தோன்றி வளர்ந்த தலைசிறந்த சமயங்கள் சைவமும் வைணவமும் ஆகும்.
- ❖ சைவ, வைணவ சமயங்களின் விளக்கம் தொல்காப்பியம் இலக்கியங்கள், அறிஞர்களின் கருத்துக்கள் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன.
- ❖ தமிழ்நாட்டில் சமயம் வாழ்வோடு இணைக்கபட்டுள்ளது.தமிழர்கள் அனைத்து இடங்களிலும் சமயம் கண்டவர்கள். ஆகவே அனைத்து நூல்களிலும் சமயப்பார்வையைக் காணலாம்.
- ❖ கொள்கையைக் குறிக்கோளாகக் கொண்ட மதங்கள் ஓவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தோன்றின எனலாம்.
- ❖ மதம் உயிர்களைப் படிப்படியாக முன்னேற்றம் பெறச்செய்யும் தன்மை கொண்டது. மனிதனின் பல்வேறு பருவங்களில் பல்வேறான எண்ண உணர்வுகள் தோன்றுகின்றன. அவற்றை மதங்கள் செம்மைப்படுத்துகின்றன.
- ❖ உயிர்கள் நாள்தோறும் உண்ணுவது, உறங்குவது, எழுவது, புதிய உணர்வுகளைப் பெறுவதென இயங்கிக் கொண்டுள்ளன. இவர்கள் இறையுணர்வோடு உலகியலில் ஈடுபடுவர்களைப் பக்தர்கள் என்றும் அழைத்தனர்.

- ❖ தீமை தரும் எண்ணங்களைத் தவிர்த்துப் புதிய சமுதாயத்தை உருவாக்க வலியுறுத்துவது உலகளாவிய சிந்தனைக்கும் நல்வாழ்வுக்கும் சமயங்கள் வழிகாட்டுகிறது.
- ❖ சிவன் முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் பதினெண்கணங்களுக்கும் தலைமைடைய கடவுள் சிவன்.
- ❖ சிந்துவெளிப் பண்பாடு முதல சிவபெருமானை முழுமுதற்கடவுளாக வழிபட்டு வந்தனர்.
- ❖ சைவசமயக் கடவுளான சிவனின் தோற்றம், படைக்கலன்கள், வாகனங்கள், அடையாளச்சின்னங்கள் போன்றவை கூறப்பெற்றுள்ளன.
- ❖ சிவன் தன் திருமேனிக்குச் சிறப்பு செய்யும் வகையில் சந்திரனைச் சூடி அடைக்கலம் அளித்தான் என்பதை அறியலாம்.
- ❖ சிவன் தன்னை அழிக்க வந்த உயிர்களை அழித்து, அவைகளின் தோலைக் கொண்டு அலங்கரித்துக் கொள்வான். புலியின் தோலைத் தன் உடலை மறைக்கும் உடையாகக் கொண்டார்.
- ❖ சிவன் தேவர்களைக் காக்கும் பொருட்டுப் பாற்கடலில் தோன்றிய நஞ்சைத் தான் உண்டு அடியவர்களுக்கு நீண்ட நாள் வாழ அமுதம் நல்கினார் என்பதை உணரலாம்.
- ❖ சிவன் தவிர உலகத்து உயிர்கள் எல்லாம் ஒடுங்கும் இடம் நன்காடு ஆகும்.அவன் ஆனந்தத் தாண்டவம் ஆடும் இடம் நன்காடு ஆகும். அவன் ஆடாவிட்டால் ஓர் அணுவும் அசையாது என்பது சைவ சமய நம்பிக்கையாகும்.
- ❖ சிவன் உயிர்களின் அகந்தையையும் ஆணவத்தையும் போக்கித் தீமைகளை அழித்து நன்மை செய்பவன்.
- ❖ இராமாயணத்தில் பெருவீரர்களாகத் திகழும் இராவணனும் வாலியும் சிறந்த சிவபக்தர்கள் ஆவர்.

- ❖ சொல்லின் செல்வனாகிய அனுமானும் சிவனுடைய அம்சமாக இவ்வுலகில் தோன்றியவன்.
- ❖ இலக்குவன் இந்திரசித்து மார்பில் அம்பினைச் செலுத்தியதையும், சிவபெருமான் திரிபுரத்தை அழித்தச் காட்சியையும் உவமையாகக் கூறியுள்ளார்.
- ❖ இந்து சமயத்தின் அறுவகைச் சமயங்களுள் விசுணுவை முதன்மையாகக் கொண்டு வழிபடக்கூடியது வைணவம் ஆகும்.
- ❖ சான்றோர்கள் விசுணுவைத் திருமால் என்று அழைத்தார்கள். வைணவர்கள் 'திரு' என்பது இலக்குமியையும், 'மால்' என்பது இறைவனையும் குறித்துத் திருமகளுடன் இணைந்த இறைவன் என்பதனை திருமால் என்கின்றனர்
- ❖ திருமால் வழிபாட்டின் தொன்மையையும், சுற்றத்தாரோடு சேர்ந்து வணங்கும் முறைமையையும், கூட்டுவழிபாட்டின் சிறப்பினையும் இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது.
- ❖ முழுமுதற்கடவுளான திருமாலின் பல்வேறு அவதாரங்களின் வழிபாட்டினைச் சுற்றியே வைணவசமயம் சுழல்கின்றது. இப்பதிவுகள் கம்பராமாயணம் முழுமையும் விரிவாக்கின்றன.
- ❖ வைணவத்தை மேன்மைபடுத்தவும் சைவத்தைத் துணைச் சான்றுகளாக கொண்டிருக்கின்றனர்.
- ❖ சிவன் பக்தர்களான இராவணனும் அவனைச் சார்ந்தவர்களும் படைக்கப்பட்டிருப்பதன் நோக்கம் சைவத்தின் வழி வைணத்தை உணர்த்தும் கருத்தும் புலப்பாட்டு உத்தியாகக் காணபபடுகின்றது.
- ❖ கம்பராமாயணம் படைக்கப்பட்ட காலத்தைத் துல்லியமாக இதுகாறும் சுட்ட இயலவில்லை. வால்மீகி இராமாயணத்தை உள்வாங்கி கொண்டு தமிழ் மரபு பண்பாட்டிற்கேற்ப, இராமாயணத்தைப் படைத்த கம்பர் தம் காலத்தில் இருந்த சைவசமயத்தைப பாடுமுகமாகவும் சமயநல்லிணக்க நோக்கிலும் வெளிப்படுத்துகிறார்.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


வை.மு.கோபாலகிருசுணமாச்சாரியார் — உமாபதிப்பகம்
171, பவளக்காரத்தெரு,
மண்ணடி, சென்னை-600 001

கழக வெளியீடு — கம்பராமாயணம்,
இராமஅவதாரம்,
சென்னை.


### துணைமைச்சான்றாதாரங்கள்


கௌமாரீசுவரி. — பதினெண்கீழ்கணக்கு நூல்கள்
மூலமும் உரையும்,
சாரதா பதிப்பகம்,
ஜி-4 சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
இராயப்பேட்டை,
சென்னை -600 014.

இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம்
கழக வெளியீடு
சென்னை-1979.

எத்திராசன் — ஆழ்வார்கள் வரலாறு,
அலமேலு பதிப்பகம்,
காரைக்குடி - 20,
1998.

சத்தியலிங்கம்.டி.பி — சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்,
முல்லை நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு.

சிங்கார வடிவேலன்.அர — ஐங்குறுநூறு,
கோவிலூர் மடலாயம்
கோவிலூர்-630 307.
ஏப்ரல் - 2003

சிவஞானம்.மா.பொ — கம்பரின் சமயக்கொள்கை,
செய் கணேசு பதிப்பகம்,
சென்னை-4

சிவகாமி.ச — அனுமன் ஆய்வும் வழிபாடும்,
கங்கை முதற்பதிப்பு,
13, தீனதயாளு தெரு,
தியாகராயர் தெரு,
சென்னை-600 017.

சீத்தலைச்சாத்தனார் — மணிமேகலை,
கழக வெளியீடு,
சென்னை.
பதிப்பு-1995.

சுப்பிரமணியன்.ச.வே — தொல்காப்பியம்,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,சென்னை – 600 018

சுப்பிரமணியன்.ச.வே. சங்கஇலக்கியம்,
பத்துப்பாட்டு,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை.

சுப்பிரமணியன்.ந பரிபாடல் மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 600 098
ஐந்தாம் பதிப்பு -2014.

சுப்புரெட்டியார் சைவமும் தமிழும்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசிந்தாந்த கழகம்,
522, டி.டி.கே.சாலை,
சென்னை-600 018.

சேக்கிழார் பெரியபுராணம்,
குமரகுருபரன் சங்கம்,
சிரிவைகுண்டம்.

திருத்தக்கத்தேவர் சீவகசிந்தாமணி,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு-1942.

திருமூலர் திருமந்திரம்,
சைவசிந்தாந்த நூற்பதிப்புக்
கழகம்.
முதற்பதிப்பு – 2006

திருவள்ளுவர் — திருக்குறள் (பரிமேலழகர் உரை), பாரதி பதிப்பகம். சென்னை, முதற்பதிப்பு-1961

திருத்தக்கதேவர் — சீவகசிந்தாமணி, சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 600 018

திருவேங்கட இராமானுசன் — நாலாயிரம் திவ்வியப்பிரபந்தம், உமாபதிப்பகம், சென்னை-1.

நச்சினார்க்கினியர் — கலித்தொகை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசிந்தா நூற்பதிப்புக் கழகம் லிட் 522, டி.டி.கே. சாலை, ஆள்வார் பேட்டை, சென்னை – 18.

பாலசுப்பிரமணியன் — புறநானூறு நியுசெஞ்சுரி புக் கவுஸ்(பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்துார், சென்னை – 600 0098, ஐந்தாம் பதிப்பு -2014

வச்சிரவேல்முதலியார் சைவமும் வைணமும்
காஞ்சிபுரம்
முதற்பதிப்பு-1969.

**ஆங்கில நூல்கள்**

1. Tiruvasakam Reprint 1959
2. SriJohn Marshall Mohenjandro and Indus Civilzation val I 1931

# கம்பராமாயணத்தில் சைவ வைணவப் பதிவுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**கு.அனுசுயாதேவி**
பதிவு எண் : 1195

**நெறியாளர்**

**முனைவர் சே.கணேசன்**





.


**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


ஆகஸ்டு - 2020

## தொகுப்புரை

- பிரகலாதன் சிறந்த திருமால் பக்தன். இறைவன் தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான் என்ற உண்மையை மெய்பித்துக் காட்டியவன்.
- விபீடணன் அரக்கர் குலத்தில் பிறந்தவன், திருமாலே இராமனாக மானிட அவதாரம் எடுத்தான் என்பதை உணர்ந்து இராமன் மீது மாறாது அன்பு கொண்டிருந்தான்.
- வாலி வானரத்திற்குரிய அறியாமை நீங்கித் திருமாலாகிய இராமன் மூலம் வீடுபேறு அடைந்தான்.
- இரணியனின் தம்பி இரண்யாட்சன் பூமியை ஒளித்து வைத்த பொழுது வராக அவதாரம் எடுத்து அவனைக் கொன்றான். இதன் காரணமாக இரணியனுக்கும் திருமாலுக்கும் பகைமை ஏற்பட்டது.
- கவந்தன் தூலசிரசு என்னும முனிவர் சாபத்தால் அரக்கனாக வாழ்ந்து பின் இயல்புநிலை அடைந்து இராமனைத் திருமாலாகக் காண்கின்றான்.
- அனுமன் உலகங்களையெல்லாம் படைத்தவனான எம்பெருமானாகிய திருமாலுக்கு அடிமைத்தொழில் செய்தலே சிறந்த தவம் என்று எண்ணி வாழ்ந்து வந்தவன்.
- மாலியவான் இராவணனின் மூதாதையர். தேவர்களின் வேண்டுகோளை ஏற்றுத் திருமால் மாலியவானைப் பாதாளத்திற்குள் துரத்தினார்.
- பிரமனிடம் தேவர்களும், முனிவர்களும் இராவணன் கொடுமையைப் ப கூறத், தான் தவம் அளித்த காரணத்தால் திருமாலிடம் கூறினார்.
- கருடன் திருமாலுக்கு ஊர்தியாகவும், கொடியாகவும் இருப்பவன் இராமனைத் தந்தையே என்று அழைப்பவன்.
- இராமன் வனவாசம் சென்றபொழுது அகத்தியரைச் சந்தித்து மந்திரமிக்க ஆயுதங்களை வழங்கியவர்.

- இராவணன் மூன்று கோடி வாழ்நாளையும், அவன் முயற்சி செய்து பெற்ற தவத்தையும் இராமனுடைய அம்பு மாய்த்தது.
- சீதை செந்தாமரை மலர் குடிகொண்டிருக்கும் இராமனாகிய திருமாலின் மார்பில் குடிகொண்டிருக்கும் திருமகள் போலக் காட்சியளிக்கின்றாள்.
- கும்பகர்ணன் இராமன் திருமாலாக மானிட அவதாரம் கொண்டு அரக்கர் குலத்தை அழிக்கப் பிறந்தவன் என்பதை அறிந்தவன்.
- சடாயு இராமனை மும்மூர்த்திகளின் முதல்வன் என்றும் வேறு எந்த தெய்வத்துடனும் ஒப்பிட்டுக் கூறமுடியாதவன் என்றும் கூறுகின்றார்.

## சான்றெண் விளக்கம்

1. வரலாற்றில் பிறந்த வைணவம் ப.318
2. பரிபாடல் - 14
3. திருக்குறள் - 691
4. பரிபாடல்:4.10-11
5. நம்மாழ்வார் பாசுரம்:3177
6. பரிபாடல்:13
7. சிலப்பதிகாரம்:14:46:27
8. சிலப்பதிகாரம்:14:49-50
9. பெரிய திருமொழி:2:3:9
10. பெரும்பாணாற்றுப்படை:402
11. தொல்காப்பியம், பொருள்:98
12. .சிலப்பதிகாரம் (17:36:4)
13. பொய்கை ஆழ்வார் பாசுரம்:2069
14. பரிபாடல்:4:62

## முடிவுரை

- தமிழச் சான்றோர்கள் தங்கள் சமயங்களைக் கருவியாகக் கொண்டு தமிழ்மொழியின் மேன்மை உணர்த்திடக் கருதினர். அதில் சைவமும் வைணமும் முதன்மையாக இருந்தன.

- மக்கள் தாம் உண்பதற்குப் உடுப்பதற்கும் காரணமான மூலப்பொருள் யாது என்பதைச் சிந்தித்து வந்தனர். இச்சிந்தனையின் பயனாக அவரவர்க்குத் தோன்றிய கருத்துகளே வடிவம் பெற்று சமயம் என அழைக்கப்பெற்றது.

- ஒவ்வொரு காலகட்டத்திலும் சில சமயங்கள் சிறப்புப் பெற்று விளங்கின.

- உலகில் பல சமயங்கள் தோன்றியுள்ளன தென்னகத்தில் தோன்றி வளர்ந்த தலைசிறந்த சமயங்கள் சைவமும் வைணவமும் ஆகும்.

- சைவ, வைணவ சமயங்களின் விளக்கம் தொல்காப்பியம் இலக்கியங்கள், அறிஞர்களின் கருத்துக்கள் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன.

- தமிழ்நாட்டில் சமயம் வாழ்வோடு இணைக்கபட்டுள்ளது.தமிழர்கள் அனைத்து இடங்களிலும் சமயம் கண்டவர்கள். ஆகவே அனைத்து நூல்களிலும் சமயப்பார்வையைக் காணலாம்.

- கொள்கையைக் குறிக்கோளாகக் கொண்ட மதங்கள் ஓவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தோன்றின எனலாம்.

- மதம் உயிர்களைப் படிப்படியாக முன்னேற்றம் பெறச்செய்யும் தன்மை கொண்டது. மனிதனின் பல்வேறு பருவங்களில் பல்வேறான எண்ண உணர்வுகள் தோன்றுகின்றன. அவற்றை மதங்கள் செம்மைப்படுத்துகின்றன.

- உயிர்கள் நாள்தோறும் உண்ணுவது, உறங்குவது, எழுவது, புதிய உணர்வுகளைப் பெறுவதென இயங்கிக் கொண்டுள்ளன. இவர்கள் இறையுணர்வோடு உலகியலில் ஈடுபடுவர்களைப் பக்தர்கள் என்றும் அழைத்தனர்.

- தீமை தரும் எண்ணங்களைத் தவிர்த்துப் புதிய சமுதாயத்தை உருவாக்க வலியுறுத்துவது உலகளாவிய சிந்தனைக்கும் நல்வாழ்வுக்கும் சமயங்கள் வழிகாட்டுகிறது.

- சிவன் முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் பதினெண்கணங்களுக்கும் தலைமைடைய கடவுள் சிவன்.

- சிந்துவெளிப் பண்பாடு முதல சிவபெருமானை முழுமுதற்கடவுளாக வழிபட்டு வந்தனர்.

- சைவசமயக் கடவுளான சிவனின் தோற்றம், படைக்கலன்கள், வாகனங்கள், அடையாளச்சின்னங்கள் போன்றவை கூறப்பெற்றுள்ளன.

- சிவன் தன் திருமேனிக்குச் சிறப்பு செய்யும் வகையில் சந்திரனைச் சூடி அடைக்கலம் அளித்தான் என்பதை அறியலாம்.

- சிவன் தன்னை அழிக்க வந்த உயிர்களை அழித்து, அவைகளின் தோலைக் கொண்டு அலங்கரித்துக் கொள்வான். புலியின் தோலைத் தன் உடலை மறைக்கும் உடையாகக் கொண்டார்.

- சிவன் தேவர்களைக் காக்கும் பொருட்டுப் பாற்கடலில் தோன்றிய நஞ்சைத் தான் உண்டு அடியவர்களுக்கு நீண்ட நாள் வாழ அமுதம் நல்கினார் என்பதை உணரலாம்.

- சிவன் தவிர உலகத்து உயிர்கள் எல்லாம் ஒடுங்கும் இடம் நன்காடு ஆகும்.அவன் ஆனந்தத் தாண்டவம் ஆடும் இடம் நன்காடு ஆகும். அவன் ஆடாவிட்டால் ஓர் அணுவும் அசையாது என்பது சைவ சமய நம்பிக்கையாகும்.

- சிவன் உயிர்களின் அகந்தையையும் ஆணவத்தையும் போக்கித் தீமைகளை அழித்து நன்மை செய்பவன்.

- இராமாயணத்தில் பெருவீரர்களாகத் திகழும் இராவணனும் வாலியும் சிறந்த சிவபக்தர்கள் ஆவர்.

- சொல்லின் செல்வனாகிய அனுமானும் சிவனுடைய அம்சமாக இவ்வுலகில் தோன்றியவன்.

- இலக்குவன் இந்திரசித்து மார்பில் அம்பினைச் செலுத்தியதையும், சிவபெருமான் திரிபுரத்தை அழித்தச் காட்சியையும் உவமையாகக் கூறியுள்ளார்.

- இந்து சமயத்தின் அறுவகைச் சமயங்களுள் விசுணுவை முதன்மையாகக் கொண்டு வழிபடக்கூடியது வைணவம் ஆகும்.

- சான்றோர்கள் விசுணுவைத் திருமால் என்று அழைத்தார்கள். வைணவர்கள் 'திரு' என்பது இலக்குமியையும், 'மால்' என்பது இறைவனையும் குறித்துத் திருமகளுடன் இணைந்த இறைவன் என்பதனை திருமால் என்கின்றனர்

- திருமால் வழிபாட்டின் தொன்மையையும், சுற்றத்தாரோடு சேர்ந்து வணங்கும் முறைமையையும், கூட்டுவழிபாட்டின் சிறப்பினையும் இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

- முழுமுதற்கடவுளான திருமாலின் பல்வேறு அவதாரங்களின் வழிபாட்டினைச் சுற்றியே வைணவசமயம் சுழல்கின்றது. இப்பதிவுகள் கம்பராமாயணம் முழுமையும் விரிவாக்கின்றன.

- வைணவத்தை மேன்மைபடுத்தவும் சைவத்தைத் துணைச் சான்றுகளாக கொண்டிருக்கின்றனர்.

- சிவன் பக்தர்களான இராவணனும் அவனைச் சார்ந்தவர்களும் படைக்கப்பட்டிருப்பதன் நோக்கம் சைவத்தின் வழி வைணத்தை உணர்த்தும் கருத்தும் புலப்பாட்டு உத்தியாகக் காணபபடுகின்றது.

- கம்பராமாயணம் படைக்கப்பட்ட காலத்தைத் துல்லியமாக இதுகாறும் சுட்ட இயலவில்லை. வால்மீகி இராமாயணத்தை உள்வாங்கி கொண்டு தமிழ் மரபு பண்பாட்டிற்கேற்ப, இராமாயணத்தைப் படைத்த கம்பர் தம் காலத்தில் இருந்த சைவசமயத்தைப பாடுமுகமாகவும் சமயநல்லிணக்க நோக்கிலும் வெளிப்படுத்துகிறார்.